நோக்கங்களுக்காக செலவு செய்யக் கூடும். இதன் வாயிலாக நாட்டு மற்றும் தலா வருமானம் உயரவும், வாழ்க்கை தரம் உயரவும் வாய்ப்பு ஏற்படுகிறது.

மேற்குறிப்பிடப்பட்ட காரணிகளின் விளக்கங்கள் இந்தியாவின் மக்கள்தொகை பெருக்கத்தை கட்டுப்படுத்தப்பட வேண்டிய அவசியத்தை வலியுறுத்துகிறது. மக்கள் தொகையின் அதிவேக வளர்ச்சி வீதம், பொருளாதார முன்னேற்றத்தை மிகவும் மோசமான அளவு பாதிக்கிறது. எனவே ஒரே இடத்தில் நிற்பதற்கு நாம் ஓடிக்கொண்டே இருக்க வேண்டியுள்ளது என்று சில நேரங்களில் சொல்லப்படுகிறது.

**மக்கள்தொகை வளர்ச்சியை கட்டுப்படுத்தும் வழிகள்**

**1. தம்பதிகளின் பாதுகாப்பு வீதம் (Couple Protection Rate-CPR)**

இந்த வீதத்தை அதிகரிப்பதினால், குடும்ப கட்டுப்பாட்டு முறைகளை கையாளும் தம்பதிகளின் விகிதம் அதிகரிக்க வேண்டும்.

**2. குழந்தைகள் இறப்பு வீதம் (Infant Mortality Rate-IMR)**

இவ்வீதம் மேலும் குறைக்கப்பட வேண்டும். ஏனெனில் குழந்தைகள் குறைந்த எண்ணிக்கையில் இறக்கும்போது, பொது மக்கள் சிறு குடும்ப நெறியினை பின்பற்ற ஊக்கமளிக்கும்.

**3. நாடு தொழில்மயமாதல்**

நிலத்தை சார்ந்திருக்கும் மக்கள்தொகை அழுத்தத்தை குறைக்க வேண்டும். கிராமப் புறங்களில் குடிசை மற்றும் சிறு தொழில்களை, அதிகபட்ச மக்களுக்கு வேலை வாய்ப்பளிப்பதற்காக, வளரச் செய்தல் வேண்டும். இதன் வாயிலாக மக்களின் வாழ்க்கைத் தரம் உயரும்போது அது மக்கள் தொகையை கட்டுப்படுத்தும்.

**4. பெண்களின் எழுத்தறிவு வீதம் மற்றும் கல்வியை அதிகரித்தல்**

கல்வி கற்ற மக்களுக்கு தங்களுடைய குடும்ப அளவினைப் பற்றி அதிகப் பொறுப்பு வாய்ந்த கண்ணோட்டத்தைப் பெற்றுள்ளனர். அவர்கள் சிறு குடும்பத்தின் நன்மைகளைப் பற்றியும், குடும்ப கட்டுப்பாட்டு முறைகளை பயன்படுத்துவதின் வாயிலாகவும் குடும்ப அளவினை குறைக்க முடியும் என்ற கருத்துக்களை புரிந்து கொண்டு செயல்படுவார்கள். இது பிறப்பு வீதத்தைக் குறைக்கும்.

### 5. காலம் தாழ்த்தி திருமணம் செய்தல்

காலம் தாழ்த்தி திருமணம் செய்வதற்கு ஊக்கமளிக்க வேண்டும். அதே நேரத்தில் முன்கூட்டியே திருமணம் செய்வதை கட்டாயம் கட்டுப்படுத்த வேண்டும். குறைந்தபட்ச ஆண்களின் திருமண வயது 21 மற்றும் பெண்களின் வயது 18 என்ற வயது வரம்பை வாழ்க்கையில் பின்பற்ற வேண்டும்.

### 6. சட்டரீதியான நடவடிக்கை

குழந்தைத் திருமணத்தையும் ஒரே சமயத்தில், ஒருவர் பல பெண்களை திருமணம் செய்துக் கொள்ளுதலையும் (polygamy) தடைசெய்ய சட்டங்களை இயற்றி அவற்றை அமுலுக்குக்கொண்டு வரவேண்டும்.

### 7. குடும்ப நல திட்டங்கள் (Family Planning)

மக்கள் தொகையின் அதிவேக வளர்ச்சியைக் கட்டுப்படுத்த இது ஒரு முக்கியமான வழிமுறையாகும். குடும்பநலத்திட்டமிடுதல் என்பது குடும்பத்தின் அளவைக் கட்டுப்படுத்தலாகும். இத்திட்டம் ஒரு தேசிய இயக்கமாக உருவெடுக்கவேண்டும். குடும்பத் நலதிட்டத்தைப் பற்றிய கல்வியை அனைவரும் பெறச் செய்தல் வேண்டும். பிறப்பைக் கட்டுப்படுத்தும், வெவ்வேறு வழிமுறைகளை பொதுமக்கள் அறியச் செய்தல் வேண்டும்.

### மக்கள்தொகைப் பற்றிய கோட்பாடுகள்

### மால்தசின் மக்கள்தொகைக் கோட்பாடு

பொருளியலில், மால்தசின் மக்கள் தொகைக் கோட்பாடு என்பது அனைவரும் அறிந்த ஒன்றாகும். பொருளியலறிஞர் மால்தசு அவர்கள், மக்கள் தொகையின் வளர்ச்சிப் பெருக்கம், உணவு உற்பத்திப் பெருக்கத்தைவிட தாண்டி விஞ்சிச் செல்லக் கூடும் என்கிறார். இத்தகைய அதிவேக பெருக்கம் பொருளாதாரத்தின் வளர்ச்சியை தடைசெய்து மிக மோசமான பாதிப்பை ஏற்படுத்தும் என சுட்டிக் காட்டுகிறார்.

### இக்கோட்பாட்டை கீழ்காணும் மூன்று கூற்றுகளில் விளக்கலாம்

1. மக்கள்தொகையின் வளர்ச்சி வீதமானது, வாழ்வின் அடிப்படைத் தேவையான உணவின் கிடைப்பளவால் கட்டுப்படுத்தப்படுகிறது. உணவு உற்பத்தி அதிகரிக்கும் போது மக்கள் தொகையும் அதிகரிக்கும்.

2. மக்கள்தொகை பெருக்கம், உணவு உற்பத்தியை விட அதிவேக வளர்ச்சி வீதத்தில், அதிகரிக்கிறது. வேறு வகையாகக் கூறப் போனால்,

மக்கட்தொகை பெருக்க வீதத்திலும், உணவு உற்பத்தி 'கூட்டல் வீதத்திலும்' அதிகரிக்கிறது.

3. கிடைக்கும் உணவுப் பொருள்களின் அளவிற்கேற்ப, இயற்கைத் தடைகள் மற்றும் செயற்கைத் தடைகள் ஆகிய இரு முறைகள் மூலம் மக்கள் தொகையை நிலைப்படுத்தலாம்.

மக்கள்தொகையின் அளவு, உணவு உற்பத்தியின் கிடைப்பளவால் தீர்மானிக்கப்படுகிறது என்பதை முதல் கூற்று குறிப்பிடுகிறது. அதாவது பெருமளவு உணவு உற்பத்தியால் அதிக மக்கட் தொகையை பராமரிக்க இயலும். மக்கட்தொகை வளர்ச்சி வேகத்திற்குச் சமமாக உணவு உற்பத்தி அதிகரிக்காவிடில் அது ஏழ்மைக்கு வழிவகுக்கும். உணவின்மையால் மக்கள் இறந்துவிடுவர். உணவிற்கான தேவை, இறப்பை ஏற்படுத்தி மக்கள்தொகையை தானாக நிலைபெறச் செய்யும். உணவு உற்பத்தி அதிகரிக்கும்போது, மக்கள் தங்கள் குடும்பத்தில் அதிக உறுப்பினர்களை ஏற்றக்கொள்ள முற்படுவர். இதன் விளைவாக உணவிற்கு அதிகத் தேவை ஏற்படும். எனவே தனி மனிதனுக்குக் கிடைக்கும் உணவின் அளவு குறையும். வாழ்க்கைத் தரம் குறைவடையும்.

இரண்டாவது கூற்றுப்படி மக்கள்தொகை 2, 4, 8, 16, 32 என்ற பெருக்கல் வீதத்திலும் உணவுப் பொருள் உற்பத்தி 2, 4, 6, 8, 10 என்ற கூட்டல் வீதத்திலும் அதிகரிக்கின்றன. மக்கட் தொகை அதிகரிப்பு நிலத்தின் மீது சுமையை அதிகரிக்கின்றது. நிலத்தின் அளவு வரையறுக்கப்பட்டிருப்பதால் குறைந்து செல் விளைவு விதி செயல்படும். இதனால் உற்பத்தி அளவு குறையும். தனி மனிதனுக்குக் கிடைக்கும் உணவின் அளவும் குறையும். மக்கட் தொகை வளர்ச்சிக்கும் உணவுப் பொருள் உற்பத்திக்கும் இடையே காணப்படும் வேறுபாட்டால் உயிர் வாழத் தேவையான அளவிற்கு மட்டுமே உணவு கிடைக்கும். மக்கள் வறுமையிலும், ஏழ்மையிலும் அவதிப்பட நேரிடும்.

இச்சமனற்ற நிலையை சரிசெய்ய 1) இயற்கை தடைகள் 2. செயற்கை தடைகள் என இரு தடைகள் உள்ளன.

**செயற்கைத் தடைகள்**

மக்கள்தொகையைக் குறைக்க மனிதன் மேற்கொள்ளும். முயற்சிகள் செயற்கைத் தடைகள் எனப்படும். காலந் தாழ்த்திய திருமணம், வாழ்க்கையில் கட்டுப்பாட்டுடன் இருத்தல், இதே போன்ற பிற குடும்ப அளவைக் கட்டுப்படுத்தும் மக்கள் கையாளும் வழி முறைகள் செயற்கை தடைகளுள் அடங்கும்.

**இயற்கைத் தடைகள்**

இத்தடைகள், இறப்பு வீதத்தை அதிகரித்து மக்கள்தொகை வளர்ச்சியை பாதிக்கிறது. இவ்வியற்கைத் தடைகள் பல உள்ளன. மனிதனின் வாழ்நாளைக் குறைக்கும் தகாத செயல்களும், வறுமையும் இயற்கைத் தடைகளுள் அடங்கும். பொதுவான வியாதிகள், பிளேக் போன்ற கொடிய நோய்கள், போர்கள், பஞ்சங்கள், மனித உடலை வருத்தும் மிகை உழைப்பு, முழுமையற்றத் தொழில்கள், தட்பவெப்ப நிலைகளுக்கு திறந்த நிலை, கடுமையான ஏழ்மைநிலை, தவறான குழந்தை வளர்ப்பு முறைகள் போன்றவை இயற்கைத் தடைகளுக்கு சில எடுத்துக்காட்டுகளாகும்.

மனித இனம், இவ்வறுமைக் கொடுமையை அகற்ற, மால்தசு இச் செயற்கைத் தடைகளை பரிந்துரைக்கின்றார். இல்லையேல் இயற்கைத் தடைகள் தாமாகச் செயல்படத்துவங்கும். இதனால் மக்கள்தொகைக்கும் உணவு உற்பத்திக்குமிடையே ஒரு சமநிலை ஏற்படும் என்கிறார்.

மால்தசின் மக்கட்தொகை கோட்பாட்டை கீழ்காணுமாறு விளக்கலாம்.



**உத்தம அளவுக்கோட்பாடு**

மக்கட்தொகையில் ஏற்படும் மாற்றங்களுக்கும் அதன் விளைவாக தலாவருமானத்தில் ஏற்படும் மாற்றங்களுக்கு மிடையே உள்ளத் தொடர்பினை உத்தம அளவுக் கோட்பாடு வெளிப்படுத்துகிறது. நவீன பொருளியலறிஞர்களான சிட்விக், கேனன், டால்டன் மற்றும் ராபின்சு போன்றவர்கள் இக்கோட்பாட்டை ஆதரித்தார்கள். இயற்கை வளங்கள், மூலதனப் பொருள்களின் இருப்பு, மற்றும் தொழில்நுட்ப நிலை ஆகியவற்றிற்கேற்ற சிறந்த மக்கட் தொகையே உத்தம அளவு மக்கள்தொகை எனலாம். இந்த மக்கட்தொகை அளவில் தலா உற்பத்தி (அல்லது உண்மையான தலா வருமானம்) உச்சத்தில் இருக்கும். வேறு வகையாகக் கூறினால் தலா உற்பத்தி உச்சத்தில் இருக்கும் நிலையில் உள்ள மக்கட் தொகையே உத்தம அளவு மக்கட்தொகை எனலாம். உத்தம அளவைவிட மக்கட்தொகை குறைவாக இருப்பின் அது மக்கள்தொகை குறைவாக உள்ள நாடு எனவும், அதிகமாக இருந்தால், அது மிகை மக்கள் தொகை கொண்ட நாடு எனவும் அழைக்கலாம்.

**விளக்கம்**

ஒரு நாட்டில் இயற்கை வளங்களும், மூலதன கருவிகளும், தொழில்நுட்ப நிலை ஆகியவை மாறாமல் நிலையாக இருப்பதாகக் கொள்வோம். இவ்வளங்களோடு ஒப்பிட மக்கள்தொகை சிறியதாக இருக்கும் என்போம். மக்கட்தொகை அதிகரிக்குமானால், நாட்டில் தொழிலாளர்களும் அதிகரிப்பர். மேற்கூறிய நிலையான வளங்களுடன் கூடுதலான தொழிலாளர்கள் சேர தலா உற்பத்தி அதிகரிக்கும். ஆரம்ப கட்டத்தில், சிறப்பு தேர்ச்சி காரணமாகவும், இயற்கை வளங்களை செம்மையாகப் பயன்படுத்துவதாலும் தலா உற்பத்தி வேகமாக அதிகரிக்கும். தொடர்ந்து மக்கள்தொகை அதிகரித்தால், *அனைத்து வளங்களும் முழுமையாகப் பயன்படுத்தப்பட்ட ஒரு நிலை உருவாகும். அப்பொழுது தலா வருமானம் உச்சத்தில் இருக்கும். இந்த அளவினையே உத்தம அளவு மக்கட் தொகை என்கிறோம்.*

இதைவிட அதிகமாக மக்கட்தொகை அதிகரித்தால் அந்நாடு மிகை மக்கட் தொகை கொண்ட நாடாகக் கருதப்படும். மேலும் தலா உற்பத்தி குறையத் தொடங்கும். வளங்களோடு ஒப்பிட அதிக தொழிலாளர்கள் இருப்பது தெரியும். கொடுக்கப்பட்ட வளங்கள் மற்றும் மூலதனப் பொருட்கள் அதிக தொழிலாளர்களிடையே பகிர்ந்து கொள்ளும் போது தனியொருவருக்கு

கிடைக்கும் மூலப்பொருளின் அளவு குறையும். ஆகவே சராசரி உற்பத்தி குறையும். தலா உற்பத்தியின் அளவு குறையும்பொழுது, தலா வருமானம், மக்களின் வாழ்க்கைத் தரம் முதலியனவும் குறையும். மிகை மக்கள்தொகையானது, குறைவான வாழ்க்கைத் தரம், மறைமுக வேலையின்மை, உணவுப் பற்றாக்குறை ஆகியவற்றிற்கு வழி வகுக்கும். குறைவாக மக்கட் தொகை, மிகை மக்கட்தொகை இரண்டுமே குறைபாடுகளைக் கொண்டதாகும். தலா உற்பத்தி உச்ச நிலையில் உள்ள உத்தம அளவு மக்கட்தொகையே ஒரு நாட்டிற்கு மிகச் சிறந்த மக்கட்தொகையாகும். படம் 2.1ல் இது விளக்கப்பட்டுள்ளது.

படம் **2.1**

**மக்கள்தொகை உத்தம அளவு கோட்பாடு**




வரைபடத்தில் X அச்சில் மக்கட்தொகையும், Y அச்சில் தலா உற்பத்தியும் குறிக்கப்பட்டுள்ளது. மக்கட்தொகை அதிகரிக்க தலா உற்பத்தியும் OM வரை அதிகரிக்கும். OP அளவு மக்கட்தொகையில் தலா உற்பத்தி உச்சத்தில் இருக்கும். மக்கள்தொகை OMஐவிட அதிகரித்தால் தலா உற்பத்தி குறையும். எனவே OM என்பது உத்தம அளவு மக்கட் தொகையாகும். மக்கட்தொகையானது OMஐ விட குறைவாக இருந்தால், அந்நாடு குறைமக்கள் தொகை உடையது என்றும், OMஐவிட மக்கட்தொகை அதிகமாக இருந்தால் அந்நாடு மிகை மக்கட் தொகை உடையது என்றும் கூறப்படும். மக்கட் தொகையானது உத்தம அளவு உடையதா இல்லையா என்பதை கீழ்க்கண்ட வாய்ப்பாட்டின் மூலம் அளவிடலாம்.

$$M = \frac{A-O}{O}$$

இதில்,

M = உற்பத்தியளவில் சரிசமமற்றநிலை (Mal-adjustment in level of output)

A = உண்மையான மக்கட்தொகை

O = உத்தம அளவு மக்கட்தொகை

M - பூஜ்ஜியமாக இருந்தால், மொத்த மக்கட்தொகை உத்தம அளவு மக்கட்தொகைக்கு சமமாக இருக்கும்.

M - நேர் மறையாக இருந்தால், மொத்த மக்கட்தொகை உத்தம அளவு மக்கட் தொகையைவிட அதிகமாக இருக்கும்.

M - எதிர்மறையாக இருந்தால், மொத்த மக்கட்தொகை உத்தம அளவு மக்கட் தொகையைவிட குறைவாக இருக்கும்.

**மக்கள் தொகை வளர்ச்சிக் கட்டக் கோட்பாடு**

இக்கோட்பாடு பிறப்பு வீதத்திற்கும், இறப்பு வீதத்திற்கும் உள்ள உறவை விளக்குகிறது. பிறப்பு வீதம் என்பது ஒரு வருடத்தில் 1000 நபர்களுக்கு எத்தனை குழந்தைகள் பிறக்கின்றன என்பதைக் குறிக்கும். இறப்பு வீதம் என்பது ஒரு வருடத்தில் 1000 நபர்களில் எத்தனை பேர் இறக்கிறார்கள் என்பதைக் குறிக்கும். பொருளாதார முன்னேற்றத்தின் விளைவாக இவ்விரு வீதங்களிலும் மாற்றங்கள் ஏற்படுகின்றன என்று இக்கோட்பாடு கூறுகின்றது. மக்கட்தொகை வளர்ச்சியில் மூன்று நிலைகள் உள்ளதாக இக்கோட்பாடு கூறுகின்றது.

**முதல் நிலை**

**உயர்ந்த பிறப்பு வீதமும் இறப்பு வீதமும்**

முதல் நிலையில், நாடு முன்னேற்றம் குறைந்து, பின்தங்கிய நிலையில் இருக்கும். வேளாண்மை மக்களின் முக்கியத் தொழிலாகும். மிகவும் பழமையான உற்பத்தி முறைகளே பயன்படுத்தப்படும். மக்களின் வாழ்க்கைத்

தரம் குறைந்து காணப்படும். இந்த நிலையில் பிறப்பு, இறப்பு வீதங்கள் உயர்வாக இருக்கும். சத்தில்லா உணவு, சுகாதார வசதியின்மை, போதிய மருத்துவ வசதிகள் இல்லாமை ஆகியவையே அதிக இறப்பு வீதத்திற்கு காரணங்களாகும்.

கல்வியறிவு இன்மை, குடும்ப நலத் திட்டங்கள் பற்றிய அறியாமை, இளவயது திருமணம், சமுதாய நம்பிக்கைகள், சடங்குகள் ஆகியவை பிறப்பு வீதம் அதிகமாக இருப்பதற்கான காரணங்களாகும். இந்தக் கட்டத்தில், அதிக பிறப்பு வீதம், அதிக இறப்பு வீதத்தை சரிக்கட்டுவதால், மக்கள் தொகை வளர்ச்சி அதிகமாக இல்லை. தேக்கமுற்று காணப்படுகின்றது.

**இரண்டாம் நிலை**

**உயர்ந்த பிறப்பு வீதமும், குறைந்த இறப்பு வீதமும்**

நாடு முன்னேறும் போது, தொழில் நடவடிக்கைகள் அதிகரித்து, அதிக வேலை வாய்ப்புகள் உருவாகின்றன. இதனால் நாட்டு வருமானமும், தலா வருமானமும் அதிகரித்து, மக்களின் வாழ்க்கைத் தரம் உயர்கிறது. நாடானது, உயர்ந்த பிறப்பு வீதமும், குறைந்த இறப்பு வீதமும் கொண்ட இரண்டாம் நிலையை அடைகிறது. உயர்ந்த அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி காரணமாக போதிய மருத்துவ வசதிகள் கிடைக்கப்பெறுகின்றன.

தொற்று நோய்கள், உயிர் கொள்ளி நோய்கள் முதலியன ஒழிக்கப்படுகின்றன. நல்ல சுகாதார வசதிகள் பெருகுகின்றன. அதனால் நோய் பரவும் வேகம் குறைந்து, இறப்பு வீதமும் குறைகின்றது. மாற்றத்திற்கான தயக்கம் காரணமாகவும், நீண்ட நாளைய பழக்க வழக்கங்களாலும், பிறப்பு வீதம் உயர்ந்தே காணப்படுகிறது. எனவே உயர்ந்த பிறப்பு வீதம், குறைந்த இறப்பு வீதத்திற்கிடையே வேறுபாடு தோன்றுகிறது. இதுவே மக்கள்தொகை வளர்ச்சி வீதம் அதிகமாகக் காரணமாகிறது.

**மூன்றாம் நிலை**

**குறைந்த இறப்பு வீதமும், குறைந்த பிறப்பு வீதமும்**

பொருளாதார முன்னேற்றம் காரணமாக சமுதாய அமைப்பில் மாற்றம் ஏற்படுகிறது. வேளாண்மை சார்ந்த நாடு தொழில் மயமாவதில் முனைப்பு ஏற்படுகிறது. தொழில்நுட்ப வளர்ச்சியின் காரணமாக மக்கள் ஊரகப் பகுதியிலிருந்து நகர்புறத்திற்கு இடம் பெயருகிறார்கள்.

மக்களின் மனப்பான்மை மாற்றமடைகிறது. கல்வியறிவு காரணமாக, உயர்ந்த வாழ்க்கைத் தரத்திற்கு, சிறு குடும்பமே உகந்தது என்று உணருகிறார்கள். எனவே பிறப்பு வீதம் கணிசமாகக் குறைகிறது. சிறந்த மருத்துவ வசதிகள், தொற்று நோய்களைக் கட்டுப்படுத்துதல், நல்ல சுகாதார வசதிகள் ஆகியவற்றை செயல்படுத்துவதால் இறப்பு வீதம் குறைகிறது. இந்நிலையில் பிறப்பு, இறப்பு வீதங்கள் குறைவாக இருப்பதால், மக்கள்தொகை வளர்ச்சி நிலையாக இருக்கும். உலக நாடுகள் அனைத்தும் இம்மூன்று நிலைகளையும் கடக்க வேண்டும் என்பது மரபாகும். மக்கள்தொகை வளர்ச்சியின் மூன்று கட்டங்களும் கீழே உள்ள படத்தில் 2.2.ல் காட்டப்பட்டுள்ளது.

படம் 2.2




**மக்கள்தொகை கணக்கெடுப்பு**

ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஒரு நாட்டிலுள்ள அல்லது வரையறுக்கப் பட்ட ஒரு பகுதியிலுள்ள அனைத்து மக்களின் பொருளாதார, சமூக, மற்றும் மரபியல் தொடர்பான புள்ளி விவரங்களைத் திரட்டுவது மக்கள்தொகைக் கணக்கெடுப்பு எனப்படும். திரட்டப்பட்ட விவரங்கள் தொகுக்கப்படும். பின் அவை பகுத்தாய்வு செய்யப்பட்டு மதிப்பீடு செய்யப்படும். இந்தியாவில் மக்கள்தொகை, 1872ம் ஆண்டு கணக்கெடுக்கப்பட்டது. அதன் பின்னர் 1881ல் கணக்கெடுக்கப்பட்டது. அப்போது முதல் பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறை மக்கள்தொகை கணக்கெடுக்கப்பட்டு வருகிறது. அண்மையில் மக்கள்தொகை கணக்கெடுப்பு

2001ல் நடத்தப்பட்டது. மக்கள் வளர்ச்சி வீதத்தையும், பகுதி வாரியாக மக்கள்தொகைப் பரவலில் காணப்படும் மாற்றத்தை அறியவும். மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அவசியமாகிறது. பொருளாதார திட்டமிடுதலுக்கும், சமூக நலத் திட்டங்களை செயல்படுத்துவதற்கும் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு பயன்படுகிறது.

## மக்கள்தொகைக் கணக்கெடுப்பின் பயன்கள்

மக்கள்தொகைக் கணக்கெடுப்பால், இந்திய மக்களின் இயல்பினை அறிய முடியும். மக்கள் தொகைக் கணக்கெடுப்பினால் கீழ்க்காணும் விவரங்களை அறியமுடிகிறது.

1. மொத்த மக்கள்தொகை
2. ஆண் – பெண் வீதம்
3. ஊரக, நகர்ப்புற மக்கள்தொகை
4. வயது பாகுபாடு
5. மக்கள்தொகை அடர்த்தி
6. கல்வியறிவு நிலை
7. நகர் மயமாதல்
8. தொழில் சார் வகைகள்

## இந்திய மக்கள்தொகையின் இயல்புகள்

உலக மொத்த நிலப்பரப்பில் 2.4 சதவீத பரப்பளவு மட்டுமே இந்தியா கொண்டுள்ளது. ஆனால் உலக மக்கள் தொகையில் 16.84 சதவீதத்தை வாழ வைக்க வேண்டியுள்ளது. இந்திய மக்கள் தொகையானது 1901ல் 238.5 மில்லியனாக இருந்தது 2001ல் 1027 மில்லியனாக அதிகரித்துள்ளது. ஒரு நூற்றாண்டில் இந்திய மக்கள்தொகையானது 788.5 மில்லியனாக அதிகரித்துள்ளது. உண்மையிலேயே இந்த அதிகரிப்பு இந்தியாவின் ஒட்டுமொத்த முன்னேற்றத்தை அச்சுறுத்துவதாக உள்ளது.

## அட்டவணை 2.1 இந்திய மக்கள்தொகையின் இயல்புகள்

| மக்கள்தொகை 2001 (மில்லியனில்) | | | பாலின வீதம் (1000 ஆண்களுக்கு பெண்கள் வீதம்) | | மக்கள்தொகை 2001 அடர்த்தி (1 ச.கி.மீ) | | கல்வியறிவு நிலை (2001) | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| மொத்தம் | ஆண்கள் | பெண்கள் | 1991 | 2001 | 1991 | 2001 | மொத்தம் | ஆண்கள் | பெண்கள் |
| 1027 | 531 | 495 | 927 | 933 | 267 | 324 | 65.38 | 75.85 | 54.16 |

## இந்திய மக்கள்தொகை வளர்ச்சி

இந்திய மக்கள்தொகையின் வளர்ச்சியை கீழ்கண்ட அட்டவணை மூலம் அறியலாம்.

இருபதாம் நூற்றாண்டில் இந்திய மக்கள்தொகையின் வளர்ச்சி வீதத்தை நான்கு நிலையாகப் பிரிக்கலாம். அவை யாவன :

| மக்கள்தொகை கணக்கெடுப்பு வருடங்கள் | வளர்ச்சி சதவீதத்தில் ஆண்டுக்கு | வளர்ச்சியின் தன்மை |
|---|---|---|
| 1901 - 1921 | 0.19 | மக்கள்தொகையின் தேக்கநிலை |
| 1921 - 1951 | 1.22 | சீரான வளர்ச்சி |
| 1951 - 1981 | 2.14 | விரைவான உயர் வளர்ச்சி |
| 1981 - 2001 | 1.80 | குறைவதற்கான அறிகுறிகள் |

1921 வரை மக்கள்தொகை வளர்ச்சியானது குறைவான வீதத்தில் இருந்தது. ஆனால் அதன்பிறகு மக்கள்தொகை மிக வேகமாக அதிகரிக்கத் தொடங்கியது. எனவே தான் 1921ம் ஆண்டு 'பெரும்பிரிவினை ஆண்டு' எனப்படுகிறது. 1921ம் ஆண்டிற்கு பிறகு இந்தியா, மக்கள் தொகை வளர்ச்சிக் கட்டத்தின் எல்லா நிலைகளையும் வெற்றிகரமாக கடந்து, தற்போது ''மிகக் குறைவான செழுமைக்காலமாக'' கருதப்படும் ஐந்தாவது நிலையில் உள்ளது.

மக்கள் தொகை வளர்ச்சி வீதமானது. பிறப்பு, வீதம், இறப்பு வீதம் ஆகிய இரு காரணிகளைப் பொருத்து அமையும். இந்திய மக்கள்தொகை அதிகரிப்பு பிறப்பு மற்றும் இறப்பு வீதங்களுக்கிடையேன வேறுபாட்டைப் பொருத்தது. இந்தியாவில் 1901ல் ஆயிரத்துக்கு 49.2 ஆக இருந்த பிறப்புவீதம் 2001ல் 25.8 ஆக குறைந்துள்ளது. அதே காலக்கட்டத்தில், ஆயிரத்துக்கு 42.6 ஆக இருந்த இறப்பு வீதம் 8.5 ஆக குறைந்துள்ளது. இயல்பான வளர்ச்சி வீதமானது (குறிப்பிட்ட காலத்தில் பிறப்பு வீதம் – இறப்பு வீதம்) 1901-1911ல் 6.6 ஆக இருந்தது.

1991-2001ல் 17.3 ஆக அதிகரித்துள்ளது. இறப்பு வீதத்தில் ஏற்பட்டுள்ள குறைவானது பிறப்பு வீதத்தில் ஏற்பட்டு குறைவைவிட அதிகமாக உள்ளதாக இயல்பான வளர்ச்சி வீதம் விளக்குகிறது. மருத்துவ வசதிகளில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம், தொற்று நோய்கள் மற்றும் கொள்ளை நோய்கள் கட்டுப்படுத்தப்பட்டதும் இறப்பு வீதம் குறைந்ததற்கான காரணமாகும். இது முன்னேற்றத்திற்கான ஒரு நல்ல அறிகுறியாகும். குடும்ப நல திட்டங்கள் கிராமப்புறத்தை நல்ல முறையில் சென்று அடைய வேண்டும். அப்பொழுது தான் பிறப்பு வீதம் இன்னும் குறையும் என்று மக்கள்தொகை கணக்கெடுப்பின் பிறப்பு வீதம் காட்டுகிறது.

உறுதியான முன்னேற்றம் மற்றும் சுற்றுச்சூழல் பாதுகாப்பு ஆகியவற்றைக் கொண்ட ஒரு நிலையான மக்கள்தொகையை 2045க்குள் அடைவதையே நீண்டகால நோக்கமாகக் கொண்டு சமீபத்தில் இந்திய அரசால் தேசிய மக்கள்தொகை (National Population Policy) கொள்கை (2000) நடைமுறைப்படுத்தப்பட்டது.

**மக்கள்தொகை கொள்கை**

வளரும் நாடுகளுள், மக்கள் தொகைக் கொள்கையை செயல்படுத்திய முதல் நாடு இந்தியாவாகும். மேலும் இது 1952ல் நாடு தழுவிய அளவில் குடும்ப நல திட்டத்தையும், அறிமுகப்படுத்தியது. இறப்பு, பிறப்பு வீதங்களின் குறைப்பில் ஒரு குறிப்பிடத் தக்க வேறுபாடு இருத்தல் வேண்டும் என்பதே மக்கள் தொகை கொள்கையின் முக்கிய நோக்கமாகும். எந்த ஒரு அரசும் மக்கள் தொகை அமைப்பில் மாற்றத்தையும், கட்டுப்படுத்துவதற்குரிய முயற்சிகளையும் மேற்கொள்ள வேண்டும் என்று மக்கள் தொகை கொள்கை கூறுகிறது.

## தேசிய மக்கள்தொகை கொள்கை (2000)

“தேவையான கருத்தடை சாதனங்கள் வழங்கியும், சுகாதார கட்டமைப்பு வசதிகள், சுகாதார பணியாளர்கள் மற்றும் ஒருங்கிணைக்கப்பட்ட பணிகள் மூலம் குழந்தை பராமரிப்பை மேம்படுத்துதலே தேசிய மக்கள்தொகை கொள்கை (2000)யின் உடனடி நோக்கமாகும்.

மேலும் இது, மொத்த செழுமை காலத்தை 2010க்குள் மாற்றி அமைப்பதில் முக்கிய கவனம் செலுத்தியது. மொத்த செழுமைக் காலம் 2.1 என்பது செழுமைகாலத்தை மாற்றி அமைத்தல் என்பதாகும்.

2045ம் ஆண்டிற்குள் மக்கள்தொகையை நிலைப்படுத்துதலே இக்கொள்கையின் நீண்டகால நோக்கமாகும்.

தேசிய மக்கள் தொகை குழுவானது, பிரதம மந்திரி, எல்லா மாநிலங்களின் முதலமைச்சர்கள், மற்றும் உறுப்பினர்களால் தலைமை தாங்கி தொடங்கப்பட்டு, பின் மறுபரிசீலனை செய்யப்பட்டது.

தேசிய மக்கள் தொகை குழு போன்று, மாநில அளவிலான குழு, மாநில முதலமைச்சர்களால் தலைமை தாங்கி துவக்கப்பட்டு அதே நோக்கங்களை நடைமுறைப்படுத்தியது.

## மக்கள் தொகையை நிலைப்படுத்துவதற்கான முறைகள்

ஒரு நிலையான மக்கள் தொகையை 2045க்குள் அடைய கீழ்கண்ட முறைகளை தேசிய மக்கள்தொகை கொள்கை கூறுகிறது :

1. குழந்தைகள் இறப்பு வீதத்தை 1,00,000 குழந்தைகளுக்கு 30க்கு கீழ் குறைத்தல்.

2. மகப்பேறு காலத்தில் இறக்கும் (maternal mortality rate) தாய்மார்கள் வீதத்தை 1,00,000 குழந்தைகளுக்கு 100க்கும் கீழ் (தாய்மார்கள்) கொண்டு வருதல்.

3. உலக அளவில் நோய் தடுப்பு முறை.

4. 80 சதவீத மகப்பேறானது, முறையான மருந்தகம், மருத்துவமனை மற்றும் மருத்துவ நிறுவனங்களில் முறையான பயிற்சியுடைய பணியாளர்கள் மூலம் நடைபெறச் செய்தல்.

# பாடம் – 3

# வறுமை மற்றும் வேலையின்மை

# (Poverty and Unemployment)

**முன்னுரை**

உலகில் வளர்ந்துவரும் நாடுகள் சந்திக்கும் இருபெரும் பிரச்சனைகள், கொடிய வறுமையும், பெருமளவு வேலையின்மையும். இவைகள் ஒன்றோடொன்று தொடர்புடையன. மக்களுக்கு வேலையின்மை காரணத்தினால், வருமானம் ஈட்ட முடியாமல் ஏழ்மை நிலையிலேயே வாழ்ந்துவருகின்றனர். வேறுசிலர் வேலை செய்தும் ஏழ்மை நிலையிலேயே உள்ளனர். பல நூற்றாண்டுகளாக இந்தியாவில் வறுமைநிலை நிலவி வருகிறது. ஐந்தாண்டு திட்டகாலங்களில் வறுமை குறைப்பு முக்கியமான இலக்குகளுள் ஒன்றாக இருந்து வருகிறது. இந்த ஏழை, எளிய மக்களைப்பற்றியும், அவர்களது சமூக மற்றும் பொருளாதார சூழ்நிலைகளைப் பற்றியும் நாம் அறிந்திருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் அரசு திறமையான வறுமை ஒழிப்பு கொள்கைகளை மேற்கொள்ள முடியும்.

**வரையறை**

வறுமையானது பல வழிகளில் வரையறுக்கப்படுகிறது. 1990–ம் ஆண்டில் உலக வங்கியானது வறுமையை கீழ்கண்டவாறு வரையரைச் செய்கிறது "வறுமை என்பது குறைந்தபட்ச வாழ்க்கை தரத்தை அடைய முடியாத, திறனற்ற நிலையை குறிக்கிறது." பேராசிரியர் டண்டேகர் என்பவரின் கூற்றுப்படி (1981) "எப்படியாயினும் வறுமை என்பது போதுமான வருமானத்தின் தேவையேயாகும்" இவ்வாறாக, வாழ்க்கையின் மிக குறைந்தபட்ச அடிப்படை பொருள்களின்கூட வாங்கக்கூடிய போதிய வருமானம் இல்லாத நிலை வறுமையின் இலக்கணங்களின் முக்கிய கூறாகும்.

**வறுமையின் வகைகள்**

1. முழு வறுமை
2. ஒப்பீட்டு வறுமை–என வறுமை இருவகைப்படும்.

**1. முழுவறுமை**

மக்களுக்கு போதுமான உணவு, உடை, உறைவிடம் இல்லாத நிலையை முழுவறுமை நிலை என்கிறோம்.

**2. ஒப்பீட்டு வறுமை**

'ஒப்பீட்டு வறுமை' என்பது மக்களின் பல்வேறு குழுக்களிடையே (உயர்தர, நடுத்தர, குறைவான வருமானம் பெறுபவர்கள்) காணப்படும் வேறுபாடுகளையோ (அ) ஒரே குழுவினரிடையே காணப்படும் வேறுபாடுகளையோ (அ) பல நாடுகளில் வாழும் மக்களிடையே காணப்படும் வேறுபாடுகளை குறிப்பதாகும். மக்கள் தொகையைப் பல்வேறு பிரிவினராக பிரித்துப்பார்க்கையில், அதாவது, உயர்வருமானம் பெறும் 20 சதவிதத்தினரை குறைவான வருமானம் பெறும் 20 சதவீதத்தினரோடு ஒப்பு நோக்குதலை 'ஒப்பீட்டு வறுமை'யை நாம் படிக்கிறோம் எனக் கொள்ளலாம்.

**3. தற்காலிக வறுமை (அ) முற்றிய வறுமை (Temporary or Chronic Poverty)**

இந்தியா போன்ற நாடுகளில் பருவமழை குறையும்போது, விவசாயம் பொய்த்து, அதனால் உழவர்கள் தற்காலிகமான ஏழ்மைநிலையில் உழல்கிறார்கள். அதே நிலையில் அவர்கள் நீண்டகாலமாக வாழும்போது அந்நிலையை முற்றிய வறுமை (அ) அமைப்பு சார்ந்த வறுமை என அழைக்கப்படுகிறது. (எ.கா.) பல ஏழைநாடுகளில் உழவர்கள் பருவ மழையையே சார்ந்து இருப்பதாலும் – குறைந்த உற்பத்தித் திறன் விவசாயத்தில் காணப்படுவதாலும் இவ் உழவர்கள் முற்றிய வறுமை நிலையில் வாழ்ந்து வருகின்றனர் என கருதுகின்றோம்.

**4. முதல்நிலை வறுமை மற்றும் இரண்டாம் நிலை வறுமை**

ரவுண்டிரி *Rowntree* (1901) என்பவர் முதல் நிலை மற்றும் இரண்டாம் நிலை வறுமைகளுக்கு இடையே உள்ள வேற்றுமைகளை விளக்குகிறார். அவரது கூற்றுப்படி முதல்நிலை வறுமை என்பது "குடும்பங்களில் வாழ்க்கை நடத்த மொத்த சம்பாத்தியங்களைக் கொண்டு குறைந்தபட்ச, அத்தியாவசிய, பொருள்களைக் கூட வாங்கமுடியாத, பற்றாக்குறையான நிலையை குறிக்கும்".

இரண்டாம் நிலை வறுமை என்பது குடும்பங்களின் சம்பாத்தியம்,

வாழ்க்கை நடத்த போதுமானதாக இருக்கும். ஆனால் அதன் ஒரு பகுதியானது உபயோகமான (அ) உபயோகமற்ற செலவுகளுக்காக ஈர்க்கப்படும். குறிப்பாக மது அருந்துதல், சூதாட்டம், மற்றும் திறமையற்ற குடும்ப நிர்வாகம் போன்றவைகள் வீணாண செலவுகளுள் சிலவாகும். ரவுண்டிரி *Rowntree* அவர்களின் கருத்துப்படி முதலாம் நிலை வறுமையை இரண்டாம் நிலை வறுமையானது பல மக்களை தங்களது மனித தேவையின் அளவினை அடைவதை தடைச் செய்கிறது. இந்த நிலை வருமானம் பற்றாக்குறையாக உள்ள முதல்நிலை வறுமையை காட்டிலும் மிகவும் மோசமான நிலை என குறிப்பிடுகிறார்.

### 5. கிராமப்புற ஏழ்மை மற்றும் நகர்புற ஏழ்மை

கிராமங்களில் வாழும் பெரும்பான்மையான ஏழை மக்கள் நிலங்களை சொந்தமாக பெற்றிறாமல், விவசாய தினக் கூலிகளாகவே வேலைச் செய்கிறார்கள். அவர்கள் கூலியும் மிக குறைவே, ஆண்டில் ஒரு சில மாதங்களே அவர்கள் வேலை வாய்ப்பைப் பெறுகிறார்கள். ஆனால் நகர்புறங்களில் வாழும் ஏழை மக்கள் நீண்ட நேரம் உழைத்து, மிக குறைவான வருமானத்தையே பெறுகிறார்கள். பெரும்பாலானோர், அங்கீகாரம் பெறாத மற்றும் ஒழுங்குமுறைப்படி அமையாத துறைகளிலேயே வேலைக்கு அமர்த்தப்பட்டு இருக்கிறார்கள். இவர்கள் உப/துணை வேலையாட்கள் *(subemployed)* எனப்படுவர். உபவேலையாட்கள் எனப்படுபவர்கள் மூன்று பிரிவைச் சேர்ந்தவர்கள்.

*1.* முழுநேர வேலை செய்ய விருப்பம் இருந்தும், பகுதி நேர வேலையையே செய்பவர்கள்.

*2.* குடும்ப தலைவர், முழு நேர வேலை செய்தும், வறுமை கோட்டிற்கு மேல் தங்களுடைய குடும்பத்தை கொண்டுவரும் அளவிற்கு போதுமான வருமானம் ஈட்டவில்லை.

*3.* சோர்வுற்ற பணியாட்கள், வேலை தேடிச் செல்லாதவர்கள்.

### வறுமையின் பிறக்கோணங்கள்

வருமானத்தின் அடிப்படையாலும், பொருளாதார ரீதியாலும் விளக்கப்படும் வறுமைக்கு, வேறுபிற பரிமாணங்களும் உள்ளன.

எடுத்துக்காட்டாக, ஒருவர், வீட்டுவசதியில் ஏழ்மையாகவும், சுகாதாரவசதியில் ஏழ்மையாகவும், கல்வியில் ஏழ்மையாகவும், விரும்பத்தக்க உடல் மற்றும் மன இயல்புப் பண்புகளில் கொண்டிருத்தலில் ஏழ்மையாகவும் இருக்கக்கூடும். இவை ஏழ்மையின் பல தரப்பட்ட பரிமாணங்களாக இருக்கின்றன.

### ஏழை குடித்தனங்களின் பண்புகள்
### (Characteristics of Poor Households)

பொதுவாக குறைந்த தலா வருமானம் ஈட்டும் குடும்பங்கள், அநேக குழந்தைகளை பெற்று பெரிய குடும்பமாக, இருப்பதுடன் இவர்கள் பொருளாதாரரீதியில் மற்றவர்களையே சார்ந்துள்ளனர்.

ஒரு குறிப்பிட்ட ஆண்டில், தங்களது வருமானம் அனைத்தையும் ஏழை, எளிய மக்கள் நுகர்வுக்காகவே செலவிடுகின்றனர். இதில் பாதிஅளவு உணவாகும்.

பொதுவாக ஏழைக் குடும்பங்கள் பெண்பிள்ளைகளைவிட ஆண்பிள்ளைகளுக்கு கல்வியில் முதலீடு செய்கின்றனர். ஏழைமக்கள் அரசியலில் குறைவாகவே பங்கேற்கின்றனர். ஒருவகையில், இவர்களுக்கு ஓட்டுரிமை மறுக்கப்பட்டுள்ளது. இந்நிலையில் சில தவிர்ப்புகளும் உண்டு.

பல நாடுகளில் வறுமையானது, சாதி மற்றும் இன வழியோடும் *(race)* தொடர்புடையது. இந்தியாவில் ஆதிதிராவிடர் மற்றும் பழங்குடியினரும், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கருப்பினத்தவர்களும் சிறந்த உதாரணங்களாகும்.

குற்றங்கள், உடல் நலக்குறைவு, ஏழை மக்களோடு கொண்டுள்ள தொடர்பின்மை ஆகியவையும் வறுமையோடுக்கூட தொடர்புடையவையாகும்.

ஒரு நாட்டின் ஏழ்மைநிலை இரண்டு காரணிகளை பொறுத்தது

*1.* நாட்டு வருமானத்தின் சராசரிநிலை

*2.* நாட்டு வருமான பகிர்வில் உள்ள ஏற்றத்தாழ்வின் அளவு / நிலை

### வறுமைக் கோடு (Poverty Line)

வறுமைக் கோடு என்பது குறைந்த பட்ச வருமானம், நுகர்வு அல்லது

பொதுவாக, பண்டங்கள் மற்றும் பணியினை ஒரு தனிநபர் பெறும் வழியினைக் குறிக்கும். வறுமையில் தவிக்கும் ஏழைகளுக்குள்ளும், வறுமையின் நிலையானது வேறுபடுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

எனவே அரசு கொள்கைகளை உருவாக்கும் பொழுது "ஏழ்மையிலும், ஏழ்மையில் உள்ளவர்களையுமே" கருத்தில் கொள்ள வேண்டும்.

சத்துணவு அடிப்படையான வறுமைக் கோடு அநேக நாடுகளில் பயன்படுத்தப்படுகிறது.

**இந்தியாவில் வறுமை**

தண்டேகர் மற்றும் இராத் அவர்களின் கணக்கீட்டின்படி நாம் அன்றாடம் குறைந்த அளவு 2250 கலோரி அளவு உணவு நுகர்தல் வேண்டும். திட்டக்குழு, நபர் ஒருவருக்கு மாதம் ஒன்றுக்கு ரூ.20/– என்பதாக இதனை வரையறுத்துள்ளது. (அதாவது ஆண்டுக்கு ரூ.240/–ஆகும்) தண்டேகர் மற்றும் இராத் இவர்களின் பரிந்துரைப்படி *1960-61* விலைகளின்படி கிராமப்புற மக்களுக்கு குறைந்த அளவு ரூ.180 தனி நபர் ஆண்டு வருமானமும் நகர்ப்புற மக்களுக்கு குறைந்த அளவு தனி நபர் ஆண்டு வருமானம் ரூ.270/– எனப் பரிந்துரை செய்துள்ளனர்.

1968–69 விலைகளில் இதுவே கிராமப்புற மக்களுக்கு ரூ.324/– என்பதாகவும், நகர்ப்புற மக்களுக்கு ரூ.486/என்பதாகும். இந்த அடிப்படையில் கிராமப்புறங்களில் 40 சதவீதத்தினரும் நகர்ப்புறங்களில் 50 சதவீதத்தினரும் வறுமைக் கோட்டிற்கு கீழ் இருப்பதாக கணக்கிட்டுள்ளோம்.

*P.D.* ஒஜா (*P.D. Ojha)* என்ற வல்லுநரின் கருத்துப்படி வறுமைக் கோட்டிற்கு கீழ் உழல்பவர்கள் 1960–61 விலைகளில் 52 சதவீதமாக இருந்தது 1967–68 விலைகளில் 70 சதவீதமாக உயர்ந்தது.

*B.S.* மின்காஸ் என்பவர் கருத்துப்படி தனிநபர் ஆண்டு நுகர்வுச் செலவு குறைந்தபட்சம் ரூ.240/– எனக்கணக்கிட்டார். இதன்படி 1968ல் கிராமப்புறங்களில் ஏறத்தாழ 50 சதவீதத்தினர் (50.6 சதவீதம்) வறுமைக் கோட்டிற்கு கீழே வாழ்ந்து வந்துள்ளனர்.

*P.K.* பரதன் அவர்களின் ஆய்வுப்படி 1960–61ல் வறுமைக் கோட்டிற்கீழ் 38% இருந்த கிராமப்புற மக்கள் 1968–69ல் 54% உயர்ந்தது.

மாண்டெக்சிங் அகுலிவாலியா (1977) கிராமப்புற ஏழ்மையை இவ்வாறு விளக்குகிறார். 1950ல் 50 சதவீதமாக இருந்த கிராமப்புற ஏழ்மை 1960–61ல் 40 சதவீதமாகக் குறைந்து பின்னர் *1967-68*ல் 56.5 சதவீதமாக உயர்ந்தது. வேளாண்மை செழுமையாக இருந்தபோது கிராமப்புற ஏழ்மை குறைந்தும், வேளாண்மை செழிப்பற்ற நிலையில் ஏழ்மை உயர்ந்தும் காணப்பட்டது!

திரு. அகுலிவாலியா செலவு அளவைக் கணக்கில் கொண்டு ஏழ்மையைக் கணக்கிட்டார். 1960–61 விலைகளில் கிராமப்புறங்களுக்கு ரூ.15/– எனவும் நகர்ப்புறங்களுக்கு ரூ.20/– எனவும் இதைக் கணக்கிட்டார். இது மிக மிக குறைவான அளவு என அகுலிவாலியா ஒத்துக்கொண்டார்.

ஏழாவது நிதிக்குழு நீட்டிக்கப்பட்ட ஏழ்மைக்கேடு (*Agumented Poverty Line)* என்னும் புதிய கருத்தை பயன்படுத்தியது. இதில் தனியார் நுகர்வுச் செலவுடன், 1. உடல் நலன் மற்றும் குடும்ப நலன் 2. குடிநீர் மற்றும் சுகாதாரம் 3. கல்வி 4. காவல்துறை, சிறைத்துறை, நீதித்துறை ஆகியவற்றை நிர்வகித்தல் *5.* சாலைப் போக்குவரத்து மற்றும் 6. சமூகநலம் ஆகியவற்றின் மீதான தனிநபர் பொதுச் செலவும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்டது.

ஏழாவது நிதிக் குழுவின் மதிப்பீட்டின்படி 52 சதவீத மக்கள் வறுமைக் கோட்டிற்குகீழ் உள்ளனர். மேலும் இது கிராமப்புற மற்றும் நகர்ப்புற (52*%)* மக்களுக்கும் பொதுவாகப் பொருந்துவதாகும்.

தனிநபர் மாதச் செலவு கிராமப்புறங்களுக்கு ரூ.49.1 ஆகவும் நகர்ப்புறங்களுக்கு ரூ.56.6 எனவும் கணக்கிட்டு வறுமைக் கோட்டினை திட்டக்குழு வரையறை செய்துள்ளது. 1988ல் உலக வங்கியானது 39.6 சதவீத மக்கள்தொகை வறுமைக் கோட்டிற்கு கீழ் உள்ளனர் எனக் கணக்கிட்டுள்ளது. இதுவே கிராமப்புறங்களுக்கு *41.7* சதவீதமாகவும் நகர்ப்புறங்களுக்கு 39.6 சதவீதமாகவும் உள்ளதாக கணக்கிட்டுள்ளது.

அகில இந்திய அளவில் வறுமை அல்லது ஏழ்மை, 1973–74ல் 54.9 சதவீதமாக இருந்தது 1987–88ல் 39.3 சதவீதமாக வீழ்ச்சியடைந்தது என திட்டக்குழு கணக்கிட்டுள்ளது. அதே ஆண்டுகளுக்கு கிராமப்புற ஏழ்மை 56.4 சதவீதத்திலிருந்து 39.1 சதவீதமாகவும் நகர்புற ஏழ்மை *49.2* சதவீதத்திலிருந்து 40.1 சதவீதமாக வீழ்ச்சியடைந்தது.

**அட்டவணை 1 இந்தியாவில் ஏழ்மையில் உள்ளவர்களின் விழுக்காடு மற்றும் எண்ணிக்கை**

| ஆண்டு | ஏழ்மையில் உள்ளவர்கள் விழுக்காடு | ஏழ்மையில் உள்ளவர்கள் எண்ணிக்கை |
|---|---|---|
| *1973-74* | *54.9* | *321* |
| *1987-88* | *38.9* | *307* |
| *1993-94* | *36.0* | *320* |
| *1999-2000* | *26.1* | *260* |

ஆதாரம் திட்டக்குழு, இந்திய அரசு

இந்திய அரசு தற்பொழுது ஏழ்மை அல்லது வறுமைக்கோடு என்பதை நகர்ப்புறங்களுக்கு ரூ. 296/– ஆகவும் கிராமப்புறங்களுக்கு ரூ.276/– ஆகவும் வரையறுத்துள்ளது. நாளொன்றுக்கு ரூ. 10க்கு குறைவாக ஊதியம் பெறும் மக்கள் அனைவரும் வறுமைக்கோட்டிற்கு கீழ் உள்ளவர்களாக கருதப்படுகிறார்கள். இந்திய அரசின் கூற்றின்படி மருத்துவ ரீதியாக இத்தொகையானது நாளொன்றுக்கு 2200 கலோரிகள் அளவிற்கு உணவுப் பொருட்கள் வாங்குவதற்கு போதுமானதாகும். இந்தியா போன்ற ஏழை நாடுகளுக்கு இவ்வளவு ஊதியம் பெறுவது கூட பெறும் சவாலாக உள்ளது. வளர்ச்சியிலும், ஒரு மிகப்பெரும் துயரம் என்னவெனில் இந்தியாவில் 260 மில்லியன் மக்கள் இன்னும் நாளொன்றுக்கு ரூ.10/– கூட ஊதியம் பெறாத நிலையில் உள்ளனர்.

### இந்தியாவில் ஏழ்மை அல்லது வறுமைக்கான காரணங்கள்

இந்தியாவில் கிராமப்புற ஏழ்மைக்கான காரணங்கள் பின்வருமாறு

1. வேலையின்மையும் வேலைக் குறைவும்: நல்ல மழை சில ஆண்டுகளில் இருந்தாலும் கூட விவசாயத் தொழிலாளர்கள் ஆண்டு முழுவதும் வேலை பெறுவதில்லை.

2. மக்கள் தொகை அழுத்தம் : மக்கள்தொகை அழுத்தத்தின்

காரணமாக ஊதிய ஈட்டும் ஒவ்வொரு நபருக்கும் அவரைச் சார்ந்து பலர் இருப்பதால் அங்கு மறைமுக வேலையின்மை பிரச்சினை நிலவுகிறது. ஒரு பண்ணையில் நான்கு நபருக்கு மட்டுமே வேலை இருக்கும். ஆனால், அப்பண்ணையில் ஆறு அல்லது ஏழு நபர்கள் வேலை செய்வார்கள். இங்கு கூடுதல் வேலையாட்களின் இறுதி நிலை உற்பத்தித்திறன் ஏறத்தாழ 'பூஜ்யம்' ஆகும்.

*3.* இந்திய வேளாண்மையில் உற்பத்தித் திறன் மிகமிகக் குறைவே ஆகும். எனவே வேளாண்மையைச் சார்ந்துள்ளோரில் பெரும்பாலானவர்கள் ஏழ்மை நிலையிலேயே உலவுகின்றனர்.

*4.* கிராமப்புற மக்களில் பெரும்பாலானவர்கள் போதிய அளவு சொத்துக்களை பெற்றிருக்கவில்லை, குறிப்பாக நிலம். இதற்கு முக்கிய காரணம் நிலம் ஒரு சில குடும்பங்கள் வசமே உள்ளது எனலாம்.

ஏழ்மை நிலையில் வட்டார வேறுபாடுகளும் அதிக அளவில் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக **1987–88**ல் இந்தியாவில் ஏழை மக்களில் **58** சதவீதத்தினர் **5** மாநிலங்களில் வசித்து வந்தனர். அவையாவன உத்திரப்பிரதேசம், பீகார், மாகராஷ்டிரா, மேற்கு வங்காளம் மற்றும் மத்தியப்பிரதேசம்.

நகர்ப்புறங்களில் வேலை செய்யும் பலர் 'உப–வேலை வாய்ப்பினால்' அல்லலுறுகின்றனர். அவர்கள் (உபவேலை நிலையில் உள்ளவர்கள்) ஏழ்மையில் உள்ள வேலையாட்கள் மற்றும் கிராமப்புறங்களிலிருந்து நகர்புறங்களுக்கு குடிப்பெயரும் மக்களும் ஆவார்கள். இது நகர்ப்புறங்களில் ஏழ்மை நிலவக்காரணமாக இருக்கிறது.

## வறுமை ஒழிப்புத் திட்டங்கள் (Poverty Alleviation Programme)

குறைந்த நிலை வேலைவாய்ப்பின் உற்பத்தி திறனை அதிகரிப்பதும், வேலைவாய்ப்பை அளிப்பதும் வறுமை ஒழிப்பு திட்டத்தின் முக்கிய பிரச்சனையாகும். நம் நாட்டு வறுமையை ஒழித்துக்கட்ட அரசு கீழ்காணும் நடவடிக்கையை மேற்கொண்டுள்ளது.

### 1. நிலச் சீர்திருத்தங்கள்

மாநில அரசுகள் நிலசீர்திருத்த சட்டங்களை இயற்றுவதன் மூலமாக

நிலமற்ற விவசாயிகளின் பொருளாதார நிலைமைகளை மேம்படச் செய்ய வழிவகுத்தன. (உம்.) ஜமின்தார்முறை ஒழிக்கப்பட்டதினால், சுரண்டல் முறைகள் சமுதாயத்தை விட்டு நீக்கப்பட்டன. பல மாநிலங்களில் குத்தகை சட்டங்கள் இயற்றப்பட்டன. இதன் மூலம் குத்தகைதாரர்களின் நலன்கள் பாதுகாக்கப்பட்டன. மேலும் அவர்கள் பயிர் செய்த நிலங்களை, அவர்களே உரிமையாக்கிக் கொள்ள இச்சட்டம் உதவியது. மேலும் ஒவ்வொரு மாநிலங்களிலும் அவசியமான சட்டம் இயற்றப்பட்டு, நில உடைமை வரம்புகள் நிர்ணயம் செய்யப்பட்டன. இதன் வாயிலாக ஒரு நபர் உடைமையாக்கிக் கொள்ளக்கூடிய உச்ச அளவு நிலம் சட்டபூர்வமாக தீர்மானிக்கப்பட்டது. இச்சட்டத்தின் வாயிலாக பெறப்பட்ட உபரி நிலங்களை நிலமற்றோருக்கும், சிறு விவசாயிகளுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்டது.

### 2. ஜவகர் கிராம் வேலைவாய்ப்புதிட்டம்
### (Jawahar Grama Sannidhi Yojana - JGSY)

இத்திட்டம் 1999ம் ஆண்டு ஏப்ரல் மாதம் அறிமுகப்படுத்தப்பட்டது. இத்திட்டத்திற்காகும் செலவினை மத்திய மற்றும் மாநிலங்களைக்கிடையே 75:25 என்ற முறையில் பிரித்துக் கொள்ளப்பட்டது.

### 3. நாட்டு சமூக உதவித் திட்டம்
### (National Social Assistance Programme-NSAP)

இத்திட்டம் ஆகஸ்டு 15ம் நாள் 1995–ம் ஆண்டு துவங்கப்பட்டது. நூறு சதவீதம் இத்திட்டத்தை மைய அரசே ஏற்று நடத்தும், இத்திட்டத்தின் மூலமாக ஏழைக் குடும்பத்தினர், வயது முதிர்ந்தோர், வருமானம் ஈட்டும் குடும்பத் தலைவனை இழந்த குடும்பத்தினர் மற்றும் மகப்பேருகால உதவி பெறுவோர், அதிக நலன்கள் பெறுவர்.

### 4. வேலைவாய்ப்பு உறுதித்திட்டம்
### (Employment Assurance Scheme-EAS)

இத்திட்டம் 1993, அக்டோபர் 2 முதல் நடைமுறைக்கு கொண்டு வரப்பட்டது. நாட்டிலுள்ள வளர்ச்சியால் பாதிக்கப்பட்ட பழங்குடியினர் வாழக்கூடிய பாலைவனங்கள், பழங்குடியிருப்புகள் மற்றும் மலைப் பகுதிகளாகிய 1778 பிற்பட்ட தொகுப்புக்களில் இத்திட்டம் செயல்படுத்தப்பட்டது. இத்திட்டமானது விரிவாக்கப்பட்டு 5488 கிராமப்புற

தொகுப்புகள் பயனடைந்தனர். வேலையில்லா கிராமப்புற மக்களுக்கு கூலிவேலையை ஏற்படுத்தித் தந்தது. புதிய சம்பூரண கிராம வேலைவாய்ப்பு திட்டத்துடன், வேலைவாய்ப்பு உறுதித்திட்டம் மற்றும் ஜவகர் கிராம வேலைவாய்ப்பு திட்டமும் செப்டம்பர் 2001ல் இணைக்கப்பட்டது.

### 5. பிரதமரின் வேலைவாய்ப்புத்திட்டம்
### (Pradhan Mantri Gramodaya Yojana-PMGY)

இத்திட்டமானது 2000–2001 நிதிநிலை அறிக்கையின்போது, அறிமுகப்படுத்தப்பட்டது. இதன்கீழ் ரூ.5000 கோடி பணம் ஒதுக்கீடுச் செய்யப்பட்டது. இத்திட்டம் சுகாதாரம், அடிப்படைக் கல்வி, குடிநீர், வீட்டு வசதி, மற்றும் கிராமபுறங்களில் சாலை அமைத்தல் ஆகியவற்றில் கவனம் செலுத்தியது.

### 6. பொன்விழா ஆண்டு ஊரக தன் வேலை வாய்ப்புத் திட்டம்
### (Swarna Jayanti Shahari Rozgar Yojana-SJSRY)

நகர்புற சுயவேலைவாய்ப்பையும், மற்றும் நகர்ப்புற கூலி வேலை ஆகிய இவ்விரண்டும் சிறப்பு திட்டங்களாகும். 1997–ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் நகர்புற வறுமை ஒழிப்பு திட்டத்தின் கீழ் செயல்பட்டுவந்த முந்தைய திட்டங்களை இத்திட்டமானது மாற்றி அமைத்தது. மத்திய–மாநில அரசுகளும் 75:25 என்ற விகிதத்தில் திட்டத்திற்கு தேவையான செலவை மேற் கொள்கின்றனர்.இத்திட்டத்திற்கான செலவு ரூ.45.5 கோடியாகும். 2001–2002–ல் ரூ.39.21 கோடி, மற்றும் 2002–03ல் ஒதுக்கீடானது ரூ.105 கோடியாக ஒதுக்கீடுச் செய்யப்பட்டது. (*Euromil Survey, 2002-03, P.217)*

### 7. கிராம ஒருங்கிணைந்த வளர்ச்சித் திட்டம்
### (Integrated Rural Development Programme-IRDP)

*1976-77*-ம் ஆண்டில் மத்திய அரசின் நிதிநிலை அறிக்கையில் இத்திட்டம் முதன் முதலாக முன்மொழியப்பட்டது. இத்திட்டம் கிராம மக்களுக்கு உதவிச் செய்யவும், பொருளாதார வளர்ச்சி நலன்களை, கிராமப்புற பகுதிகள் பெற்று பயனடைவதையே நோக்கமாக கொண்டது. 1978–79ல் இத்திட்டமானது மாற்றியமைக்கப்பட்டு அதன் அளவு விரிவாக்கப்பட்டது. துவக்கத்தில் 2,300 தொகுப்புகளில் அதில் 2000 தொகுப்புக்களில் *SFDA*, *DPAP* மற்றும் *CADP* இத்திட்டங்கள் செயல்பட்டன. 1979–80ல் கூடுதலாக

300 தொகுப்புக்கள் இத்திட்டங்களுடன் இணைக்கப் பட்டன. 1980 அக்டோபர் 2–ல் நாட்டின் எல்லா தொகுப்புகளுக்கும் இத்திட்டம் விரிவாக்கப்பட்டது. சிறிய மற்றும் எல்லைநிலை விவசாயிகள் மட்டுமில்லாமல் இத்திட்டம் குறிப்பாக விவசாய தொழிலாளர் மற்றும் நிலமற்ற உழைப்பாளர்கள் இவர்களோடும்கூட கிராமப்புற கைவினைஞர்களையும் உள்ளடக்கி உள்ளது. இது தனி நபரைக் காட்டிலும், குடும்ப நலத்திற்கே முக்கியத்துவம் அளிக்கிறது.

### வேலையின்மை

பொருள் : வேலையின்மை என்பது, தொழிலாளர்கள் வேலை செய்யும் தகுதியும் விருப்பமும் இருந்தும், வேலை கிடைக்காமல் இருப்பது ஆகும்.

### வேலையின்மை அளவிடுகள்

ஒரு நபர் ஒரு நாளைக்கு 8 மணி நேரங்கள் போன்று ஒரு வருடத்திற்கு 73 நாட்களுக்கு வேலையில் நியமனம் செய்யப்படுவதையே குறிப்பது ஆகும். என்எஸ்எஸ்–ல் 27வது சுற்றின்படி, வேலையின்மை அளவிடுகளை மூன்று வகைகளாக பிரிக்கலாம்.

*1.* பொதுவான முதன்மை நிலை வேலையின்மை : வருடத்தில் பாதிநாட்களுக்கு மேல் அதிகமான நபர்கள் வேலையில்லாத நிலையில் இருப்பதையே இது குறிக்கும். தகுதிக்கு ஏற்ப தொடர் வேலையை தேடுபவருக்கு இது பொருந்தும். (எ.கா.) படித்தவர்கள், தொழில் வல்லுனர்கள் சாதாரன வேலையை ஏற்றுக்கொள்ளார். இதற்கு வெளிப்படையான வேலையின்மை என்று பொருள்.

*2.* வாராந்திர நிலை வேலையின்மை : வாரத்திற்கு ஒரு மணி நேரம்கூட அதிகமான நபர்களுக்கு வேலை கிடைக்காமையை குறிக்கும்.

*3.* தினமும் வேலையின்மை நிலை : வாரத்தில் ஒரு நாள், சில நாட்கள் அதிகமான நபர்களுக்கு வேலையில்லாமையை குறிக்கும்.

### வேலையின்மைக்கான காரணங்கள்

#### 1. அதிக மக்கள்தொகை வளர்ச்சி

கடந்த வருடங்களில் நம்முடைய மக்கள் தொகை அதிகமான அளவு

உயர்ந்து உள்ளதால், வேலையின்மைக்குரிய சிக்கல்களை மேலும் அதிகரித்து உள்ளது. நம்முடைய நாட்டில் மக்கள்தொகை பெருக்கம் அதிகமாவதால், வேலையின்மையின் அளவு அதிகமாகி கடுமையான விளைவுகளை சந்திக்க நேரிடும்.

### 2. போதுமான பொருளாதார வளர்ச்சி வீதம் இன்மை

இந்தியா ஒரு வளர்ந்து வரும் நாடாக இருந்தபோதும், பொருளாதார வளர்ச்சி வீதம் மிகவும் குறைவாகவே உள்ளது. காரணம் மொத்த உழைப்பின் வலிமைகளும் பயன்படா நிலையே காரணம். இந்தியாவில் வேலைவாய்ப்புக்கள் போதுமான அளவில் இல்லை. இதனால் கூடுதலான உழைப்பு சக்திகளை பயன்படுத்தப்படவில்லை. இதற்கு காரணம் மக்கள் தொகையின் வளர்ச்சியே ஆகும்.

### 3. வேளாண்மை தவிர பிறதுறைகளில் வேலை வாய்ப்பு குறைவு

இந்தியாவில் விவசாயத் துறையில் மட்டுமே போதுமான வேலைவாய்ப்பு உண்டு. மற்ற துறைகளில் போதுமான அளவுக்கு வேலைவாய்ப்பு வசதிகள் குறைந்து காணப்படுகிறது. இதனால் நிலத்தின் அழுத்தம் மிகவும் அதிகமாக உள்ளதனால் 2/3 பகுதி உழைப்பு சக்திகள் விவசாயத் துறையிலேயே பயன்படுத்தப்படுகின்றனர். நிலமானது அதிகமான மக்கள் வாழ்வதற்கு பயன்படுவதால் மிகவும் அதிகமான மக்கள் சக்தியானது வேலையில்லா நிலையிலேயே உள்ளனர். இதற்கு மறைமுகவேலையின்மை என்று பெயர்.

### 4. பருவகால வேலை வாய்ப்பு

இந்தியாவில் விவசாயத்தில் பருவகால வேலையின்மை நிலவுகிறது. பருவகாலம் இல்லாத நேரத்தில் விவசாயத் தொழிலாளர்கள் வேலையில்லா நிலையில் காணப்படுகின்றனர்.

### 5. கூட்டுக் குடும்ப அமைப்பு

இந்தியாவில் கூட்டுக்குடும்ப முறை இருப்பதால் மறைமுக வேலையின்மை அதிகமுள்ளது. குடும்பத்தில் உள்ள அனைவரும் தங்களுடைய குடும்ப தொழிலில் ஈடுபட்டனர். தேவைக்கு அதிகமாக தொழிலாளர்கள் தங்களுடைய குடும்ப தொழிலில் அமர்த்தப்படுகிறார்கள்.

### 6. இந்தியப் பல்கலைக்கழத்திலிருந்து பெருகிவரும் மாணவர்கள்

கடந்த பத்தாண்டுகளாக இந்தியப் பல்கலைக் கழகத்திலிருந்து உருவாக்கப்படும் பெருவாரியான பட்டதாரிகள் கூடுதலாக இருப்பதால் படித்தவர்களுக்கு வேலையின்மை அதிகரித்துக் கொண்டுள்ளது. இந்திய கல்வி முறையில் அதிகமாக பொறியியல் மற்றும் தொழில்நுட்பப் பாடங்களுக்கு, கலைத்துறை சார்ந்த பாடங்களைக் காட்டிலும் அதிக முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. ஆனாலும் தொழில்துறையின் பட்டதாரிகளுக்கு இடையே வேலையின்மை நிலவுகிறது. மேலும் நமது நாட்டில் தொழில் கல்வியும் மிகவும் பின்தங்கிய நிலையிலேயே உள்ளது.

### 7. குறைவான தொழில் வளர்ச்சி

நமது நாட்டில் தொழில்துறை போதுமான அளவு வளர்ச்சியடையவில்லை. தொழில்களிலும், தொழிலாளர்களின் வேலைவாய்ப்பும் மிகவும் குறைவே. வேளாண்துறையில் உபரியாக உள்ள தொழிலாளர்களை, தொழில்துறைகளில் வேலைக்கு எடுத்துக்கொள்ளவில்லை. இதனால் விவசாயத்தில் மறைமுக வேலையின்மை ஏற்படுகின்றது.

### இந்தியாவில் வேலையின்மை பிரச்சனைகளுக்கு தீர்வு

ஒவ்வொரு ஐந்தாண்டு திட்டங்களிலும் வேலைவாய்பபை பெருக்குவதே பொருளாதார வளர்ச்சியின் முக்கிய குறிக்கோளாக கொண்டுள்ளது. ஐந்தாண்டு திட்டங்கள் நடந்துக் கொண்டிருக்கும்போதுகூட வேலையின்மையின் தேக்கம் அதிகரித்துக் கொண்டேயுள்ளது. இதற்கு காரணம், ஒவ்வொரு திட்டத்திலும் புதிதான உழைப்பு சக்திகளை பயன்படுத்தாமையே ஆகும்.

கீழ்காணும் வழிமுறைகள் மூலம் வேலையின்மை பிரச்சனைகளை தீர்வுகாண முடியும்.

### 1. முதலீட்டு முறைகளில் மாற்றம் செய்தல்

ஆரம்ப கால கட்டத்தில் திட்ட செயல்முறைப்படி அதிக முதலீடு உழைப்பு விகிதம் முக்கிய பங்கினை வகிக்கிறது. ஆகவே நுகர்வுப் பண்டங்களை உற்பத்திச் செய்யும் தொழிற் சாலைகளை அதிகரிக்கும்போது வேலையில்லா தொழிலாளர்களை அதிகப்படியாக வேலைக்கு அமர்த்துதல் சாத்தியமாகும். நுகர்வுப் பண்டங்களின் அளிப்பு அதிகரிப்பதனால் பண்டங்களின்

விலையேற்றமானது கட்டுப்படுத்தப்படுகிறது. இதனால் மக்களின் பொருளாதார நலனானது அதிகரிக்கிறது. இது பேராசிரியர்கள் பிரமாணந்தா மற்றும் வக்கீல் அவர்களின் கூலி – பண்டங்களின் மாதிரிகளின் வளர்ச்சியின் கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்ததாகும்.

### 2. பெரிய நிறுவனங்களுக்கு எதிராக சிறிய நிறுவனங்களை ஊக்குவித்தல்

பெரிய தொழில் நிறுவனங்களைக் காட்டிலும் சிறிய நிறுவனங்களுக்கு நேரடியான அதிக முதலீடு செய்யப்படும்போது வேலைவாய்ப்பு நோக்கமும், உற்பத்தியின் நோக்கமும் நிறைவுச் செய்யப்படும். தற்போது அரசாங்கமானது வளர்ச்சியின் பணிகளை பகிர்ந்தளிக்கும்போது சிறுத் தொழில் நிறுவனங்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்க வேண்டியுள்ளது. இதனால் அத்தொழில்களுக்கு அதிக கடன் வசதி, உரிமம், முறையான கச்சாப் பொருள்கள் பகிர்வு, மற்றும் இதரக் கொள்கைகள் வழங்கப்படுவதன்மூலம் வேலைவாய்ப்பு மற்றும் உற்பத்தி கணிசமான அளவில் ஒரே சீராக அதிகரிக்கக்கூடும்.

### 3. தொழில்நுட்ப முறைகளில் காணப்படும் பிரச்சனைகளை தேர்ந்தெடுத்தல்

நடுத்தரமான தொழில் நுட்பமுறைகளை தேர்ந்தெடுப்பதன் மூலம், தொழில் மயமாகுதலின் போக்கில் புதிதாக வரும் உழைப்பு சக்திகளை முழுமையாக பயன்படுத்திக் கொள்ளமுடியும். உழைப்பு சக்திகளை அதிகமாக பயன்படுத்தும் காலத்தில், தொழில்நுட்பங்களை தேர்ந்தெடுத்தலின் மூலம் வேலைவாய்ப்பின் நோக்கத்தை முழுமையாக செயல்படுத்த முடியும். இந்திய பொருளாதாரத்தின் சூழலுக்கு நடுத்தரமான தொழில்நுட்ப முறையே ஏற்றதாகும்.

### 4. சிறுநகரங்கள் மற்றும் கிராமபுறங்களில் புதிய வளர்ச்சி மையங்களை ஊக்குவித்தல்

ஒவ்வொரு திட்டங்களின் அனுபவமும், அதிக மக்கள் தொகை உள்ள மாநகர மையங்கள் அதிகமான முதலீடுகளை பெறுகின்றன என்பதையே காட்டுகின்றது. ஆகவே சிறுநகரங்களின் வளர்ச்சியானது, புதிய வளர்ச்சி மையங்களை வருங்காலத்தில் வளர்த்திட உதவும். சிறிய தொழில்களின் கூட்டமைப்பு, நிறுவப்படுவதன் மூலம் வேலை வாய்ப்பு மற்றும் பொருளாதார நெகிழ்வுத் தன்மையை அளித்திடும்.

## 5. வேலை வாய்ப்புக்களின் அடிப்படையில் சலுகைகள்

அரசின் சலுகைகள் மற்றும் ஊக்கத்தொகை திட்டங்களானது சிறிய மற்றும் பெரிய தொழில்களுக்கு உச்சமான உற்பத்தியளவை அதிகரிக்க உதவுகிறது. மேலும் இது மூலதன வளங்களை அதிக அளவில் பயன்படுத்துவதற்கும் உதவுகின்றது. இவ்விதமான அரசின் சலுகை முறைகளில் மாற்றங்கள் தேவை. அதிகமான வேலைவாய்ப்புக்களை உருவாக்குவதற்கு அரசின் சலுகைகள் மற்றும் அரசின் ஊக்கத் தொகைகளே அடிப்படை காரணங்களாக உள்ளன. அரசின் மொத்த அமைப்புகளிலும் ஏற்படும் மாற்றங்களானது பேரளவு உற்பத்தியிலிருந்து சிறிய அளவு உற்பத்தி ஒரு மாற்றம் ஏற்பட்டுள்ளது. இதன் மூலம் வேலை வாய்ப்புக்களை உருவாக்கும் நோக்கங்களுடன் சமத்துவம் மற்றும் சமூக நிலை அடைவதற்கு உதவுகிறது.

## 6. கல்விக் கொள்கையில் புத்தாக்கம்

நம் நாட்டின் கல்விமுறையில் தொழில்கல்வி பட்டம் பெறுவது மட்டுமே மிகப்பெரிய குறையாக உள்ளது. படித்தவர்களிடையே வேலையின்மை அதிகமாக இருப்பதால் கல்வி முறையில் புத்தாக்கம் செய்வது மிகவும் அவசியமான தேவையாக கருதப்படுகிறது. அப்படி செய்வதன்மூலம் அதிகப்படியான வேலைவாய்ப்புக்களை உருவாக்கமுடியும். நமது நாட்டின் கல்வி கொள்கையின் முறையில் மாற்றம் தேவைபடுகிறது. இம்மாற்றங்கள் குறுகிய கால வாழ்க்கை கல்வி பயிற்சியை அதிகப்படுத்துவதன் மூலம் உள்நாட்டு வேலைவாய்ப்பின் தேவையை பூர்த்திச் செய்யும். தரமான கல்வியின் வளர்ச்சியானது நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு தேவையானதாக உள்ளது. இவை வேலையின்மையின் மூலம் காணப்படும் பிரச்சனைகளை தீர்வு காண்பதற்கும். உதவுகிறது. ஆகவே அரசின் செலவுகளில் கல்வியின் வளர்ச்சிப் பணிகளுக்கு அதிக முக்கியத்துவம் தரப்படவேண்டும்.

## 7. கிராமபுறங்களின் குறை வேலையுடமை

என்.எஸ்.எஸ். விவரங்களின்படி இந்தியாவில் குறை வேலையுடமை சற்று அதிகமாகவே உள்ளது. இந்தியாவில் 2 கோடிக்குமேல் குறைவேலையுடமை மக்கள் இருக்கிறார்கள். அவர்கள் கூடுதலாக வேலைசெய்யவும் தயாராக உள்ளனர். கிராமப்புற வேலை வாய்ப்புத் திட்டங்கள் உருவாக்குவது அரசின் கடமையாக உள்ளது. இத்தகைய கிராமப்புற வேலைவாய்ப்பு திட்டங்களை உருவாக்கவிட்டால், கிராமப்புற மக்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதற்கு

வாய்ப்பில்லை. இதன் மூலம் நிலமற்ற தொழிலாளர்கள் சிறிய மற்றும் கடைநிலை விவசாயிகள் வேலைவாய்ப்பை இழக்க நேரிடும் அத்தியாவசியமான நடவடிக்கைகள் எடுத்தால்தான் கிராமப் புறங்களில் வேலைவாய்ப்புகளை அதிகரிக்க முடியும். இதனால் கிராமப்புறங்களில் வேலைவாய்ப்பின் மூலம் வருமானம் அதிகரிக்கும். மேலும் வறுமையின் அளவும் குறைய வாய்ப்பு உள்ளது.

# பயிற்சி
## பகுதி – அ

**I. சரியான விடையைத் தேர்ந்தெடுக்கவும்.**

1. அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, இருப்பிட தேவைகள் இதனைச் சார்ந்தது

அ. பொருள் சார்ந்தது ஆ. சமூகம்

இ. உளவியல் ஈ. பண்பாடு

2. வாழ்வதற்கு வேண்டிய குறைந்தபட்ச வசதிகளுக்குக் கீழே ஒருவர் வாழும் ஏழ்மை நிலையை இவ்வாறு கூறலாம்.

அ. முழுமையான ஆ. சார்ந்த

இ. சுருக்கம் ஈ. ஏதும் இல்லை

3. இந்நாள் வரை அமுல்படுத்தப்பட்ட அனைத்து வறுமை ஒழிப்புத் திட்டங்களும் பயனின்றி போனதற்குக் காரணம்

அ. வேலையின்மை ஆ. கூட்டுக் குடும்ப முறை

இ. ஏற்றத்தாழ்வு ஈ. லஞ்சம்

4. இந்தியத் திட்டக்குழு ‘ஏழ்மையை’ இதன் அடிப்படையில் வரையறுத்துள்ளது.

அ. வருமானம் ஆ. நுகர்வு

இ. உணவுப் பொருள் மூலம் பெறும் கலோரி ஈ. வேலைவாய்ப்பு

5. வேளாண்மை மூலம் கிடைக்கும் வேலை வாய்ப்பு

அ. சுழலும் தன்மை ஆ. அமைப்புத் தன்மை

இ. பருவ காலம் சார்ந்தது ஈ. தொழில் சார்ந்தது

**II. கோடிட்ட இடங்களை நிரப்புக.**

6. ஏழ்மையை ............ வகைகளாகப் பிரிக்கலாம்.

7. இந்தியாவில் தற்போது வெளிப்படையாகவும் மறைமுகமாகவும் காணப்படும் வேலையின்மையின் பெயர் .......... ஆகும்.

8. நமது திட்டம் ........... அடிப்படையாகக் கொண்டு ஒருபோதும் இருந்ததில்லை.

9. நகர்புறங்களிலுள்ள தொழிலாளர்கள் ....... அவதிப்படுகிறார்கள்.

10. இந்தியாவில் நிலவும் கூட்டுக் குடும்ப முறை ........... ஊக்குவிக்கிறது.

**III. பொருத்துக.**

| | | |
|---|---|---|
| 11. | வேலை உதவித் திட்டம் | அ. ஏப்ரல் 1999 |
| 12. | மறைமுக வேலையின்மை | ஆ. பொறியியல் படிப்பு |
| 13. | ஜவகர் கிராமப்புற வேலை வாய்ப்புத்திட்டம் | இ. கிராமப்புற வேலைத்திட்டம் |
| 14. | இந்தியக் கல்வி முறை | ஈ. குறைந்த உற்பத்தித் திறன் வேலை வாய்ப்பு |
| 15. | வேலைக் குறைவு | உ. 1993 |

**IV. ஒரிரு வார்த்தைகளில் விடையளிக்கவும்**

16. திட்டமிடுதலின் மிக முக்கிய நோக்கம் என்ன?

17. கிராமப்புறங்களின் வறுமைக் கோட்டினை திட்டக்குழு எவ்வாறு வரையறுத்துள்ளது.

18. இந்தியாவின் ஏழ்மைக்கான மிக முக்கிய காரணம் யாது?

19. ஒரு நாடு வளர்ச்சியடைய முக்கிய அடிப்படைத் தேவை என்ன?

20. இந்தியாவில் வேலைக் குறைவினால் பாதிக்கப்படும் நபர்கள் எவ்வளவு பேர்?

## பகுதி–ஆ

**V. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடையளி.**

21 கற்றவர்களிடையே வேலையின்மை அதிகரிப்பது ஏன்?

22. இந்தியாவில் ஏழ்மையில் உள்ள 58 விழுக்காடு மக்கள் வாழும் ஐந்து மாநிலங்கள் எவை?

23. ‘ஏழ்மை’யினை வரையறுக்கவும்.

24. ஏழ்மைக் கோடு என்றால் என்ன?

25. வேலையின்மை என்பதை விவரிக்கவும்.

## பகுதி–இ

**VI. பின்வரும் வினாக்களுக்கு ஒரு பக்க அளவில் விடையளிக்கவும்.**

26. கிராமப்புற வேலையின்மை மற்றும் நகர்ப்புற வேலையின்மையை வேறுபடுத்துக.

27. வேலையின்மையின் மதிப்பீடு என்னென்ன?

28. இந்தியாவில் ஏழ்மைக்கான காரணங்கள் யாவை?

29. வேலையின்மைக்கான காரணங்கள் யாவை?

30. இந்தியாவில் ஏழ்மையின் நிலையை ஆராய்க.

## பகுதி–ஈ

**VII. பின்வரும் வினாக்களுக்கு மூன்று பக்க அளவில் விடையளிக்கவும்.**

31. வேலையில்லாப் பிரச்சினையைத் தீர்க்க இந்தியாவில் எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகளை விவரி.

32. ‘ஏழ்மையைப் போக்க எடுக்கப்பட்டுள்ள திட்டங்கள் அல்லது நடவடிக்கைகளை விளக்கியுரைக்க.

# பாடம் – 4

# நாட்டு வருமானம்

## (National Income)

உலகத்தில் சில நாடுகள் செல்வந்த நாடுகளாகவும், சில ஏழை நாடுகளாகவும், பல நாடுகள் நடுத்தரமாகவும் உள்ளன. நாட்டின் பொருளாதார செயல்பாடுகளை எவ்வாறு அளவிடுவது? நாட்டின் செயல்பாடுகள் உற்பத்தியின் அளவோடு தொடர்புடையது அல்லது மொத்த பொருளாதார நடவடிக்கைகளோடு தொடர்புடையது. நாட்டின் மொத்த உற்பத்தி மதிப்பை கணக்கிடுவதற்கு நாட்டு வருமானம் மற்றும் உற்பத்தியின் முறைகள் அளவு கோளாகப் பயன்படுத்தப்படுகிறது. நாட்டு வருமானத்தையும் உற்பத்தியையும் அளவீடு செய்ய மொத்த நாட்டு உற்பத்தி (*GNP),* மொத்த உள்நாட்டு உற்பத்தி (*GDP),* மொத்த நாட்டு வருமானம் (*GNI)*, நிகர நாட்டு உற்பத்தி (*NNP)*, நிகர நாட்டு வருமானம் (*NNI)* ஆகியவற்றை பயன்படுத்துகிறோம். மத்திய புள்ளியியல் அமைப்பு, இந்தியாவில், நாட்டு வருமானத்தை கணக்கிடுகிறது.

உங்களுடைய கல்வியின் முன்னேற்றம் மற்ற மாணவர்களோடு உங்களது மதிப்பெண்கள் ஒப்பிட்டு கணக்கிடப்படுகிறது. அதே போல நாட்டினுடைய பொருளியல் செயல்பாடுகள் நாட்டின் வருமானத்தை அளவுகோலாகக் கொண்டு கணக்கிடப்படுகிறது. பல்வேறு காரணங்களுக்காக நாட்டு வருமானத்தைக் கணக்கிடுதல் மிக அவசியமாகும். நாட்டின் எதிர்காலத்தைப் பற்றி அறியவும், அரசுக்கு தேவையான பொருத்தமான முன்னேற்ற கொள்கைகளை உருவாக்கவும். பண்டங்களுக்கான எதிர்காலத் தேவையை நிறுவனங்கள் அறிந்து கொள்ளவும், உலக நாடுகளுடன் ஒப்பிடவும் பயன்படுகிறது.

மக்களின் வாழ்க்கைத் தரத்தை அறிந்து கொள்ள தலா வருமானம் அல்லது தனி நபர் வருமானம் ஒரு அளவு கோளாகப் பயன்படுகிறது. பொருளாதார முன்னேற்றம் சார்ந்த அறிஞர்கள் *GNP*யை மக்களின் நலத்தை அளவிடும் கருவியாக பயன்படுத்துவதில் பல குறைபாடுகள் உள்ளதாக கருதுகிறார்கள். அவர்கள் கூற்றுப்படி, மனித நலம் நாட்டு வருமானத்தை மட்டும் சார்ந்தது அல்ல. நாட்டு வருமானத்தை அளவிடுவதில் *GNP*, வறுமை, கல்வி, பொதுநலம், பாலின சமன்பாடு, மனித நலம் பற்றிய பல பிரச்சினைகள் ஆகியவற்றை தவிர்த்துவிட்டது. அவர்கள் நலத்தை மதப்பீடு செய்ய வேறு பல கருவிகளான மனித வளர்ச்சிக்

குறியீடுகளை பயன்படுத்துகின்றனர். செல்வந்த நாடுகள், நாட்டு வருமானத்தில் உயர்ந்தும், மனித வள மேம்பாட்டில் தாழ்ந்தும் காணப்படுகிறது. அதே போல ஏழை நாடுகள் மனித வள மேம்பாட்டில் உயர்ந்தும் நாட்டு வருமானத்தில் தாழ்ந்தும் காணப்படுகின்றார்கள். இந்தியாவில் *(GDP)* வேகமாக வளர்ச்சியடைந்தாலும் மனித வளர்ச்சி குறியீட்டைப் பொறுத்தவரை, மற்ற நாடுகளை விட குறைவாக காணப்படுகிறது.

**நாட்டு வருமானத்தின் இலக்கணம்**

நாட்டு வருமானம் என்பது ஒரு நாட்டில் ஓர் ஆண்டில் உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்கள் மற்றும் பணிகளின் மொத்த மதிப்பாகும். இது உற்பத்தியிலிருந்து கிடைக்கும் மொத்த வருமானம் அல்லது உற்பத்திக்காக செய்யப்படும் மொத்த செலவைக் குறிக்கும்.

**ஆல்பிரட் மார்ஷல்**

ஒரு நாட்டின் உழைப்பும் முதலும் அந்நாட்டின் வளங்களுடன் கூடி, ஓராண்டு காலத்தில் உற்பத்தி செய்யப்படும் பண்டங்கள் மற்றும் அனைத்து வகையான பணிகள் ஆகியவற்றின் மொத்த நிகர மதிப்பு... இது நாட்டின் நிகர ஆண்டு வருமானம் அல்லது நாட்டின் வருவாய் அல்லது நாட்டு வருமான ஈவு எனப்படுகிறது.

**இர்விங் பிஷ்ஷர்**

பண்டங்களிலிருந்தோ அல்லது சுற்றுப்புறச் சூழலிருந்தோ கடைசி நுகர்வோருக்கு கிடைக்கும் பணிகள் நாட்டு வருமான ஈவு அல்லது நாட்டு வருமானம் எனப்படும்.

**இந்திய நாட்டு வருமான கணக்கீட்டுக் குழு**

நாட்டு வருமானம் என்பது மறுமுறை கணக்கில் எடுத்துக் கொள்ளப்படாமல் ஒரு குறிப்பிட்ட காலத்தில் நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்கள் மற்றும் பணிகளின் மொத்த பண மதிப்பாகும்.

**பால் A.சாமுவேல்சன்**

மொத்த நாட்டு உற்பத்தி *(GNP)* என்பது ஒரு நாட்டில் மொத்தமாக

உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்கள் மற்றும் பணிகளின் ஒரு தெளிவான கணக்கீட்டு அளவு எனலாம். இதனை நுகர்வு, மொத்த முதலீடு, அரசு வாங்கும் பண்டங்கள் மற்றும் பணிகளின் அளவு நிகர ஏற்றுமதி ஆகியவற்றின் டாலர் மதிப்பின் (பணம்) கூட்டுத் தொகை எனலாம்.

மேற்கண்ட இலக்கணங்களில் பல வேறுபாடுகள் காணப்படினும், அடிப்படையில் நாட்டு வருமானம் என்பது ஒட்டுமொத்த நாட்டின் வருமானமாகும் என்பது தெளிவாக உள்ளது.

## அடிப்படைக் கருத்துக்கள் (Basic Concepts)

### மொத்த நாட்டு உற்பத்தி (GNP)

மொத்த நாட்டு உற்பத்தி என்பது அந்நாட்டு மக்களால் ஒரு வருட த்தில் (ஈட்டிய வருமானம்) உற்பத்தி செய்யப்பட்ட வெளியீடு களின் (பண்டங்கள் + பணிகள்) மதிப்பைக் குறிக்கும். வெளிநாட்டு முதலீடு மூலம் ஈட்டிய இலாபமும் இதில் அடங்கும்.

### மொத்த உள்நாட்டு உற்பத்தி (GDP)

ஒரு ஆண்டில் நாட்டின் எல்லைக்குள் உள்ள உற்பத்திக் காரணிகளால் உற்பத்தி செய்யப்பட்ட வெளியீடு (பண்டங்கள் + பணிகள்)களின் மொத்த மதிப்பைக் குறிக்கும். (உற்பத்தி காரணிகள் அந்நாட்டு குடிமகனுக்கோ அல்லது அயல்நாட்டுகாரருக்கோ சொந்தமாக இருக்கலாம்.)

மொத்த உள்நாட்டு உற்பத்தி = மொத்த நாட்டு உற்பத்தி - வெளிநாட்டிலிருந்து ஈட்டப்பட்ட நிகர வருமானம்.

மொத்த உள்நாட்டு உற்பத்தி, உற்பத்திக் காரணிகள் யாருக்கு சொந்தம் என்பதைவிட எங்கிருந்து வருமானம் ஈட்டப்பட்டது என்பதைக் குறிக்கும்.

### நிகர நாட்டு உற்பத்தி (NNP)

மொத்த நாட்டு உற்பத்தியிலிருந்து தேய்மானம் (*Depreciation)* போன்ற சிலவற்றை நீக்கிய பின் கிடைக்கும் பண மதிப்பு நிகர நாட்டு உற்பத்தியாகும். மொத்த நாட்டு உற்பத்தி என்பது அந்நாட்டு மக்களால் ஒரு வருடத்தில் ஈட்டிய வருமானம் மற்றும் உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்கள் மற்றும் பணிகளின்

மதிப்பைக் குறிக்கும். ஒரு வருட காலத்தில் உற்பத்தி அமைப்பு (*Plant)* மற்றும் இயந்திரங்கள் (முதல்) பழுதுபட்டிருக்கும். இவ்வாறு குறைவுபட்ட மூலதன சொத்துக்களின் (*Capital depreciation)* மதிப்பை மூலதனத்தின் தேய்மானம் என்கிறோம். எனவே மொத்த நாட்டு உற்பத்தியிலிருந்து மூலதனத் தேய்மானத்தைக் கழிப்பதின்மூலம் நிகர நாட்டு உற்பத்தி கிடைக்கும்.

நிகர நாட்டு உற்பத்தி *NNP* = மொத்த நாட்டு உற்பத்தி – தேய்மானம் ஆகும்.

## நிகர உள்நாட்டு உற்பத்தி (NDP)

மொத்த உள்நாட்டு உற்பத்தியிலிருந்து தேய்மானம் போன்ற சிலவற்றை நீக்கிய பின் கிடைக்கும் பணமதிப்பு நிகர உள்நாட்டு உற்பத்தியாகும் மொத்த உள்நாட்டு உற்பத்தியிலிருந்து தேய்மானத்தைக் கழித்து பின் கிடைப்பது நிகர உள்நாட்டு உற்பத்தியாகும்.

நிகர உள்நாட்டு உற்பத்தி = மொத்த உள்நாட்டு உற்பத்தி - தேய்மானம்

## தலா வருமானம் அல்லது தனி நபரின் மொத்த உள்நாட்டு உற்பத்தி (GDP per head)

தலா வருமானம் என்பது மக்களின் வாழ்க்கைத் தரத்தை உணர்த்தும் ஒரு கருவியாகும். உண்மையான தலா வருமானம் உயர்ந்தால் மக்களின் பொதுவான வாழ்க்கைத் தரம் உயர்ந்ததாகக் கருதப்படும். மொத்த உள்நாட்டு உற்பத்தியில் சிலவற்றை சரிசெய்வதன் மூலம் இது பெறப்படுகிறது. தலா வருமானம் என்பது மொத்த உள்நாட்டு உற்பத்தியை மொத்த மக்கள் தொகையால் வகுக்க கிடைப்பதாகும்.

$$\textbf{தலா வருமானம்} = \frac{\textbf{மொத்த உள்நாட்டு உற்பத்தி}}{\textbf{நாட்டின் மொத்த மக்கள் தொகை}}$$

## மொத்த உள்நாட்டு உற்பத்தி – மொத்த நாட்டு உற்பத்தி

மொத்த உள்நாட்டு உற்பத்தி ஒரு நாட்டின் உற்பத்தித் திறனை குறிப்பதாகும். மொத்த நாட்டு உற்பத்தி மக்களின் வாழ்க்கை தரத்தைக் சுட்டி காட்டும் மொத்த உள்நாட்டு உற்பத்திக்கும் மொத்த நாட்டு உற்பத்திக்கும்

இடையே உள்ள முக்கியமான வேறுபாடு அந்நாட்டின் இயல்பைப் பொறுத்து அமையும். (உம்) ஒரு நாடு அயல்நாட்டில் வாழும் மக்களின் வருமானம், மற்றும் குறிப்பிடத்தக்க அளவு பன்னாட்டு நிறுவனங்களின் உற்பத்தியையும் பெற்றிருப்பின் (புறக்காரணிகளால் ஏற்படும் உற்பத்தி) அந்நாட்டின் மொத்த நாட்டு உற்பத்தி, மொத்த உள்நாட்டு உற்பத்தியை விட அதிகமாக இருக்கும். இவ்வாறு இல்லையெனில், இரண்டுக்கும் உள்ள வேறுபாடு முக்கியத்துவம் பெறாது.

பல நாடுகள் வெளிநாட்டு நிறுவனங்களைக் கொண்டுள்ளது. இந்தியாவில் சென்னையில் உள்ள அமெரிக்க போர்டு மோட்டார் தொழிற்சாலையின் வருமானம், இந்தியாவின் மொத்த உள்நாட்டு உற்பத்தியோடு கணக்கிடப்படுமே அல்லாமல் அமெரிக்காவின் மொத்த உள்நாட்டு உற்பத்தியோடு அல்ல. ஆனால் அந்நிறுவனத்தின் லாபம், அமெரிக்காவுக்கு அனுப்பப்பட்டு, அமெரிக்காவின் மொத்த நாட்டு உற்பத்தியோடு கணக்கிடப்படும். அதே போல் அயல்நாட்டிலிருந்து ஈட்டப்படும் நிகர காரணி வருமானத்தை நம்முடைய மொத்த உள்நாட்டு உற்பத்தியோடு சேர்த்து மொத்த நாட்டு உற்பத்தி கணக்கிடப்படுகிறது.

இக்காரணி உள்ளிடுகள் இந்தியாவிற்கு சொந்தமானவை. அதாவது வெளிநாட்டு வாழ் இந்தியர்களின் வருமானம் நமது மொத்த உள்நாட்டு உற்பத்தியோடு சேர்த்து (*GDP*), மொத்த நாட்டு உற்பத்தி (*GNP*) கணக்கிடப்படுகிறது.

### அன்றாட விலை மற்றும் நிலையான விலையில் நாட்டு வருமானம்

நாட்டு வருமானத்தை அன்றாட விலையிலும் நிலையான விலையிலும் கணக்கிடலாம். அன்றாட விலையில் நாட்டு வருமானம் என்பது, வெளியீடு பண்டங்களின் மதிப்பை அன்றைய அங்காடி விலையில் கணக்கிடப்படுவதாகும். அன்றாட விலையானது உண்மை மதிப்பைவிட, வரி, பணவீக்கம் (அல்லது விலை உயர்வு) போன்றவற்றால் உயர்வாக இருக்க வாய்ப்புக்கள் உண்டு. ஆகவே அன்றாட விலையில் கணக்கிடப்படும் நாட்டு வருமானத்தில் பண வீக்கம், வரிகள் போன்றவற்றின் தாக்கம் அதிகமாக இருக்கும்.

எல்லா சமுதாயத்திலும் பண வீக்கம் ஒரு பொதுவான இயல்பாக காணப்படுவதால், அதன் தாக்கத்திலிருந்து உற்பத்தி மற்றும் வருமானத்தின் உயர்வை கழித்து நாட்டு வருமானத்தை கணக்கிடுதல் அவசியமாகிறது. எனவே

நிலையான விலையில் நாட்டு வருமானத்தை கணக்கிடுதல் மூலம் சில தேவையான மாற்றங்களை செய்து பணவீக்கத்தின் தாக்கத்தை நீக்கலாம்.

நிலையான விலையில் நாட்டு வருமானம், வருமானத்தின் வாங்கும் சக்தியின் அடிப்படையில் கணக்கிடப்படுவதால் இது உண்மையான நாட்டு வருமானம் எனப்படுகிறது.

ஓர் ஆண்டு காலத்தில் ஒரு நாட்டில் உற்பத்தியாகும் பண்டங்கள் மற்றும் பணிகளின் மதிப்பை அடிப்படை ஆண்டில் நிலவிய விலையைக் கொண்டு கணக்கீடு செய்தால் கிடைக்கப் பெறும் மதிப்பு, நிலையான விலையில் கணக்கிடப்பட்ட நாட்டு வருமானம் எனப்படும். நிலையான விலை என்பது தேர்ந்தெடுக்கப்பட்ட அடிப்படை ஆண்டில் நிலவும் விலையாகும்.

### நாட்டு வருமானத்தை படிப்பதின் அவசியம்

நாட்டு வருமான கணக்கீடு சமுதாயம் உற்பத்தி, வாணிபம், நுகர்வு, கொள்கையை உருவாக்குதல் போன்ற பல காரணங்களுக்கு அவசியமாகிறது.

1. பொருளாதார நிலையை அளவிடவும், நாட்டின் பொருளாதார செயல்பாடுகளை கணக்கிடவும் நாட்டு வருமானம் பயன்படுகிறது.

2. பல நாடுகள், மற்றும் பல காலங்களில் பொருளாதார வளர்ச்சியின் வேகம் மற்றும் போக்கை அளவிட நாட்டு வருமானம் அவசியமாகிறது.

3. அளவு (*Structure)*, பொருளாதார உற்பத்தி அமைப்பு முறைகளையும், துறை வாரியான பங்களிப்பு பற்றியும் அறிந்து கொள்ள நாட்டு வருமானம் பயன்படுகிறது.

4. பொருளாதார முன்னேற்றத்தின் எதிர்கால போக்கை அறிந்து கொள்ள பயன்படுகிறது.

5. வளர்ச்சி விகிதத்தை அதிகரிக்க தகுந்த பொருளாதார திட்டங்களையும் கொள்கைகளையும் வகுக்க அரசுக்கு உதவுகிறது.

6. பல துறைகளில் முன் செயல்பாடுகளைப் பொறுத்து முன்னேற்ற இலக்குகளை நிர்ணயிக்க பயன்படுகிறது.

7. பண்டங்களின் எதிர்காலத் தேவையை முன் கூட்டியே அறிந்து கொள்ள நிறுவனங்களுக்கு உதவுகிறது.

8. மக்களின் வாழ்க்கைத் தரத்தை மற்ற நாடுகளோடு ஒப்பிட்டு அறிந்து கொள்ள பயன்படுகிறது.

**வருமான ஓட்டம் (Flow of Income)**

நாட்டு வருமான கணக்கீட்டை ஆராய்வதற்கு முன் வருமான ஓட்டத்தைப் பற்றி அறிவது மிக அவசியமான ஒன்றாகும். வருமான ஓட்டத்தை மிக எளிய முறையில், நிறுவனம் அல்லது உற்பத்தியாளர் மற்றும் இல்லங்கள் அல்லது நுகர்வோர் மூலம் விளக்கலாம். உற்பத்தி சாதனங்களை (நிலம், உழைப்பு, மூலதனம், தொழில் அமைப்பு) மக்கள் பெற்றிருக்கிறார்கள். பண்டங்களையும் பணிகளையும் உற்பத்தி செய்ய உற்பத்தியாளர்கள் உற்பத்தி காரணிகளை பயன்படுத்துகிறார்கள். அப்பண்டங்களும் பணிகளும் மக்களால் வாங்கப்படுகின்றன.

படம் 4.1

**இரு பகுதிகளுக்கான வருமானச் சுழல் ஓட்டம்**



மக்கள் உற்பத்திக் காரணிகளை பெற்றிருக்கிறார்கள். அதை உற்பத்தியாளர்களுக்கு அளிக்கிறார்கள். இவ்வுற்பத்திக் காரணிகளைப் பயன்படுத்தி நிறுவனங்கள் பண்டங்களையும் மற்றும் பணிகளையும் உற்பத்தி செய்கின்றன. அவ்வாறு உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களும் மற்றும் பணிகளும் நுகர்வோரால் (மக்கள்) வாங்கப்படுகின்றன. உற்பத்திக் காரணிகளின் பணிகளைப் பயன்படுத்தியதற்காக மக்கள் காரணி வருமானத்தை வாரம் (நிலம்), கூலி (உழைப்பு) மற்றும் வட்டி (முதல்) என்ற வடிவத்தில் பெறுகிறார்கள். இந்த வருமானம் மீண்டும் உற்பத்தியாளர்களுக்கு நுகர்வுச் செலவு மூலமாக போய்ச் சேருகிறது. (இவ்வாறு வருமானம் உற்பத்தியாளரிடமிருந்து மக்களுக்கும், மக்களிடமிருந்து உற்பத்தியாளருக்கும் சென்று கொண்டே இருப்பதற்கு வருமான ஓட்டம் என்று பெயர்.)

இவ்வருமான ஓட்டம், பண வருமான ஓட்டம் மற்றும் உண்மை வருமான ஓட்டம் என்ற இரு பகுதிகளைக் கொண்டது.

படம் 1ல் காட்டப்பட்டுள்ள உள் சூழல் ஓட்டம் உள்ளீடுகள் (காரணிகள்) மற்றும் வெளியீடுகளை (பண்டங்கள் மற்றும் பணிகள்) குறிப்பதால் உண்மை வருமான ஓட்டம் என்று அழைக்கப்படுகிறது.

மக்கள் காரணி வருமானத்தைப் பணமாகப் பெறுகிறார்கள். அவ்வருமானம் உற்பத்தியாளர்களுக்கு நுகர்வுச் செலவு மூலமாகச் செல்கிறது. இதை வெளி ஓட்டம் காட்டுகிறது. வருமானம் பெறுவதும், செலவு செய்வதும் பணத்தின் மூலமாக நடைபெறுவதை இவ் ஓட்டம் காட்டுகிறது. இதற்கு பணப் பொருளாதாரம்அல்லது பண ஓட்டம் எனப் பெயர். நாட்டு வருமானத்தை கணக்கிடுவதில் கவனிக்க வேண்டிய முக்கிய கருத்து, மக்கள் பெறும் வருமானம் ($Y$) அவர்கள் செய்யும் நுகர்வுச் செலவிற்கு ($C$) சமமாக இருக்கும். $Y = C$

இந்த எளிய வருமான ஓட்டம், நாட்டு வருமானத்தின் கூறுகளான சேமிப்பு ($S$), முதலீடு ($I$). அரசின் செலவு ($G$), நிகர இறக்குமதி மீதான செலவு ($X-M$) ஆகியவற்றைச் சேர்க்காமல் விளக்கப்பட்டுள்ளது. இவைகளனைத்தையும் சேர்த்தால் $Y=C$ என்பது $Y = C + I + G + (X - M)$ என்றாகும்.

நாட்டு வருமானம் என்பது, நுகர்வோர் ($C$) முதலீட்டாளர் (I) அரசு ($G$) மற்றும் அயல்நாட்டு வாணிபம் ($X-M$) ஏற்றுமதி– ($X$) - இறக்குமதி–($M$) ஆகிய

நான்கு கூறுகளின் வருமானங்கள் அல்லது செலவினங்களின் கூட்டுத் தொகையாகும்.

**நாட்டு வருமான கணக்கீட்டு முறைகள்**

நாட்டு வருமானத்தை மூன்று வழிகளில் கணக்கிடலாம். அவை யாவன

1. உற்பத்தி முறை

2. வருமான முறை

3. செலவின முறை

*GDP* என்பது நாட்டின் மொத்த உற்பத்தியாகும். நாட்டின் மொத்த செலவு அல்லது மொத்த வருமானம் ஆகியவற்றை அளக்கும் அளவாகும்.

படம் **4.1** மக்களால் பெறப்படும் காரணி வருமானமானது பண்டங்களையும் பணிகளையும் வாங்குவதற்காக அவர்கள் மேற்கொள்ளும் செலவினங்களை தெளிவாகக் காட்டுகிறது. எனவே வருமானம் செலவிற்கு சமம். செலவானது மொத்த உற்பத்தி செய்யப்பட்ட பண்டங்களின் மதிப்பிற்கு சமம்.

| வருமானம் | | செலவு | | உற்பத்தி |
|---|---|---|---|---|
| $Y$ | $=$ | $E$ | $=$ | $O$ |

மேற்கூறிய வருமான ஓட்டமானது நாட்டு வருமானத்தின் மற்ற கூறுகளான முதலீடு *(I)*, அரசு *(G)*, அயல்நாட்டு வாணிபம் *(X - M)* ஆகியவற்றை சேர்ப்பதன் மூலம் விரிவாக்கப்பட்டுள்ளது. இவ்வாறு விரிவாக்கப்பட்ட ஓட்டத்திலிருந்து மக்களின் சேமிப்பு, வரிகள், இறக்குமதி மீதான செலுத்துகை முதலியவற்றை கழிக்க வேண்டும். எனவே இவை வருமான ஓட்டத்தில் ஏற்படும் கசிவுகளாகும். அதேபோல முதலீட்டுச் செலவு, அரசு செலவு, வாணிபத்தின் மீதான நிகர செலவு ஆகியவற்றை வருமான ஓட்டத்தில் சேர்க்க வேண்டும். இவைகள் 'உட்செலுத்துகை' என அழைக்கப்படுகின்றன. ஒரு வருடத்தில் எனினும் ஒரு ஆண்டின் அனைத்து கசிவுகளையும் *(leakages)* மற்றம் உட்செலுத்துகைகளையும் சேர்த்தால் கிடைக்கும் பொருளாதார மொத்த வருமானக் கூறுகளின் கூட்டுத் தொகையானது, மொத்த செலவு அல்லது மொத்த உற்பத்திக்குச் சமமாகும். ஆகவே இம்மூன்று முறைகளும் ஒரே மாதிரியான முடிவைத் தரும்.

**உற்பத்தி முறை (Output or Product Method)**

ஓராண்டு காலத்தல் அனைத்து தொழில் நிறுவனங்களும் உற்பத்தி செய்த வெளியீடுகளின் (பண்டங்கள் மற்றும் பணிகளின்) மொத்த மதிப்பின் கூட்டுத் தொகையே, மொத்த உள்நாட்டு உற்பத்தியாகும். இருமுறை கணக்கிடுதல் இம்முறையில் உள்ள மிகப்பெரிய சிக்கலாகும்.

பல நிறுவனங்களின் வெளியீடு பண்டம், சில நிறுவனங்களுக்கு உள்ளீடு பண்டமாகிறது. (உ.ம்.) டயர் தொழிற்சாலையின் வெளியீடு பண்டமாகிய டயர் இருசக்கர வாகன தொழிற்சாலைக்கு உள்ளீடு பண்டமாகும். இரு நிறுவனங்களின் மொத்த உற்பத்தியை கணக்கிடும் பொழுது, டயரின் மதிப்பு இருமுறை கணக்கிடப்படுகிறது. உற்பத்தியின் ஒவ்வொரு நிலையிலும் பண்டங்களின் கூட்டப்பட்ட மதிப்பை தொகுப்பதன் மூலமாக இச்சிக்கலைத் தவிர்க்கலாம். அல்லது இறுதிப்பண்டத்தின் (முழுமையடைந்த) மதிப்பை கூட்டுவதன் மூலமாக நாட்டு வருமானத்தைப் பெறலாம்.

**வருமான முறை (Income Method)**

உற்பத்தியில் ஈடுபட்டுள்ள உற்பத்தி காரணிகள் பெறும் வருமானத்தை கூட்டுவதன் மூலமாக மொத்த உள்நாட்டு உற்பத்தி *(GDP)* கணக்கிடப்படுகிறது.

1. கூலி, மற்றும் சம்பளம்.
2. சுய தொழில் புரிவோரின் வருமானம்
3. தொழில்துறைகளின் இலாபம் மற்றும் ஈவு *(Profit & Dividend)*
4. வட்டி
5. வாரம்
6. அரசு நிறுவனங்களின் வருமானம்
7. அயல்நாட்டு வாணிபத்தின் மூலம் ஈட்டிய நிகர வருமானம்

ஆகிய வருமானங்கள் கூட்டுத் தொகையே மொத்த நாட்டு வருமானமாகும். இவை அனைத்தும் காரணி வருமானம் எனப்படும். சில உற்பத்தித் துறைகளில் உள்ளீடுகளாகப் பயன்படுத்தப்பட்டு வெளியீடுகளை பெற்றமைக்காக கொடுக்கப்படும் வருமானம் காரணி வருமானமாகும்.

**செலவின முறை (Expenditure Method)**

செலவின முறையில் நாட்டில் மேற்கொள்ளப்படும் அனைத்து செலவுகளின் கூட்டுத் தொகையே மொத்த உள்நாட்டு உற்பத்தியாக (*GDP)* கணக்கிடப்படுகிறது. நாட்டின் முக்கிய செலவுகளின் கூறுகள் பின்வருமாறு

*C* - நுகர்வுச் செலவு

*I* - உள்நாட்டு முதலீடு

*G* - அரசு செலவுகள்

*X* - ஏற்றுமதி செய்யப்பட்ட பண்டங்கள் மற்றும் பணிகள்

*M* - இறக்குமதி செய்யப்பட்ட பண்டங்கள் மற்றும் பணிகள்

*NR* - வெளிநாடுகளில் உள்ள சொத்துக்களின் நிகர வருமானம்.

மேற்கண்ட ஒட்டுமொத்த செலவுகளின் கூட்டுத் தொகையே நாட்டு வருமானம் ஆகும்.

$$GDP = E = C + I + G + (X-M)$$

*E* என்பது ஒட்டுமொத்த செலவுகள்.

மேற்கூறிய மூன்று முறைகளும் ஒரே மாதிரியான முடிவையே தருகிறது. நடைமுறையில், இயந்திர நிலையில் (*Inventory Level)* ஏற்படும் மாற்றம், கால நிலையில் ஏற்படும் மாற்றங்களினாலும் சிறு வேறுபாடுகள் தோன்றும்.

**நாட்டு வருமானத்தின் சில கருத்துக்கள் பின்வருமாறு**

(*Net National Product) NNP = GNP* - தேய்மானம்

*(Net National Income) NNI = NNP* - மறைமுகவரிகள்

*PI = NNI* – நிறுத்தி வைக்கப்பட்ட நிகர வருமானம், நிறுவனங்களின் வரி, பொதுக்கடனுக்கு செலுத்தப்படும் வட்டி.

*PDI = PI* - தனி வரி

இங்கு *GNP* - என்பது மொத்த நாட்டு உற்பத்தி

*NNP* – நிகர நாட்டு உற்பத்தி

*NNI* – நிகரநாட்டு வருமானம்

*P*I – தனி மனித வருமானம்

*PD*I – செலவிடத் தகுதியான தனிமனித வருமானம்

### நாட்டு வருமானத்தை கணக்கிடுவதால் ஏற்படும் பிரச்சனைகள்

நாட்டு வருமானத்தை கணக்கிடுவதில் பல பிரச்சனைகள் உள்ளன. இருமுறை கணக்கிடுதல் ஒரு முக்கியமான பிரச்சனையாகும். நாட்டு வருமானத்தை கணக்கிட சீரிய முறைகள் பல இருப்பினும், இருமுறை கணக்கிடுதலை தவிர்த்தல் கடினமானது. இப்பிரச்சனைகளில் சிலவற்றை இங்கு காண்போம்.

### கருப்பு பணம் (Black Money)

சட்டத்திற்கு புறம்பான நடவடிக்கைகள், தொழில்கள், லஞ்ச லாவண்யம் போன்றவை அதிகமாகக் காணப்படும் நாடுகளில் கருப்புப் பணத்தின் புழக்கம் 'இணைப் பொருளாதாரம்' என்று கூறும் அளவிற்கு விரிவடைந்துள்ளது. இக்கருப்புப்பண ஆதிக்கமானது, அதிகார பூர்வமான பொருளாதாரத்திற்கு இணையாக உள்ளது. கருப்புப்பணம் கணக்கில் வராததால், மொத்த உள்நாட்டு உற்பத்தி இந்த இணைப் பொருளாதாரத்தை கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. இந்தியாவில் கருப்புப் பணமானது எல்லா நிலைகளிலும் ஊடுறுவி இருப்பதால் சமுதாயத்தை மட்டுமல்லாது மக்களின் அன்றாட வாழ்க்கை நிலையையும் பாதிக்கிறது. மொத்த உள்நாட்டு உற்பத்தியில் கறுப்புப் பணமானது **1950**க்கிடையே **3** சதவிகிதமாக இருந்தது. **1995–96**ல் **40** சதவிகிதமாக வளர்ந்துவிட்டது.

கிராமப் பகுதிகளில் பெரும்பாலான பரிமாற்றங்கள் முறையற்று நடப்பதால் அப்பொருளாதாரம் பணம் சாரா பொருளாதாரம் (*Non-monetized economy)* என்று அழைக்கப்படுகிறது. வளர்ந்து வரும் நாடுகளில் காணப்படும்

இத்தகைய பொருளாதாரம் உள்நாட்டு உற்பத்தியின் அளவை இதனுடைய உண்மை நிலையைவிட குறைவாகக் காட்டுகிறது.

**வளரும் பணிகளின் துறை (Growing Service Sectors)**

தற்காலத்தில் பணிகள் துறையானது, வேளாண்மை மற்றும் தொழில் துறையைவிட வேகமாக வளர்ந்து வருகிறது. பல புதிய பணிகளான வெளித்திறன் நடவடிக்கைகள் *(Business Process Outsourcing (BPO)* வேகமாக வளர்ந்து வருகின்றது. சட்ட ஆலோசனை, மருத்துவப்பணி, நிதி உதவி, வணிக பணிகள் மற்றும் பணித்துறைகளின் கூடுதல் மதிப்பு முழுவதுமாக துல்லியமாக கணக்கிடப்படாததால் நாட்டு வருமானம் குறைத்து மதிப்பிடப்படுகிறது.

**இல்லத்தரசிகளின் பணிகள்**

வீட்டு வேலைகள், வீட்டை பராமரித்தல், சமூகப் பணிகளின் மதிப்பை நாட்டு வருமானம் கணக்கில் எடுத்துக் கொள்ளவில்லை. நாட்டு வருமான மதிப்பீட்டில் நம் நாட்டு பெண்கள் வீட்டில் செய்யும் மதிப்பு மிக்க பணிகளை மதிப்பற்ற பணிகளாக கருதப்படுகிறது.

**சமூகப் பணிகள்**

தானே முன் வந்து செய்பவர்களின் பணிகள் மற்றும் ஊதியமில்லாத சமூகப் பணிகளின் மதிப்பையும் புறக்கணித்துவிட்டது.

பல்லாயிரக்கணக்கான ஏழைகள், ஆதரவற்றோர்கள், அனாதைகள், நோயாளிகள் ஆகியோர்களுக்கு அன்னை தெரசாவின் பணி, மதிப்புமிக்கது. ஆனால் அது மொத்த உள்நாட்டு உற்பத்தி கணக்கீட்டில் (*GDP)* சேர்த்துக் கொள்ளப்படவில்லை.

**சுற்றுச்சூழல் மதிப்பு (Environmental Cost)**

நாட்டு வருமான கணக்கீடு, சுற்றுச்சூழலை பாதிக்கும் தொழிற்சாலைகள் என்றும், சுற்றுச்சூழலை பாதிக்காத தொழில்கள் என்றும் வேறுபடுத்தவில்லை. சுற்றுச்சூழலை மாசுபடுத்தும் தொழிற்சாலைகளின் செலவினம் (*Cost)* நாட்டு வருமானக் கணக்கீட்டில் எடுத்துக் கொள்ளப்படவில்லை.

## இந்தியாவில் நாட்டு வருமானத்தின் புள்ளி விவரங்கள் (National Income Statistics in India)

நாட்டு விடுதலைக்குப் பிறகு, முறையான நாட்டு வருமான கணக்கீட்டு அமைப்பு 1960–களில் ஏற்படுத்தப்பட்டது. இந்திய, நாட்டு வருமான கணக்கீட்டு புள்ளியியல் *(NAS)* அமெரிக்காவின் நாட்டு வருமான கணக்கீட்டு அமைப்பை (1968) பின்பற்றியது. நாட்டு வருமான கணக்கீட்டு குழுவின் பரிந்துரையின்படி (1954) மத்திய புள்ளியியல் அமைப்பு, புள்ளி விவரங்களின் தரத்தை உயர்த்த, தொடர்ந்து பல முயற்சிகளை மேற்கொண்டது. அடிப்படை ஆண்டை அண்மைகால வரிசைக்கு மாற்றியது அதன் முயற்சிகளில் ஒன்றாகும். மத்திய புள்ளியியல் அமைப்பு, 1970–71ற்கு அடிப்படை ஆண்டை மாற்றி நாட்டு வருமான கணக்கீட்டை மேற்கொண்டது.

மேலும், உயர்த்தப்பட்ட புள்ளி விவரங்கள் மற்றும் விரிவாக்கம் மூலம் – *CSO* அடிப்படை ஆண்டை 1980–81க்கும் மேலும் 1993–94 மாற்றியமைத்தது. தற்போது, ஆறு வருடத்திற்குள் அடிப்படை ஆண்டை 1999–2000க்கு மாற்றியமைத்தது.

### நாட்டு வருமானத்தின் போக்கு

நாட்டு வருமானம் என்பது நாட்டின் பொருளாதார வளர்ச்சியையும் அதன் செயல்பாடுகளையும் அளக்கும் ஒரு கருவியாகும். இந்தியாவின் பொருளாதார முன்னேற்றத்தை நாட்டு வருமானத்தின் அளவு, வளர்ச்சி, மற்ற துறைகளின் பங்களிப்பு மூலம் தெரிந்து கொள்ள முடியும். பட்டியல் *4.1*ல் மொத்த உள்நாட்டு உற்பத்தியின் போக்கை 1950லிருந்து *2005*வரை காட்டப்பட்டுள்ளது. இந்த கால கட்டத்தில் நிலையான விலையின் அடிப்படையில் நாட்டு வருமானம் 15%, உயர்ந்துள்ளது. நாட்டு வருமானத்தின் வளர்ச்சி, விகிதம் 1950–80ல் 3.5 சதவிகிதத்திலிருந்து, 1980–2005ல் 5.6 சதவிகிதமாக உயர்ந்துள்ளது.

**பட்டியல் 4.1**

**இந்தியாவின் நாட்டுவருமான வளர்ச்சி** (சதவீதத்தில்)

| துறை | *1950-1980* | *1980-2005* |
|---|---|---|
| *GDP* மொத்தம் | *3.5* | *5.6* |
| *GDP* தலா வருமானம் | *1.4* | *3.6* |

ஆதாரம் : மத்திய புள்ளியியல் அமைப்பு

## தலா வருமானத்தின் போக்கு

படம் 4.1ல் தலாவருமானத்தின் போக்கு தெளிவாக காட்டப்பட்டுள்ளது. நிலையான விலையின் அடிப்படையில் கணக்கிடப்பட்ட தலா வருமானம், 1950 *to 2005*க்குள் 5 மடங்கு அதிகரித்துள்ளது. தலாவருமான வளர்ச்சி விகிதமானது அதே கால கட்டத்தில் 1.4 சதவிகிதத்திலிருந்து 3.6 சதவிகிதமாக உயர்ந்துள்ளது. தலா வருமானம், மக்களின் வாழ்க்கைத் தரத்தை துல்லியமாக அளவிடும் கருவியல்ல. மக்களின் உண்மையான வருமானம் தலா வருமானத்தைவிட அதிகமாகவோ அல்லது குறைவாகவோ இருக்கலாம். வறுமை, வருமான ஏற்றத்தாழ்வுகளை நீக்கும் நடவடிக்கைகள் நாட்டின் உண்மையான வருமானப் பகிர்வை அறிந்து கொள்ள உதவுகிறது.

## துறை வாரியான நாட்டு வருமானம்

நாட்டு வருமானம் பல துறைகளின் மூலம் பெறப்படுகிறது. பொதுவாக இவற்றை மூன்று முக்கியத் துறைகளாக, முதன்மைத் துறை (வேளாண்மை) 2. இரண்டாம் துறை (தொழில்) 3. பணிகள் (அ) சார்புத்துறை என்று பிரிக்கலாம். பொருளாதார முன்னேற்றத்தின் தொடக்க காலத்தில் நாட்டு வருமானத்தில் முதன்மைத் துறையின் பங்களிப்பு அதிகம். பொருளாதாரம் முன்னேற்றம் அடைய ஆரம்பித்தவுடன் வேளாண்மையின் பங்கு குறைந்தது. தொழிற் சாலைகளின் பங்கு அதிகரிக்க ஆரம்பித்தது. பொருளாதாரம் அதிக அளவில் முன்னேற்றமடைந்த பிறகு, பணிகள் துறையின் பங்களிப்பு நாட்டு வருமானத்தில் உயர்ந்தது.

**பட்டியல் 4.2**

**நாட்டு வருமானத்தில் துறை வாரியான பங்களிப்பு** (சதவிகிதத்தில்)

| வருடம் | முதன்மைத் துறை | இரண்டாம் துறை | சார்புத் துறை | மொத்தம் GDP |
|---|---|---|---|---|
| *1950-51* | *59* | *13* | *28* | *100* |
| *1980-81* | *42* | *22* | *36* | *100* |
| *2002-03* | *24* | *24* | *52* | *100* |

ஆதாரம் : மத்திய புள்ளியியல் அமைப்பு

பட்டியல் 4.3

**இந்திய நாட்டுவருமானத்தில் துறை வாரியான வளர்ச்சி வீதம்**

(சதவீதத்தில்)

| துறைகள் | 1950 - 80 | 1980 - 05 |
|---|---|---|
| முதன்மைத்துறை | *2.2* | *2.9* |
| இரண்டாம்துறை | *5.3* | *6.1* |
| சார்புத்துறை | *4.5* | *7.1* |

ஆதாரம் : மத்திய புள்ளியியல் அமைப்பு

அட்டவணை **4.2**ல் நாட்டு வருமானத்தின் துறை வாரியான பங்களிப்பு காட்டப்பட்டுள்ளது. முதன்மைத் துறையின் பங்கு நாட்டு வருமானத்தில் **1950–51**ல் **59** சதவிகிதத்திலிருந்து **2002–03**ல் **24** சதவிகிதமாக குறைந்துவிட்டது. இருப்பினும் தொழில்துறையிலிருந்து கிடைக்கும் பங்கு எதிர்பார்த்த அளவிற்கு உயரவில்லை. சார்புத் துறையின் பங்கு நாட்டு வருமானத்தில் **52** சதவிகிதமாக உயர்ந்துள்ளது. இம்மூன்று துறைகளின் வளர்ச்சி விகிதம் அட்டவணை **4.3**ல் காட்டப்பட்டுள்ளது.

## இந்திய நாட்டு வருமானம் – உலக நாடுகளுடன் ஒரு ஒப்பீடு

இந்தியா சுதந்திரமடைந்ததிலிருந்து இன்று வரை இந்தியாவின் செயல் திறனை நாம் ஒப்பீடு செய்துள்ளோம். உலக நாடுகளுடன் ஒப்பீடு செய்யும்பொழுது இந்தியாவின் செயல்திறன் எவ்வாறு உள்ளது?

இந்தியாவின் தலா வருமானம் தேர்ந்தெடுக்கப்பட்ட சில நாடுகளுடன் ஒப்பிட்டு அட்டவணை **4.4**ல் காட்டப்பட்டுள்ளது. *2001*-ல் இந்தியாவின் தலா வருமானம் உயர்ந்த மற்றும் நடுத்தர வருமானமுள்ள நாடுகளுடன் ஒப்பிட்டு கீழே காட்டப்பட்டுள்ளது. இந்தியாவின் தலா வருமானம் **460** டாலர் ஆகும். இது மற்ற ஏழை நாடுகளின் சராசரி தலா வருமானத்தைவிட **(430** டாலர்**)** சிறிது உயர்வாக உள்ளது.

அட்டவணை 4.4

**நாட்டு வருமானம் உலக நாடுகளுடன் ஒப்பீடு (2001)**

| **நாடுகள்** | **தலா வருமானம் (டாலர்)** |
|---|---|
| உயர்ந்த வருமான நாடுகள் | *26,710* |
| நடுத்தர வருமானம் உடைய நாடுகள் | *1850* |
| குறைந்த வருமானம் உடைய நாடுகள் | *430* |
| ***இந்தியா*** | ***460*** |

# பயிற்சி

# பகுதி – அ

**I. சரியான விடையைத் தேர்ந்தெடுக்கவும் :**

*1.* ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சி நிலை இவ்வாறு குறிப்பிடப்படுகிறது

அ. பொதுவான விலை ஏற்றம் ஆ. நாட்டு வருமானம் அதிகரித்தல்

இ. சேமிப்பு அதிகரித்தல் ஈ. முதலீடு அதிகரித்தல்

*2.* தலா வருமானம் இவ்வாறு கணக்கிடப்படுகிறது.

அ. மொத்த உள்நாட்டு உற்பத்தியை (*GDP)* மக்கள் தொகையில் வகுத்தல்

ஆ. மொத்த நாட்டு உற்பத்தியை (*GNP)* மக்கள் தொகையில் வகுத்தல்

இ. மொத்த நாட்டு உற்பத்தியை (*GNP)* மக்கள் தொகையில் பெருக்குவது

ஈ. மொத்த நாட்டு உற்பத்தியை (*GNP)* வேலைக்குச் செல்வோரின் எண்ணிக்கையில் பெருக்கி வருகிறது.

3. தேய்மானம் தவிர்த்து முடிவுற்ற (இறுதிப்) பண்டங்கள் மற்றும் பணிகளின் மொத்த மதிப்பு

அ. நிகர உள்நாட்டு உற்பத்தி (*NDP)*
ஆ. மொத்த உள்நாட்டு உற்பத்தி *(GDP)*
இ. நிகர நாட்டு உற்பத்தி (*NNP)*
ஈ. மொத்த நாட்டு உற்பத்தி (*GNP)*

4. நிகர நாட்டு உற்பத்திக்கும் (*NNP)* நிகர உள்நாட்டு உற்பத்திக்கும் இடையே உள்ள வேறுபாடானது

அ. தேய்மானம்

ஆ. உலகின் பிற பகுதிகளிலிருந்து நடப்பு மாற்றம்

இ. மறைமுக வரி

ஈ. வெளிநாடுகளிலிருந்து வரும் நிகரக் காரணி வருவாய்

5. எல்லாராலும் புரிந்துகொள்ளக்கூடிய நாட்டு வருமானம் என்பது

அ. மொத்த நாட்டு உற்பத்தி (*GNP)*
ஆ. நிகர நாட்டு உற்பத்தி (*NNP)*
இ. மொத்த உள்நாட்டு உற்பத்தி (*GDP)*
ஈ. நிகர உள்நாட்டு உற்பத்தி (*NDP)*

## II. கோடிட்ட இடங்களை நிரப்புக.

6. நாட்டு வருமானத்தைக் கணக்கிடும்போது நிகர மதிப்பையும் கூட்டி கணக்கிடும் முறையை ........... என்றும் அழைக்கிறோம்.

7. நிலையான மூலதனத்தின் நுகர்வுதனை *GNP* யிலிருந்து .................. நிகர நாட்டு வருவாய் *(NNP)* கிடைக்கும்.

8. நிலையான விலையில் நாட்டு வருமானத்தைக் கணக்கிடும்போது ............ ஆண்டை அடிப்படை ஆண்டாகக் கொண்டு இந்தியாவில் கணக்கிடப்படுகிறது.

9. இந்தியாவில் ........... குறியீடு (*specification)* இன்னும் முடிவுறாமல் இருக்கிறது.

10. ............. நாட்டு வருமானத்தில் மிகைப்படுத்தப்பட்ட கணக்கீட்டினைக் காட்டும்.

**III. பொருத்துக.**

| | | |
|---|---|---|
| 11. | மொத்த உள்நாட்டு உற்பத்தி (*GDP*) | அ. **1993–94** |
| 12. | நிகர வருமானம் | ஆ. *X - M* |
| 13. | மொத்த நாட்டு உற்பத்தி (*GNP*) – தேய்மானம் | இ. தனிவருமானம் – தனிவரி |
| 14. | *CSO's* சமீபத்திய சேவை வருமானம் | ஈ. (*NNP*) நிகர நாட்டு உற்பத்தி |
| 15. | செலவிடத் தகுதியான தனி (*PDI*) வருமானம் | உ. அயல்நாட்டு மனித வாணிபம் நீக்கப்பட்டது |

**IV. ஓரிரு வார்த்தைகளில் விடையளிக்கவும்.**

16. நாட்டு வருமானத்தை மொத்த மக்கள் தொகையால் வகுத்தால் கிடைப்பது என்ன?

17. பகிர்வு வழியாக மதிப்பிடப்படும் நாட்டு வருமானத்தை எவ்வாறு அழைக்கலாம்?

18. நாட்டு வருமானத்தை எத்தனை வழிகளில் கணக்கிடலாம்?

19. மூன்று பிரிவு பொருளாதாரத்தை நான்கு பிரிவு பொருளாதாரமாக மாற்றுவதற்கு எதைச் சேர்க்க வேண்டும்?

20. தலா வருமானம் கணக்கிட வாய்ப்பாடு (*formula*) என்ன?

## பகுதி–ஆ

**V. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடையளிக்கவும்.**

21. நாட்டு வருமானம் என்பதை வரையறுக்கவும்.

22. ஒரு நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கான குறியீடுகள் யாவை?

23. நிலையான விலையில் நாட்டு வருமானத்தைக் கணக்கிடுவது என்பது எதனை உணர்த்துகிறது?

24. இந்தியாவில் நாட்டு வருமானத் தொடர்களின் பெயர்களை குறிப்பிடுக.

25. “இருமுறைக் கணக்கீடு” (*Double Counting*) என்பதைப் பற்றி சிறு குறிப்பு வரைக.

## பகுதி – இ

**VI. பின்வரும் வினாக்களுக்கு ஒரு பக்க அளவில் விடையளிக்கவும்.**

26. நாட்டு வருமானத்தின் அடிப்படைக் கருத்துக்களை விவரிக்கவும்.

27. நிலையான மற்றும் நடப்பு விலையில் நாட்டு வருமானத்தினை வேறுபடுத்துக.

28. நாட்டு வருமானத்தை நாம் படிக்க வேண்டியதன் அவசியம் யாது?

29. 1950 முதல் 2005 வரை நாட்டு வருமானத்தின் போக்கினை விவரி.

30. நாட்டு வருமானத்தில் பிரிவு வாரியான அமைப்பினை விவரி.

## பகுதி – ஈ

**VII. பின்வரும் வினாக்களுக்கு மூன்று பக்க அளவில் விடையளிக்கவும்.**

32. நாட்டு வருமானத்தைக் கணக்கிடும்போது ஏற்படும் பிரச்சினைகளை விவரி.

# பாடம் – 5

# பொருளாதாரத் திட்டமிடுதல்

# *(Economic Planning)*

## திட்டமிடுதலின் பொருள் விளக்கம் மற்றும் திட்டமிடுதலின் அவசியம்

இருபதாம் நூற்றாண்டு ஒரு திட்டமிடுதலின் சகாப்தமாகும். ஏறக்குறைய, ஒவ்வொரு நாடும் ஏதோ ஒரு வகையான திட்டமிடுதலைக் கொண்டிருந்தன. சமதர்மப் பொருளாதாரத்தில் திட்டமிடுதல் சற்றேரக்குறைய ஒரு சமயத்தைப் போன்றது. முதலாளித்துவ நாடுகளாகிய அமெரிக்க ஐக்கிய நாடுகள் மற்றும் இங்கிலாந்து போன்ற நாடுகள் பகுதி சார்ந்த திட்டமிடுதலை பெற்றுள்ளன. 19ம் நூற்றாண்டில் அரசானது, கட்டுப்பாடற்ற வாணிகக் கோட்பாட்டு அரசாக (*Laissez-faire*) இருந்தது. பொருளாதார நடவடிக்கைகளில், தலையிடாக் கொள்கையைப் பின்பற்றியது. ஆனால் நவீன அரசுகள், நல அரசுகளாக (*Welfare State*) உள்ளன. இரண்டு உலகப் போர்களும், 1930ம் ஆண்டுகளின் பெருமந்தம் மற்றும் சோவியத் ரஷ்யாவில் திட்டமிடுதலில் வெற்றியும், திட்டமிடுதலின் இன்றியமையாமையைக் கோடிட்டுக் காட்டுகிறது. சோவியத் ரஷ்யாவின் திட்டமிடுதல் உலகத்திற்கு ஒரு பரிசாகும். நாட்டளவில், ரஷ்யாவே பொருளாதார திட்டமிடுதலை முதன்முறையாக செயல்படுத்தியது.

இலயனல் ராபின்ஸ் அவர்கள் “அனைத்து பொருளியல் வாழ்வும் திட்டமிடுதலை உட்படுத்தியதே” என்று குறிப்பிடுகிறார். திட்டமிடுவது என்பது ஒரு குறிப்பிட்ட நோக்கத்தோடு நடந்து கொள்வது, தெரிவு செய்வதாகும். தெரிவு செய்தலே பொருளாதார நடவடிக்கையின் சாராம்சமாகும்.

பார்பரா ஊட்டன் அவர்களின் வார்த்தைகளில் “பொது நிருவாகத்தினர் பொருளாதார முன்னுரிமைகளைத் தெளிவாக திட்ட வட்டமாகத் தேர்ந்தெடுப்பதை திட்டமிடல் எனலாம்” என்று கூறுகின்றார்.

குறிப்பிட்ட நோக்கத்தை அடைய ஒரு ஒழுங்கமைக்கப்பட்ட, உணர்வுள்ள மற்றும் அடிப்படையாய் இருக்கின்ற மாற்றுக்களுள் தெரிவு செய்ய எடுத்துக்கொள்ளும் ஒரு தொடர்ச்சியான முயற்சியே திட்டமிடுதல் என்றும் பல பொருளியலறிஞர்கள் ஒத்த கருத்தை தெரிவிக்கிறார்கள். திட்டமிடுதலானது, பற்றாக்குறையாய் உள்ள வளங்களை சிக்கனப்படுத்து தலைப் பற்றி உள்ளடக்கியுள்ளது.

உலகில், சுமார் ஐம்பது மற்றும் அறுபது ஆண்டுகளுக்கு முன்புதான் பல குறைந்த வளர்ச்சியடைந்த நாடுகள் சுதந்திரம் பெற்றன. அச்சமயம் அவை ஏழ்மை நிலையிலேயே இருந்தன. எனவே புதிதாக தோன்றிய இந்நாடுகளின் தலையாய தொழில், தமது மக்களுக்கு உணவு, உடை மற்றும் உறைவிடத்தை அளிக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. இதைச் செய்ய, முதலாவதாக, இவை நாட்டு வருமானத்தை அதிகரிக்க வேண்டியதாயிற்று. அவற்றுள் பல நாடுகள் விவசாய நாடுகளாக இருந்தமையால், சில வேளாண்மை மேம்பாட்டு திட்டங்களை வகுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அது மட்டுமின்றி தமது பொருளாதாரத்தை தொழில்மயமாக்கி அனைவருக்கும் வேலை வாய்ப்பை உண்டு பண்ண வேண்டி இருந்தது. எதையாகிலும் செய்து வேலை வாய்ப்பை விரிவாக்க வேண்டி இருந்தது.

மேலும், பெரும்பாலான நாடுகள் ஏதோ ஒரு வகையான சோசியலிசத்தோடு பிணைப்பட்டிருந்ததால், அவைகள் சொத்து மற்றும் வருமானத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகளை குறைக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. ஏழை நாடுகள் பொருளாதார திட்டங்களின் வாயிலாகவே மேற்கூறிய அனைத்து நடவடிக்கைகளையும் மேற்கொள்ள முயற்சித்தன.

தலையிடாக் கொள்கை என்பது நவீன அரசுகளுக்கு ஒரு ஆடம்பரமாகும். எனவே அவைகள் பொருளாதாரத் திட்டங்களைக் கொண்டுள்ளன. உலகின் வளர்ந்த நாடுகளில் அவைகள் பொருளாதார நிலைபாட்டிற்காக திட்டமிட்டன. ஆனால் வளர்ச்சி குறைந்த நாடுகள் பொருளாதார வளர்ச்சி மற்றும் முன்னேற்றத்திற்காக திட்டமிடுகின்றன.

வளர்ச்சிக் குறைந்த நாடுகளில் பொருளாதார திட்டங்கள் வளருவதற்கான காரணம் அங்காடி இயக்கும் செயலமைவுத் திட்டத்தின் (*market mechanism)* தோல்வியே ஆகும். முதலாளித்துவப் பொருளாதாரம் அடிப்படையிலேயே ஒரு அங்காடிப் பொருளாதாரம். மற்றும் விலை இயக்கமனைத்தும் அங்காடி அமைப்பே நடத்திவிடுகின்றது. விலை அமைப்பே முதலாளித்துவத்தின் அடிப்படை நிறுவனமாகும் (*Institution).* வளங்களின் ஒதுக்கீடு மற்றும் வெகுமதியைப் பங்கிடுதலும் விலையமைப்பின் வாயிலாகவே நடைபெற்றன. வர்த்தகரின் தீர்மானங்களும், உழவர், தொழிலதிபர்கள் போன்றோர் அனைவரும் இலாப நோக்கத்துடனேயே நடத்தப்பட்டனர். அங்காடி அமைப்பு நிறைவான போட்டியுடையதாக இருந்தால் விலை அமைப்பு சிறந்ததாகும். ஆனால் முற்றுரிமை மற்றும் நிறைகுறை போட்டி அங்காடியில் நிலவினால் விலை அமைப்பு தோற்றுப் போகும். இத்தோல்வி, 'அரசின் தலையீட்டை' பொருளாதாரத் திட்டத்தின் வாயிலாகக் கூவி அழைக்கும்.

பொருளாதாரத் திட்டத்திற்கும் தலையிடாக் கொள்கைக்குமிடையே நிலவும் சச்சரவு 'திறமை'யைக் குறித்தே ஆகும். தலையிடாக் கொள்கைக்கு விரோதமான காரணங்கள் கீழ்காணும் அடிப்படையிலமைந்துள்ளன.

*1.* இக்கொள்கையில் வருமானம் நியாயமான முறையில் பகிரப்படவில்லை. இதன் விளைவாக, முக்கியமில்லாத அவசரமற்றப் பொருட்களை செல்வந்தருக்காக உற்பத்தி செய்வதோடு, ஏழை மக்களின் அடிப்படை பண்டங்களை கல்வி, சுகநலன், வீட்டு வசதி, நல்ல உணவு மற்றும் அடிப்படை வசதிப் பொருட்களின் உற்பத்தி இல்லாமல் போய்விடுகிறது. இச்சூழ்நிலையில், அரசு பொருளாதார நடவடிக்கைகளை பொருளாதார திட்டங்கள் வாயிலாகக் கட்டுப்படுத்தி, செல்வ மற்றும் வருமான ஏற்றத்தாழ்வுகளை குறைக்க வழி செய்யலாம்.

*2.* அங்காடிப் பொருளாதாரம், 'வாணிபச் சூழலின்' பலியே ஆகும். வாணிபச் சூழலில் செழிப்பும், மந்தமும் மாறி மாறி ஏற்படும் காலக்கட்டம் ஏற்படுகிறது. மந்த நிலமை ஏற்படும் போது வாணிபம் பாதிக்கப்படும். விலை இறக்கம் காணப்படும். பேரளவு–வேலைவாய்ப்பின்மை நிலை நிலவும். எனவே அத்தகைய நிலையில் அரசு தலையிடவேண்டியிருக்கும். சோவியத் ரஷ்யாவில் செய்யப்பட்டது போல, முறையான திட்டங்களை தீட்டி வாணிபச் சூழலைக் கட்டப்படுத்தலாம்.

சோவியத் ரஷ்யா மற்றும் மேற்கு ஐரோப்பிய நாடுகளோடு, **20**ம் நூற்றாண்டின் பிற்பகுதியில், திட்டமிடுதல் பல வளர்ச்சி குறைந்த நாடுகளிடையே பிரபலமாக பரவியது. இதனால், இந்நாடுகள் முழுமையாக மைய திட்டமிடுதலில் நம்பிக்கை கொண்டிருந்தன என பொருள்படாது. திட்டமிடுதலின் மைய வாதம் யாதெனில் – திட்டமிடுதல் இருக்கலாமா கூடாதா என்பதல்ல ஆனால் திட்டமிடுதல் எந்த வடிவில் தீட்டப்படவேண்டும் என்பதே. இவ்விவாதத்தின் மையம் யாதெனில் – அரசின் செயல்பாடுகள் – விலை அமைப்பின் மூலமாகவா அல்லது விலை அமைப்பை விட்டு ஒய்வதா என்பதே ஆகும்.

**பின்தங்கிய நாடுகளில் திட்டமிடுதலின் பிரச்சனைகள்**

வளர்ந்த நாடுகளைவிட, பின்தங்கிய நாடுகளில் திட்டமிடுதல் அத்தியாவசியமானது மட்டுமின்றி திட்டத்தை நடைமுறைப்படுத்துதல் என்பது மிக மிகக் கடினமானதாகும். எல்லாவற்றுள்ளும் முதன்மையானது.

“திட்டமிடுதலுக்கு ஒரு வலிமைமிக்க, தகுதிவாய்ந்த மற்றும் ஊழலற்ற ஆட்சி செய்தல் அத்தியாவசியமானது” என்று ஆர்தர் லூய்சு குறிப்பிடுகின்றார். ஆனால் பெரும்பாலான, பொருளாதாரத்தில் பின்தங்கிய நாடுகளில் வலுவற்ற, தகுதியற்ற மற்றும் ஊழல்நிறைந்த ஆட்சி செயலையே பெற்றுள்ளன. மேலும் அவைகள் மக்களாட்சி திட்டங்களைக் கொண்டுள்ளன. எனவே, சோவியத் ரஷ்யாவில் நடைபெற்றது போன்று எந்த ஒரு காரியத்தையும் விரைவில் இந்நாடுகளால் செய்ய இயலவில்லை.

அவைகள் மெதுவாக செல்லவேண்டும். அவைகள் வேளாண்மையிலேயே உழன்றன. மேலும், வேளாண்மை நிச்சயமற்ற இயற்கைக் காரணிகளையே சார்ந்திருத்தலால், அவர்களது விவசாய நிகழ்வுகளில் ஏராளமான நிச்சயமற்ற நிலை காணப்படுகிறது. மக்கள் தொகை மிகுதியும், குறைந்த முதலாக்கமும் வேறு முக்கியப் பிரச்சனைகளாக (திட்டமிடுதலுக்கு) இந்நாடுகளில் அமைந்துள்ளன.

### பொருளாதார திட்டமிடுதலின் இயல்புகள்

திட்டமிட்ட பொருளாதாரத்தில், எதை எவ்வளவு உற்பத்தி செய்வது, எப்பொழுது, எங்கு உற்பத்தி செய்வது, உற்பத்தியை யாருக்காக பங்கீடு செய்வது போன்றவை அரசு போன்ற மத்திய நிர்வாகத்தால் திட்டக் குழுவின் மூலமாக முக்கிய பொருளாதார தீர்மானங்கள் நிறைவேற்றப்படுகின்றன. அத்தீர்மானங்களை இவை அனைத்தும் செய்முறைபடுத்துவது அரசின் கடமையாகும். திட்டத்தை வரைவதற்கு முன்பு, கிடைக்கக்கூடிய அனைத்து வளங்களாகிய, பருப்பொருள்வளம், நீதிவளம், மனிதவளம் ஆகியவற்றின் முழுமையான ஆய்வினை மேற்கொள்ள வேண்டும். (எ.கா.) சோவியத் ரஷ்யாவில், 1917–ஆம் ஆண்டில் ரஷ்ய புரட்சிக்கு பின்பு 1918 முதல் 1921–ஆம் ஆண்டுவரை கம்யூனிசப் போர் நடந்தது. அதன் பின்பு 1921 முதல் 1924 வரை புதிய பொருளாதார கொள்கை நடப்பில் இருந்தது. 1924– முதல் அரசு கிடைக்கக் கூடிய வளங்களைப் பற்றிய ஒரு விரிவான ஆய்வினை மேற்கொண்டு 1928–ம் ஆண்டு தனது முதலாம் ஐந்தாண்டு திட்டத்தை நடைமுறைபடுத்தியது. வளங்களின் ஆய்விற்குப் பிறகு நீண்டகால நோக்கங்களுள் ஒன்று எஃகு, நிலக்கரி மற்றும் மின்சாரம் போன்ற உற்பத்தியில் முன்னணியில் உள்ள உலகப் முதலாளித்துவ நாடுகளாகிய அமெரிக்கா ஐக்கிய நாடுகள் போன்ற நாடுகளோடு இணையான நிலையை சோவியத் ரஷ்யாவும் எட்டிப்பிடிக்க வேண்டும் என்ற நீண்டகால நோக்கத்தை ரஷ்யாவின் திட்டகுழு தீர்மானம் செய்தது. ஐந்தாண்டு திட்டத்தின் நோக்கங்களை மனதில் கொண்டு பருப்பொருள் இலக்குகளை நிர்ணயம் செய்யப்படும். அதன்

பின்பு நிதிவளங்களை திரட்டுவதற்கான வழிமுறைகள் கண்டுபிடிக்கப்படும். திட்டங்களானது, அவற்றின் பயன்களை நியாயமான முறையில் பகிர்ந்தளிப்பதற்கான விவரங்களையும் பெற்றிருக்கும்.

திட்டமிடுதலின் தன்மையானது, அவைகளை நடைமுறைபடுத்தும் பொருளாதார அமைப்பு வகைகளாகிய முதலாளித்துவம், சமத்துவம் மற்றும் கலப்பு பொருளாதாரம் போன்ற அமைப்புக்களைப் பொறுத்தது.

முதலாளித்துவப் பொருளாதாரத்தில் (எ.டு.கா. இங்கிலாந்து) பகுதி சார்ந்த திட்டமிடுதல் (*Partial Planning)* காணப்படும். சமத்துவப் பொருளாதாரத்தில் முழுமையான திட்டமிட்டப் பொருளாதார அமைப்பு இருக்கும் (எ.டு.கா. சோவியத் ரஷ்யா) இந்தியா போன்ற கலப்புப் பொருளாதாரத்தில் பொதுத்துறை மற்றும் தனியார் துறை இரண்டுமே மிக முக்கியப் பங்கினை, பொருளாதாரத் திட்டமிடுதலில் வகிக்கும்.

சாதாரணமாக, ஒரு திட்டத்தின் கால அளவு ஐந்து ஆண்டுகளாகும். திட்டத்தினை முன்கூட்டியே வரைந்திட வேண்டும். இந்தியாவில் இதை திட்டக்குழு செய்து வருகிறது. ஒரு திட்டமானது ஒரு குறிப்பிட்ட அளவுடையதாக, அமைந்து இலக்கினையும் திட்டத்திற்காக குறித்து, மேலும் திட்டத்திற்கான நிதி வளங்களை திரட்டுவதற்கான வழி முறைகளையும் குறிப்பிட்டிருக்கும்.

திட்டமிடுதலின் முதல் படி, குறிப்பிட்ட திட்டக்காலத்தில், ஒரு பொருளாதாரத்தின் வளர்ச்சி இலக்கை தீர்மானித்தலாகும். அதன்பிறகு திட்டமிடுவோர், பொருளாதாரத்தை, வேளாண்மை தொழில்துறை மற்றும் பணித்துறை என பல துறைகளாக பிரித்துவிடுவர். ஒவ்வொரு துறையின் பருப்பொருள் இலக்கினை நிர்ணயம் செய்வர். பின்பு எவ்வளவு முதலீட்டினை எந்தெந்த துறைகளுக்கு இலக்குகளை அடைய ஒதுக்கீடு செய்யவேண்டும் என்பதைப் பற்றியும் தீர்மானிப்பர். அதன்பின்பு, முதலீடு செய்வதற்கான சரியான முதலீட்டு திட்டத்தையும், உற்பத்தி நுட்பத்தையும் வகுப்பார்கள். வளர்ச்சி குறைந்த நாடுகள் ஏழை நாடுகளாக இருப்பதால், உழைப்பு – செரிவு முறையை கையாண்டு வேலை வாய்ப்பினை விரிவாக்கலாம். ஆனால் சில கனரக தொழில்களான இரும்பு போன்றவை மூலதனச் செரிவு முறையையே கையாளமுடியும். திட்டத்தின் வெற்றியும் தோல்வியும் தெரிவுசெய்தலையே சார்ந்ததாகும்.

**திட்டங்களின் வகைகள் (Types of Planning)**

**1. மையத் திட்டம் (Centralised Planning)**

ஒரு சமத்துவ பொருளாதாரத்தில் (எ.கா. முந்தைய சோவியத் ரஷ்யா) மையத்திட்டமிடல் இருந்தது. “இது ஆணைதிட்டமாகும் (அ) கட்டளை திட்டமாகவும் இருக்கலாம். சமஉடமை சமுதாயத்தில் அனைத்து உற்பத்தி காரணிகளும் அரசுக்கு சொந்தமானது அனைத்து அடிப்படை தீர்மானங்களாகிய தொழில்மயமாவதற்கு முன்னுரிமை அளிப்பதா? (அல்லது) வேளாண்மை வளர்ச்சிக்கு முன்னுரிமை அளிப்பதா? தொழில் மயமாக்கலுக்கு முக்கியத்துவம் கொடுப்பதாக இருந்தால் அடிப்படை மற்றும் கனரக தொழில்களுக்கு முக்கியத்துவம் அளிப்பதா? அல்லது நுகர்வுப் பொருள் தொழிற்சாலைகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பதா? என்ற பொருளாதார முடிவுகளை மத்திய திட்ட நிர்வாகம் தீர்மானிக்கும்.

**2. தூண்டும் திட்டம் (Planning by Inducement)**

குடியாட்சிமுறையில் திட்டமிடுதல் தூண்டுதல் மூலமாக நடைபெறுகிறது. (எ.கா.) கலப்பு பொருளாதாரமாகிய நமது நாட்டில் பொதுத்துறையும், தனியார் துறையும் செயல்படுகிறது. அரசாங்கம் தனியார் தொழில் துறைகளை திட்டத்தின் நோக்கங்களை நிறைவேற்றும் வண்ணம் சில வரிச் சலுகைகள், மற்றும் பிற ஊக்கங்கள் அளித்து தனியார் துறையை தூண்டிவிட வேண்டும்.

**3. சுட்டிக் காட்டும் திட்டம் (Indicative Planning)**

இத்தகைய திட்டம் முதலில் அரசு தொழில்நிருபர்களையும், தொழில் சாலை பிரதிநிதிகளையும் முன்னதாகவே கலந்தாலோசிக்க வரவேற்று நடப்பு திட்டத்தின் தான் என்னென்ன செய்ய உள்ளது தனது முன்னுரிமைகள் மற்றும் நோக்கங்களை குறிப்பிட்டு கலந்தாலோசிக்கும்.

வெவ்வேறு நாட்டங்களையுடைய நிபுணர்களுடன் விரிவான கலந்தாலோசனை நடத்தியப்பின் திட்டம் தீட்டப்படும். இதற்கு சிறந்த (எடுத்துக்காட்டு) பிரான்சு நாட்டின் சுட்டிக்காட்டும் திட்டமாகும். *1991*-ம் ஆண்டில்தாரளமயமாதல் மற்றும் தனியார் மயமாக்கும் கொள்கைகள் பின்பற்றப்பட்டப் பின்பு இந்திய திட்டமிடுதலும் கூட ஒருவகையில் சுட்டிக்காட்டும் திட்டமாகவே மாறியது.

பொருளாதார திட்டமிடுதலை 3 பிரிவுகளாக பிரிக்கலாம். அவை 1. நடுப்பருவ திட்டம் (*midterm plan) 2.* குறுகிய காலதிட்டம் (*Short term plan) 3.* தொலை நோக்கு திட்டம் (*perspective plan).* நம் நாட்டின் ஐந்தாண்டு திட்டங்கள் நடுப்பருவ திட்டங்களாகவும், குறுகிய கால திட்டங்களாகவும், ஓராண்டு திட்டங்களாகவும் இருந்துவருகின்றன. திட்டங்களை நிறைவேற்றும் காலத்தில் ஐந்தாண்டு திட்டங்கள் ஓராண்டு திட்டங்களாகவும் பகுக்கப்பட்டு செயல்பட்டன. தொலை நோக்கு திட்டங்கள், நீண்டகால திட்டங்களாகும். இத்திட்டத்திற்கான கால அளவு 20 முதல் 25 ஆண்டுகளாகும். ஐந்தாண்டு திட்டங்கள் எல்லாம் தொலை நோக்கு திட்டங்களின் நோக்கத்தின் அடிப்படையில் வடிவமைக்கப்பட்டுள்ளன.

**சுழல் திட்டம் (Rolling Plan)**

நிர்ணயிக்கப்பட்ட இலக்குகளை கொண்ட ஐந்தாண்டு திட்டங்கள் போல இல்லாமல், இச்சுழல் திட்டமானது, ஒவ்வொரு ஆண்டின் முடிவிலும் இலக்குகளை தீர்மானித்து மற்றொரு ஆண்டையும் திட்டத்தோடு சேர்த்துக் கொள்ளுதலாகும். அதாவது அனைத்து ஐந்தாண்டுகளுக்கும் குறிப்பிடப்பட்ட இலக்குகள் இல்லாமல், நடப்பு ஆண்டில் திட்டத்தின் செயல் திறனை பொறுத்து, மற்றொரு ஆண்டிற்கு இலக்கினை தீர்மானிக்கக் கூடும். இவ்வாறாக இத்திட்டம் தொடரும் இதுவே சுழல் திட்டத்தின் மைய கருத்தாகும்.

மைய திட்டமிடுதலின் (*Centralised Planning)* மிகப்பெரிய நன்மையாதெனில் திட்டங்களை மிக வேகமாக நடைமுறை படுத்தி, நோக்கங்களையும் இலக்குகளையும் அடைந்துக் கொள்ளலாம். (எ.கா.) சோவியத் ரஷ்யாவில் திட்டமிடுதலின் வழியாக வேளாண்மையை முதன்மை தொழிலாக கொண்டிருந்த பொருளாதாரத்தை மாற்றியமைத்து 12 ஆண்டுகளுக்குள்ளேயே தொழில் மயமான நாடாக மாற்றிக் கொண்டது. இந்த மத்திய மயமாக்கப்பட்ட திட்டமிடுதலின் தீமையாதெனில் அரசு ஒரு குறிப்பிட்ட ரீதியான முற்றுரிமையை அனுபவித்து போட்டியின்மையால் அரசுக்கு சொந்தமான உற்பத்தி அலகின், உற்பத்தி திறனை பரிசோதிக்க கடினமான நிலையை உருவாக்குகிறது. தூண்டப்பட்ட திட்டத்தின் (*inducement plan)* கீழ் (மக்களாட்சி திட்டமிடுதல்) பொது மக்களுக்கு தங்கள் கருத்தை வெளிபடுத்த வாய்பளித்தாலும் அரசு பின்பற்றும் மக்களாட்சி முறையில் எழக்கூடிய நிர்வாக கால தாமதங்களாலும், பாராளுமன்ற மக்களாட்சி முறையில் ஏராளமான கால தாமதங்களாலும், திட்டங்களை நடைமுறைப்படுத்துதலும், பொருளாதார வளர்ச்சியும் மிகவும் வேகமற்ற நிலையில் உள்ளது.

## இந்தியாவில் திட்டமிடுதலின் தோற்றம் மற்றும் நோக்கம்

## (Evolution and objectives of planning in India)

*1950*-ம் ஆண்டு தேசிய திட்டக்குழு இந்தியாவில் நிறுவப்பட்டது. இத்திட்ட குழுவின் மிக முக்கிய பணியாதெனில் "நாட்டுவளங்களை சீரிய பயனுள்ள மற்றும் சமமாக பயன்படுத்த திட்டங்களை தீட்டுதலே ஆகும்". இத்திட்டகுழு முதல் ஐந்தாண்டு திட்டத்தை *(1951-1956)* வகுத்தது. அது முதல் நாம் ஒன்பது ஐந்தாண்டு திட்டங்களை முடித்து, பத்தாவது ஐந்தாண்டு திட்டத்தின் (2002–07) மத்தியில் நாம் இருக்கின்றோம்.

### இந்திய திட்டமிடுதலின் நோக்கங்கள்

இந்திய திட்டமிடுதலின் மைய நோக்கம் மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துதலாகும். நமது ஐந்தாண்டு திட்டங்கள், உற்பத்தியை அதிகரிப்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளன. இதே நேரத்தில், வருமான, செல்வ ஏற்றத் தாழ்வுகளை குறைப்பதையும் மற்றும் அனைவருக்கும் சமமாக வாய்ப்புகளை ஏற்படுத்துவதையும் நோக்கமாகக் கொண்டுள்ளன. வளர்ச்சியோடு கூடிய ஒரு சம உடைமை சமுதாயத்தை உருவாக்குதல் இந்திய திட்டங்களின் அடிப்படை நோக்கங்களாகும்.

இந்திய வளர்ச்சி திட்டமிடுதலின் தலையாய நோக்கங்களை கீழ்கண்டவாறு வரிசைப்படுத்தலாம்.

1. நாட்டு வருமானத்தை உயர்த்துதல். இது வளர்ச்சி நோக்கம் எனப்படும்.
2. குறிப்பிட்ட காலத்திற்குள், குறிப்பிட்ட நிலையில் முதலீட்டை உயர்த்துதல்.
3. வருமான மற்றும் செல்வ பகிர்வில் உள்ள ஏற்றத் தாழ்வுகளை குறைப்பதோடு பொருளாதார சக்தி வளங்களின் மீது குவிதலைக் கட்டுப்படுத்தல்.
4. வேலை வாய்ப்புகளை விரிவாக்குதல்.
5. வேளாண்மை, உற்பத்தித் தொழிற்சாலை (குறிப்பாக மூலதனப் பொருட்கள்) மற்றும் வாணிபச் செலுத்து சமநிலை ஆகியவற்றின் வளர்ச்சித் தடைகளை அகற்றுதல்.

வேளாண்மைத் துறையில் முதன்மையான நோக்கம் யாதெனில்

உற்பத்தித் திறனை அதிகரித்து தன்னிறைவை தானிய உணவு வகையில் அடைவதே ஆகும். தொழில் துறையில் அடிப்படை மற்றும் கனரகத் தொழில்களுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. அயல்நாட்டு வாணிபத் துறையில் சாதகமான அயல்நாட்டு செலுத்து சமநிலைக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. இந்தியத் திட்டமிடுதலில் கடைபிடிக்கப்பட்ட யுக்தி முறை பேராசிரியர் 'மஹலநாபிஸ் யுக்திமுறை' என குறிப்பிடப்படுகிறது. இதில் அதிவேக தொழில் மயமாதலுக்கும், அதிலும் அடிப்படை மற்றும் கனரக தொழில்களுக்கு முன்னுரிமை அளிக்கப்பட்டது.

நமது திட்டங்களில் வட்டாரச் சமநிலை அடைவதை குறிப்பிட்டிருந்தாலும், நாம் இன்னும் இவ்வட்டாரச் சமநிலை இன்மை நிலையைக் குறைப்பதில் வெற்றியடையவில்லை. வேளாண் துறையில் உணவுத் தானியங்களின் உற்பத்தியில் உபரி உற்பத்தி செய்யும் மாநிலங்கள் உள்ளன. பற்றாக்குறையான மாநிலங்களும் உள்ளன. உற்பத்தித் தொழிலில் வளர்ந்த வட்டாரங்கம் மற்றும் பின்தங்கிய வட்டாரங்களும் உண்டு. அதுமட்டுமல்லாது, தொழில் வளர்ச்சியானது மும்பாய், கொல்கத்தா மற்றும் சென்னையிலேயே செரிந்துள்ளது.

நமது ஐந்தாண்டு திட்டங்கள், வறுமை மற்றும் வேலையின்மை பிரச்சனைகளுக்கு கவனம் செலுத்தியுள்ளன. சராசரி இந்தியன், உலகில் மிக ஏழைகளுள் ஒருவனாக உள்ளான் எனவே நமது திட்டங்கள், வறுமையை ஒழித்து, பெரும்பாலான ஏழை எளிய நலிந்த பிரிவினராகிய – தாழ்த்தப்பட்ட வகுப்பினரையும் (*SC*) பழங்குடியினரையும் (*ST*) மற்றும் பிற பிற்படுத்தப்பட்ட வகுப்பினரையும் மற்றும் பெண்களையும் குழந்தைகளையும் முன்னேற்றமடையச் செய்ய விழைந்தன. வாழ்க்கைத் தரம், தனிநபர் நுகர்வையும் தனி நபர் நுகர்வு தலா வரு மானத்தையும் பொறுத்துள்ளது. இது பின்னும் வேலை வாய்ப்பையும் சார்ந்துள்ளது. எனவே நமது திட்டங்கள் வேலை வாய்ப்பினை, ஏழ்மை ஒழிப்பு திட்டத்தின் முக்கியமான பகுதியாக கண்ணுற்றது.

இன்னும்கூட, ஊரகத் துறையில், குறிப்பிட்ட ஒரு சிலரிடையே நிலங்கள் குவிக்கப்பட்டுள்ளன. நிலச் சீர்திருத்தங்கள் ஏற்படுத்தப்பட்டப் போதிலும், ஏறக்குறைய **50** சதவீத உழவு நிலங்களை, **10** சதவீத மக்களே சொந்தமாகப் பெற்றுள்ளனர். மேலும் பசுமைப் புரட்சி பெரிய நிலச்சுவான்தாரர்களுக்கே நன்மைப் பயத்தது.

தொழிற்சொத்தின் உரிமையும்கூட செரிவடைந்த நிலையில்

காணப்படுகிறது. இந்தியாவின் ஏழ்மை நிலையின் அடிப்படைக் காரணம் குறைந்த உற்பத்தித் திறனும், பெருகும் மக்கள்தொகை வளர்ச்சியே என்பது நிச்சயமானது. இது குறைவான சேமிப்பிலும் மறைமுக வேலையின்மையிலும் முடிவடைகிறது.

குடிசை மற்றும் சிறுதொழில்களுக்கு அரசு ஆதரவு நல்கியதால், ஊரக வேலையின்மை மற்றும் குறைவேலை பிரச்சனைகளைத் தீர்ப்பதில், அதிக வெற்றி காணவில்லை.

இந்தியத் திட்டத்தில், நகர்புறங்களுக்கு, ஒருசார் நிலை இருந்து வருகிறது. கடந்த காலத்தில் வேளாண்மைத் துறைக்கு போதிய நிதியுதவி அளிக்கப்படவில்லை. ஆனால் திட்டமிடுவோர் வேளாண்மையைப் புறக்கணித்தனர் என கூறமுடியாது.

இந்தியாவில் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பே திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிப் போக்கு துவங்கியது. முதலாம் ஐந்தாண்டு திட்டம் (1951–56) மக்களின் வாழ்க்கை தரத்தை உயர்த்துவதோடு பல புதிய வாய்ப்புகளை திறந்தளித்து அதன் வாயிலாக பலதரப்பட்ட வாழ்க்கை வசதியின் மூலமாக இந்திய மக்களை செல்வந்தர்களாக மாற்றும் வளர்ச்சி போக்கின் துவக்கமே, இந்திய திட்டமிடுதலின் நோக்கம் என குறிப்பிட்டது. இரண்டாவது ஐந்தாண்டு திட்டம் (1956–61) துரிதமான தொழில்மயமாதலை நோக்கமாகக் கொண்டு குறிப்பாக அடிப்படை மற்றும் கனரக தொழில் வளர்ச்சியில் நாட்டம் காட்டியது. இரண்டாம் திட்டகாலத்தில் அரசு மக்களாட்சி சமத்துவ நோக்கத்தை தழுவி வந்தது. மூன்றாம் ஐந்தாண்டு திட்டம் (1961–66) பொருளாதாரத்தை தற்சார்புடையதாகவும் சுயமாக இயங்கும் பொருளாதாரமாக மாற்றவும் எதிர்நோக்கியது. மூன்றாம் திட்டத்திற்கு பிறகு திட்ட விடுமுறை அளிக்கப்பட்டது. நான்காவது திட்டம் உடனடியாக துவங்கப்படவில்லை. நான்காவது திட்டத்திற்குள் மூன்று – ஆண்டுத் திட்டங்கள் (1966–69), நிறைவேற்றப்பட்டன. நான்காவது ஐந்தாண்டு திட்டம் (1969–74) இரண்டு நோக்கங்களை உடையதாக இருந்தது. 1. வளர்ச்சியுடன் கூடிய நிலைத்தன்மை 2. தற்சார்பில் முன்னேற்ற சாதனை அடைதல்.

ஐந்தாவது ஐந்தாண்டு திட்டம் (1974–79) வளர்ச்சி மற்றும் சமுதாய நீதியில் கவனம் செலுத்தியது. இக்காலத்தில் (*Garibi Hatao*) 'கரிபி ஹட்டாவோ' அதாவது வறுமை ஒழிப்பு என்பதே தாரக மந்திரமாக இருந்தது. ஆகவே இந்த ஐந்தாண்டு திட்டத்தில் இரண்டு முக்கிய நோக்கங்கள், 1.

வறுமை ஒழிப்பும் 2. தற்சார்பு அடைதலுமாகும். நடுவண் ஆசிய ஜனதா கட்சி ஆட்சியில் இருக்கும்போது ஆறாவது திட்டம் உருவாக்கப்பட்டது. (1978–83) ஆனால் காங்கிரஸ் ஆட்சிக்கு வந்தப் பின்னர் அத்திட்டத்தை கைவிட்டது. மாறாக புதியதொரு ஆறாவது ஐந்தாண்டு திட்டத்தை (1980–85) உருவாக்கியது. பொருளாதாரத்தை விரிவாக்கும் நிலைகளை உருவாக்கி அதன்மூலம் வறுமையைப் போக்குவதை நோக்கமாக கொண்டது.

ஏழாம் ஐந்தாண்டு திட்டம் (1985–90) உணவு, தானியஉற்பத்தி வளர்ச்சியை வேளாண்துறையில் அதிவேகப் படுத்துவதன் மூலம் வேலைவாய்ப்பினை அதிகரித்து அனைத்து துறைகளிலும் உற்பத்தி திறனை உயர்ந்த முக்கியத்துவம் அளித்தது.

எட்டாவது ஐந்தாண்டுத் திட்டத்(1992–97)தின் இறுதி பதிப்பு உருவாக்கப்படும்போது, நாட்டின் பொருளாதாரக் கொள்கையில் பெருத்த மாற்றங்களாகிய திறமைமயமாதல், தனியார்மயமாதல், மற்றும் உலகமயமாதல் போன்ற பெருத்த மாற்றங்கள் ஏற்பட்டன. இந்த எட்டாவது திட்டம் இவ்வகை மாற்றங்களை பிரதிபலித்து பொருளாதார வளர்ச்சியை அதிவேகபடுத்தவும். பொது மனிதனின் வாழ்க்கை தரத்தை முன்னேற்றவும் வழிவகுத்தது.

**திட்டங்களின் சாதனைகள்**

இந்திய திட்டமிடுதலின் தலையாய நோக்கங்களை நான்கு வகையாக பிரிக்கலாம். 1. வளர்ச்சி 2. நவினமயமாக்குதல் 3. தற்சார்பு 4. சமூகநீதி

## I. வளர்ச்சி (Growth)

திட்டமிடுதலில் முதல் 30 ஆண்டுகளில் நாட்டு வருமான வளர்ச்சி வீதத்தின் போக்கு 3.5 சதவீதமாக இருந்தது. பிரசித்திப் பெற்ற பொருளியல் அறிஞர் பேராசிரியர் ராஜ்கிருஷ்ணா அவர்கள் இதனை ‘‘இந்து வளர்ச்சிவீதம் (*Hindu Rate of Growth)* என அழைக்கின்றார். வேளாண்மை உற்பத்தி ஒரு சராசரி வீதமாகிய *2.7* சதவீதமாக அதிகரித்தது. தொழில் உற்பத்தி 6.1 சதவீதமாக அதிகரித்தது மற்றும் தலா வருமானம் 1.3 சதவீதமாக வளர்ந்தது. இவ்வீதங்கள் குறைவாக காணப்பட்டாலும் ஆங்கிலேயர் ஆட்சி காலமாகிய ஏறக்குறைய 100 ஆண்டுகள் இந்தியப் பொருளாதாரம் தேக்க நிலையிலேயே இருந்து வந்ததை நாம் கருத்தில் கொள்ளவேண்டும் (எ.கா.) பிரிக்கப்படாத இந்தியாவில் 1901–முதல் 1946 வரை நம் நாட்டு வருமான வளர்ச்சி வீதம் 1.2 சதவீதமாகவே இருந்து வந்தது.

எனவே இந்தியப் பொருளாதாரத்தில் திட்டமிடுதலின் சாதனை என்னவெனில் தேக்க நிலையை தாண்டி, மெதுவான ஆனால் நிலையான பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டுள்ளது.

வெவ்வேறு திட்டகாலத்தில் பொருளாதாரத்தின் வளர்ச்சி செயல் திறனை அட்டவணை 5.1–ல் காணலாம்.

**அட்டவணை 5.1**

**நாட்டு வருமானத்தின் வளர்ச்சி வீதம்** (சதவீதத்தில்)

| வ.எண் | ஐந்தாண்டுத் திட்டம் | இலக்கு | பெறப்பட்ட வளர்ச்சி |
|---|---|---|---|
| 1. | முதல் திட்டம் | 2.1 | 3.6 |
| 2. | இரண்டாம் திட்டம் | 4.5 | 4.0 |
| 3. | மூன்றாம் திட்டம் | 5.6 | 2.2 |
| 4. | நான்காம் திட்டம் | 5.7 | 3.3 |
| 5. | ஐந்தாவது திட்டம் | 4.4 | 5.2 |
| 6. | ஆறாவது திட்டம் | 5.2 | 5.2 |
| 7. | ஏழாவது திட்டம் | 5.0 | 5.8 |
| 8. | எட்டாவது திட்டம் | 5.6 | 6.7 |
| 9. | ஒன்பதாவது திட்டம் | 6.5 | 5.4 |
| 10. | பத்தாவது திட்டம் | 8.0 | – |

ஆதாரம் : வெவ்வேறு ஐந்தாண்டு திட்டங்கள் மற்றும் பத்தாவது திட்டத்தின் (2002–2007) ஆவணங்கள்.

அட்டவணை **5.1**லிருந்து முதல்ஐந்தாண்டு திட்டம் தவிர்த்து முந்தைய திட்டங்களில் வளர்ச்சி நாடுகளில் பல குறைபாடுகளுடன் இருந்தது. ஒன்பதாம் திட்டத்தில் மொத்த உள்நாட்டு உற்பத்தி **6.5** சதவீதமெனப்பட வேண்டியது, **5.4** சதவீதமாகவே இருந்தது.

### நவீனமயமாதல்

பொருளாதாரத்தில் ஏற்படுத்தப்பட வேண்டிய கட்டமைப்பு மாற்றங்களை நவீனமயமாதல் எனக் குறிப்பிடலாம். திட்டமிடுதலின் கீழ், இந்தியப் பொருளாதாரம், காலனிப் பொருளாதாரமாக இருந்த நிலையிலிருந்து, விடுதலை அடைந்து நவீன பொருளாதாரமாக மாறியது. நாட்டு வருமான தொகுப்பில் மாற்றங்கள் ஏற்பட்டது. (எ.கா.) நாட்டு வருமானத்தில் வேளாண்மையின் பங்கு குறைந்து, பணித்துறையின் பங்கு அதிகரித்தது. வேளாண்மையில் தொழில் புரட்சிக்குப்பின் விவசாயத்தில் மாறுதல்கள் ஏற்பட்டன.

### தற்சாற்புடமை

நமது திட்டமிடுதலின் முந்தைய கால கட்டத்தில் உணவு, தொழில்நுட்பம் மற்றும் அந்நிய செலவாணி போன்ற பல காரியங்களுக்கு அந்நிய உதவியையே சார்ந்திருந்தோம். ஐந்தாம் திட்டமுதல் தற்சார்புடமை என்பது திட்டமிடுதலின் தலையாய நோக்கங்களுள் ஒன்றாகியது.

### சமூக நீதி

அனைவருக்கும் சமவாய்ப்பு அளித்தலையே சமூக நிதி என்று குறிப்பிடப்படுகிறது. இதன் பொருள் யாதெனில் நலிவுற்ற ஏழ்மை மிகுந்த பிரிவினரின் வாழ்க்கை தரத்தை முன்னேற்றுவதிலும் வருமானம் மற்றும் செல்வ ஏற்றத்தாழ்வுகளை குறைப்பதுமாகும்.

### ஒன்பதாவது ஐந்தாண்டு திட்டம் (1997-2002)

ஒன்பதாவது ஐந்தாண்டு திட்டம் **1997–2002** வரையிலான காலத்தை உள்ளடக்கியது. இது வளர்ச்சியோடுக் கூடிய சமுதாய நீதி, மற்றும் சமத்துவத்தை மையமாகக் கொண்டு உருவாக்கப்பட்டது. மத்திய திட்டக்குழு இத்திட்டத்தை மக்கள் நலதிட்டமாகவும், பெரும்பாலான மக்களை அதிலும் குறிப்பாக ஏழை மக்களின் பங்கேற்பை வலியுறுத்தவும் விரும்பியது.

இத்திட்டத்தை உருவாக்கும்போது மக்களின் தரமான வாழ்க்கையையும் உற்பத்தி நிறைந்த வேலைவாய்ப்பை உருவாக்குதலையும், வட்டாரச்சமநிலை மற்றும் தற்சார்புடமையையும் கருத்தில்கொண்டு உருவாக்கப்பட்டது.

**ஒன்பதாவது திட்டத்தின் தலையாய நோக்கங்கள்**

## (Main Objectives of Ninth Plan)

1. வேளாண்மை மற்றும் ஊரக வளர்ச்சிக்கு முன்னுரிமை அளிப்பதன் வாயிலாக போதுமான உற்பத்தி வேலை வாய்ப்பினை உருவாக்குதலும் வறுமை ஒழிப்பும்.

2. நிலையான விலையுடன் கூடிய வளர்ச்சி

3. நிச்சயமாக அனைவருக்கும் உணவளித்தல், அதிலும் பாதிக்கப்பட்ட பிரிவினருக்கு உணவளித்தல்.

4. குறைந்தபட்ச அடிப்படை பணிகளாகிய பாதுகாப்பான குடிநீர் வசதி, ஆரம்ப சுகாதார வசதி, பாதுகாப்பு, அனைவருக்கும் ஆரம்பம் கல்வி, வீட்டுவசதி ஆகியவற்றை அளித்தல்.

5. மக்கள்தொகையின் வளர்ச்சி வீதத்தை கட்டுப்படுத்தல்.

6. பொருளாதார வளர்ச்சி நடவடிக்கைகளில் பொதுமக்கள் பங்கேற்க வாய்ப்பு அளிப்பதன் வாயிலாக சுற்றுப்புற சூழ்நிலையின் நிறைந்தன்மை உறுதிப்படுத்துதல்.

7. பெண்கள் மற்றும் சமூகத்தில் பின்னடைவில் உள்ள மக்கள் மற்றும் தாழ்த்தப்பட்டவர்கள், பழங்குடியினர் மற்றும் பிற்படுத்தப்பட்டவர், சிறுபான்மையினர் அதிக ஆற்றலுள்ளவர்களாக மாற்றுதல் சமூக மற்றும் பொருளாதார வளர்ச்சி மாற்றங்களை ஏற்படுத்தக்கூடிய பிரதிநிதியாகிய இவர்களை ஆற்றல் உள்ளவர்களாக மாற்றுவது.

8. ஊராட்சிமன்றம், கூட்டுறவு, சுயத்தேவைக்குழு போன்ற மக்கள் அமைப்புகளை முன்னேற்றி வளர்ச்சியுறச் செய்தல்.

9. தற்சார்பை அடைவதற்காக முயற்சிகளை வலிமைபடுத்துதல்.

ஒன்பதாவது திட்டத்தில் (1) குடிமக்களின் வாழ்க்கைதரம் (2) உற்பத்தி வாய்ப்புக்களை பெருக்குதல் (3) வட்டாரச் சமநிலை ஆகியவற்றில் அரசானது தலையிடுவதற்கான சிறப்பு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது.

ஒன்பதாவது திட்டக்காலத்தில் சராசரி வளர்ச்சி வீதமானது **6.5** சதவீதமானது நாட்டின் உள்ளாட்டு உற்பத்தியை (*GDP*) அடைய வேண்டும் என்ற அடிப்படை நோக்கத்தை கொண்டது (இது அங்காடியின் விலையை சார்ந்து இருக்கும்). இத்திட்ட காலத்தில் *28.2* சதவீதம் நாட்டின் உள்ளாட்டு உற்பத்தியை (*GDP*) முதலீட்டாக இருக்கவேண்டும் என்ற நோக்கத்தை கொண்டுள்ளது.

**அட்டவணை 5.2**

**மொத்த உள்நாட்டு உற்பத்தியில் எதிர்பார்க்கப்பட்ட முதலீட்டின் சதவீதம்**

| | |
|---|---|
| தனியார் ஒங்கிணைந்த துறை | *9.1%* |
| இல்லத்துறை | *9.7%* |
| பொதுத் துறை | *9.4%* |
| மொத்தம் | *28.2%* |

இத்திட்டகாலத்தில் “பற்றாக்குறை நிதியாக்க”மானது நிதிவளங்களை திரட்டும் வழிமுறைகளுள் ஒன்று என்பதை கருத்தில் கொள்ளவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

**ஒன்பதாவது திட்டத்தின் செயல்திறன்**
**(Appraisal of the Ninth Plan)**

*1.* மொத்த உள்நாட்டு உற்பத்தியில் எதிர்பார்த்த **6.5** சதவீத வளர்ச்சி வீதத்திற்குமாறாக **5.35** சதவீத வளர்ச்சியே பெறப்பட்டது.

*2.* இத்திட்டம் மூலதன இலக்கினை அடையவில்லை. மூலதன இலக்கு *28.2* சதவீதமாக முன் குறிக்கப்பட்டாலும் **24.2** சதவீதமும் முதலீடு செய்யப்பட்டது.

3. பொதுத்துறையின் அளவு 18 சதவீதமாக குறைக்கப்பட்டது.

4. இத்திட்ட காலத்தில் மத்திய மற்றும் மாநில அரசுக்களின் நிதியாக்கப் பற்றாக்குறை அதிகரித்தது.

5. வெளிநாட்டு வர்த்தகமுறையில் இத்திட்டம் தோல்வி அடைந்தது. ஏற்றுமதியின் இலக்கு 11.8 சதவீதமாக நிர்ணயிக்கப்பட்டது. ஆனால் 5.6 சதவீதமே உயர்ந்தது. இறக்குமதியின் எல்லையானது *10.8* சதவீதமாக உயரவேண்டும் என்ற மாறாக இறக்குமதியின் அளவானது 4.1 சதவீதமாக மட்டுமே உயர்ந்தது.

6. ஒன்பதாவது திட்டத்தால், 50 மில்லியன் மக்களுக்கு வேலை வாய்ப்பை உருவாக்க இயலவில்லை.

## பத்தாவது ஐந்தாண்டு திட்டம் (2002-2007)

பத்தாவது ஐந்தாண்டு திட்டம் சமத்துவம் மற்றும் சமூக நீதியை பற்றிய பிரச்சனைகளை வெளிப்படையாக அணுகுவதை நோக்கமாகக் கொண்டது. இத்திட்டம் 8 சதவீத வளர்ச்சி வீதத்தை மொத்த நாட்டு உற்பத்தியில் அடைவதை இது இலக்காக நிர்ணயித்தது. இத்திட்டத்தின் முக்கிய குறிக்கோள்கள் பின்வருமாறு

1. வறுமையை 5 சதவீதமாக 2007–ல் குறைக்கப்பட வேண்டும் 15 சதவீதமாக 2012–ல் குறைக்கப்படவேண்டும்.

2. இத்திட்ட காலத்தில் இலாபகரமான வேலைவாய்ப்பினை கூடுதலாக ஏற்படுத்துதல்.

3. அனைவருக்கும் தொடக்ககல்வியானது 2007–க்குள் கிடைக்கச்செய்தல்.

4. *2001-2011* ஆகிய 10 ஆண்டு மக்கள் தொகை வளர்ச்சி வீதத்தை *16.2* விழுக்காடாக குறைத்தல்.

5. 2007ல் கல்வியறிவுப்பெற்றோரின் எண்ணிக்கையை 75 விழுக்காடாக உயர்த்துதல்.

6. *2007*-க்குள் குழந்தைகளின் இறப்புவீதம் 100 பேருக்கு 45–ஆக குறைத்தல்.

7. *2007*-ல் மகப்பேறு காலத்தில் தாய்மார்களின் இறப்பு வீதமானது 1000 பேருக்கு 2 சதவீதமாகவும் 2012–ல் 1000 பேருக்கு *1* சதவீதமாகவும் குறைத்தல்.

8. *2007*-ல் காடு மற்றும் மரங்களை 25 சதவீத பாதுகாப்பும், *2012*-ல் 33 சதவீத பாதுகாப்பும் அதிகரித்தல்.

9. அனைத்து ஊரகங்களிலும் குடிநீர் வசதியை 2012–க்குள் ஏற்படுத்துதல்.

10. *2007*-க்குள் அனைத்து மாசு அடைந்த நதிகள் மற்றும் ஆறுகளை சுத்தம் செய்தல்.

கடந்தகால அனுபவம் குறிக்கப்பட்ட இலக்குகளாகிய மொத்த நாட்டு உற்பத்தியின் வளர்ச்சி வீதத்தை 8 சதவீதமாக உயர்த்துதல் மற்றும் வேலை வாய்ப்பு இலக்கை அடைதல் – இவைகளை அடைவதில் மிக சந்தேகமாகவே உள்ளது. வேளாண்மை மற்றும் சிறுத்தொழில்கள் இன்னும் குறைந்த முன்னுறிமை நிலையிலேயே உள்ளன. இத்திட்டமானது அதிகமாக தனியார் துறையையே முற்றிலுமாக நம்பியுள்ளது.

**முடிவுரை (Conclusion)**

இதுவரை ஒன்பது ஐந்தாண்டு திட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. தற்போது இது பத்தாவது திட்டத்தின் கடைசி ஆண்டாகும். வளர்ச்சியுடன் கூடிய நிலைத்தன்மை, அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் சரியான ஒரு சவாலாக அமைந்துள்ளது. இன்னும் வேலையில்லாப் பிரச்சனை தீர்ந்தபாடு இல்லை. ஓரளவிற்கு வறுமை குறைக்கப்பட்டிருப்பினும் இப்பகுதியில் நடைபெறவேண்டியவைகள் மிகவும் ஏராளமாக உள்ளன. ஐந்தாவது ஐந்தாண்டு திட்டத்திலிருந்தே வேலைவாய்ப்பு திட்டமானது வறுமை ஒழிப்பு திட்டத்தோடு ஒருங்கிணைக்கப் பட்டுள்ளதனால் இது ஒரு உற்சாகப்படுத்தும் திட்டமாகவே இருந்தது. மக்கள்தொகையினை கட்டுப்படுத்தாவிட்டால் இந்திய பொருளாதார திட்டமிடுதலின் இலக்குகளை அடைவது மிக கடினமானதொன்றாகும். சேமிப்பு, முதலீடு, ஏற்றுமதி முதலியவற்றை உயர்த்தவேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக திட்ட நிர்வாகம் வலுவடைய வேண்டும் தகுதிவாய்ந்ததாக இருக்கவேண்டும். மேலும் ஊழலற்றிருந்தால் நமது பொருளாதார திட்டமிடுதல் ஒரு பெரிய வெற்றியை அடைய முடியும். 1991–முதல் புதிய பொருளாதாரக் சீர்திருத்தங்கள் அறிமுகப்படுத்தப்பட்டதால் நமது திட்டமிடுதலில் நல்ல தரமான மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. நாளடைவில் இத்திட்டம் ஒரு சுட்டிக்காட்டும் திட்டமாக அமையும்.

# பயிற்சி

## பகுதி – அ

**I. சரியான விடையைத் தேர்ந்தெடுக்கவும்.**

1. ஐந்தாண்டுத் திட்டத்தை முதலில் அறிமுகப்படுத்திய நாடு

அ. இங்கிலாந்து | ஆ. அமெரிக்கா
இ. முந்தைய சோவியத் ரஷ்யா | ஈ. பிரான்சு

2. இந்தியாவில் திட்டமிடுதல் என்பது

அ. மையத் திட்டம் | ஆ. மக்களாட்சி
இ. பகுதி சார்ந்த திட்டம் | ஈ. சுட்டிக் காட்டும் திட்டம்

3. தொலைநோக்கு திட்டத்திற்கான கால அளவு

அ. 5 ஆண்டுகள் | ஆ. 10 ஆண்டுகள்
இ. 20 முதல் 25 ஆண்டுகள் | ஈ. 15 ஆண்டுகள்

4. இந்தியாவில் முதலாம் ஐந்தாண்டுத் திட்டம் நடைமுறைப் படுத்தப்பட்ட ஆண்டு

அ. 1947 | ஆ. 1951
இ. 1956 | ஈ. 1961

5. இந்தியாவில் திட்ட விடுமுறை அளிக்கப்பட்ட காலகட்டம்

அ. 1966–69 | ஆ. 1961–63
இ. 1980 – 84 | ஈ. 2002–2004

**II. கோடிட்ட இடங்களை நிரப்புக.**

6. சோவியத் ரஷ்யாவில்............................................ திட்டம் நிலவியது.

7. அங்காடிப் பொருளாதாரம்....................................... பலியே ஆகும்.

8. இந்திய திட்டமிடுதலின் யுக்தி....................................... யுக்தி என்று குறிப்பிடப்படுகிறது.

9. முந்தைய சோவியத் ரஷ்யா தனது முதல் ஐந்தாண்டுத் திட்டத்தை அறிமுகப்படுத்திய ............................. ஆம் ஆண்டு.

10. இரண்டாம் திட்டகாலத்தில் இந்திய மக்களாட்சி .......................... நோக்கத்தை தழுவி வந்தது.

**III. பொருத்துக.**

| | | |
|---|---|---|
| 11. | இங்கிலாந்தின் தொழில் வளர்ச்சி | அ. இந்திய ஐந்தாண்டுத் திட்டங்கள் |
| 12. | அதிகரிக்கும் வாழ்க்கைத் தரம் | ஆ. தலையிடாக் கொள்கை |
| 13. | இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம் | இ. வறுமையை ஒழிப்போம் |
| 14. | ஐந்தாம் ஐந்தாண்டுத் திட்டம் | ஈ. சமத்துவம் மற்றும் சமூக நீதி |
| 15. | பத்தாம் ஐந்தாண்டுத் திட்டம் | உ. விரைவான தொழில் மயமாதல் |

**IV. ஓரிரு வார்த்தைகளில் விடையளிக்கவும்.**

16. முதலாம் ஐந்தாண்டுத் திட்டம் நடைமுறைப்படுத்தப்பட்ட போது இந்தியாவின் பிரதம மந்திரியாக இருந்தவர் யார்?

17. 19ம் நூற்றாண்டில் பின்பற்றப்பட்ட கொள்கை யாது?

18. இந்தியாவின் ஐந்தாண்டுத் திட்டங்களை வரையும் அமைப்பு எது?

19. 10ம் ஐந்தாண்டுத் திட்டத்தின் காலம் என்ன?

20. ''இந்து வளர்ச்சி வீதம்'' என்று பெயரிட்டவர் யார்?

## பகுதி – ஆ

**V. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடையளிக்கவும்.**

21. திட்டமிடுதலின் இலக்கணம் யாது?

22. பின்தங்கிய நாடுகளின் திட்டமிடுதலின் முக்கிய பிரச்சனை யாது?

23. 'சுழற் திட்டம்' என்றால் என்ன?

24. சுட்டிக் காட்டும் திட்டத்தின் கருத்தை விளக்குக,

25. மகலனோபிஸ் யுக்தி முறை என்பது யாது?

## பகுதி–இ

**VI. பின்வரும் வினாக்களுக்கு ஒரு பக்க அளவில் விடையளிக்கவும்.**

*26.* பின்தங்கிய நாடுகளின் திட்டமிடுதலின் முக்கியப் பிரச்சனைகளை விவரி?

*27.* இந்திய திட்டமிடுதலின் தலையாய நோக்கங்களை வரிசைப்படுத்துக.

*28.* பத்தாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கிய குறிக்கோள்கள் யாவை?

*29.* தலையிடாக் கொள்கையின் மாறுபட்ட கருத்துகளை ஆராய்க?

*30.* திட்டமிடுதலின் அவசியத்தை விவரி.

## பகுதி–ஈ

**VII. பின்வரும் வினாக்களுக்கு மூன்று பக்க அளவில் விடையளிக்கவும்.**

*31.* பின்தங்கிய நாடுகளின் திட்டமிடுதலில் ஏற்படும் பிரச்சனைகளை விளக்கவும்.

*32.* பொருளாதார திட்டமிடுதலின் இயல்புகளை விவரி.

*33.* திட்டமிடுதலின் பல்வேறு வகைகளை விளக்குக.

*34.* இந்திய திட்டமிடுதலின் நோக்கங்கள் மற்றும் சாதனைகளை ஆராய்க.

*35.* ஒன்பதாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் நோக்கங்கள் மற்றும் சாதனைகளை விவரி.

# பாடம் – 6

# வேளாண்மை

# (Agriculture)

## பொருளாதார முன்னேற்றத்தில் வேளாண்மையின் பங்கு

நம் நாட்டின் பொருளாதார வாழ்வில், வேளாண்மை மிக முக்கியப் பங்கு வகுக்கின்றது. நமது பொருளாதார அமைப்பிற்கு இதுவே முதுகெலும்பாகும். இந்தியப் பொருளியலில் வேளாண்மையே பிழைப்பூட்டும் முதன்மையான அடிப்படை ஆதாரமாகும். இந்தியா ஒரு விவசாய நாடாகவே தொன்று தொட்டு விளங்கிவருகிறது. இன்றும் நாட்டின் எதிர்காலம் வேளாண் உற்பத்திப் போக்கைப் பொறுத்தே அமையும். நாட்டின் பொருளாதாரத்தில் வேளாண்மையின் பங்கினைப் பற்றி கீழ்காணுமாறு விளக்கலாம்.

### 1. நாட்டு வருமானத்தில் வேளாண்மையின் பங்களிப்பு

இன்றைய நாட்களிலும்கூட நாட்டு வருமானத்தில் வேளாண்மைப் பெரும் பங்களிக்கிறது. 1950 முதல் 1951 மற்றும் 1979–80ம் ஆண்டுகளில், பல்வேறு வேளாண்மைப் பண்டங்கள் கால்நடை வளர்ப்பு (பராமரிப்பு) அத்துடன் தொடர்புடைய துணைச் செயல்பாடுகள் வாயிலாக நாட்டு வருமானத்திற்கு 40 சதவீதத்திற்கு அதிகமான வருமானம் கிடைத்தது. ஐம்பதாம் ஆண்டுகளில், உண்மையில் சொல்லப்போனால் நாட்டு உற்பத்தி வெளியீட்டில் பாதிப் பகுதியினை வேளாண்மை மற்றும் வேளாண்மை துறை சார்ந்த பிரிவின் மூலமாகவே உற்பத்தி செய்யப்பட்டது. என்பது மற்றும் தொண்ணூறாம் ஆண்டுகளில் இந்த விகிதத்தில் மேலும் வீழ்ச்சி ஏற்பட்டது. 2002–03ம் ஆண்டில் இது 25 சதவீதமாக இருந்தது.

### 2. வாழ்க்கைக்கு ஒரு அடிப்படை ஆதாரம்

வாழ்க்கைக்கு பிழைப்பூட்டும் ஆதாரமாக வேளாண்மை திகழ்கின்றது. பத்து நபர்களில் ஒவ்வொரு ஆறாம் நபரும் வேளாண்மையைச் சார்ந்தே வாழுகின்றனர். தொழிலில் வளர்ந்த நாடுகளாகிய இங்கிலாந்து, அமெரிக்க ஐக்கிய நாடுகள் போன்றவைகளில், இந்திய நாட்டுடன் ஒப்பிடும்போது வேளாண்மையைச் சார்ந்த மக்களின் எண்ணிக்கை மிக குறைவாக உள்ளது. 1921–2001 ஆகிய ஆண்டுகளில்

வேளாண்மையைச் சார்ந்த உழைப்புச் சக்தியின் அளவானது இருமடங்கிற்கு அதிகமாகிவிட்டது. இத்துறையினை குறைவேலை வாய்ப்பு, மறைமுக வேலையின்மை, மற்றும் குறை உற்பத்தி வேலை வாய்ப்பு ஆகிய தீமைகள் பற்றிப் பிடித்து பெரும் தொல்லைக்குட்படுத்தியுள்ளது.

### 3. வேலைவாய்ப்பளித்தல்

வேளாண்மை இந்திய மக்களுக்கு பெருமளவில் ஏராளமாக வேலை வாய்ப்பளித்துள்ளது. கிராமப்புறங்களில், வேளாண்மையையும் அதனைச் சார்ந்த தொழில்களையும் 70 சதவீத மக்கள் சார்ந்துள்ளனர். இன்றும் குறிப்பாக, 1995 ஆம் ஆண்டில் 97 மில்லியன் மக்கள் எண்ணிக்கையிலிருந்து 235 மில்லியனாக நிலத்தை சார்ந்த தொழிலில் ஈடுபடு (விவசாயிகள் மற்றும் உழவர்கள்) வோரின் எண்ணிக்கை அதிகரித்தது.

### 4. தொழில்துறை முன்னேற்றம்

வேளாண்மை தொழிற்சாலைகளுக்குத் தேவையான கச்சாப் பொருள்களை வழங்குகிறது. பருத்தி மற்றும் சணல் தொழிற்சாலைகள், சர்க்கரை ஆலைகள், வனஸ்பதி தோப்பு வகைகள் போன்றவை விவசாயத்தைச் சார்ந்த தொழில்களாகும். மேலும் பல சிறுதொழில்கள் மற்றும் கைத்தறி, பருத்தி ஆலைகளான நெசவாலைகள், நெல் (அரிசி) உமி நீக்கும் ஆலைகள், நார், மற்றும் காதி தொழில்கள் தங்களின் கச்சாப் பொருட்களுக்கும் வேளாண்மையை சார்ந்துள்ளன. மறைமுகமாக, ஏனைய பிற தொழில்களும் விவசாயத்தைச் சார்ந்துள்ளன.

### 5. பன்னாட்டு வாணிபம்

பன்னாட்டு வாணிபத்தில் வேளாண்மை மிக முக்கியப் பங்கு வகிக்கின்றது. ஏற்றுமதியில் தேயிலை, எண்ணெய் பிண்ணாக்கு, கனி மற்றும் காய்கறி வகைகள், வாசனைப் பொருட்கள், புகையிலை, பருத்தி, காப்பி, சர்க்கரை, பதப்படாத கம்பளி மற்றும் தாவர எண்ணெய் போன்றவை குறிப்பிடத்தக்கவை ஆகும். ஏற்றுமதிமூலம் நல்லதொரு பங்கைப் பெற்று தருவதோடு இறக்குமதியின் ஒரு முக்கியப் பிரிவாகவும் இது உள்ளது. இவ்வேளாண் துறையானது நிகர வெளிநாட்டு செலாவணியை ஈட்டித்தந்து, மூலதன ஆக்கத்திற்கும், விவசாயம் சாராத பிற தொழிலுக்கான இறக்குமதிக்கு இது பெரிதும் உதவுகிறது.

### 6. முதலீட்டு ஆக்கமும் முதலீடும்

நாட்டின் முதலாக்கத்தில், உற்பத்தி சொத்தானது விவசாய சொத்துக்களாகிய, நிலம், நீர்பாசன வசதிகள், டிராக்டர்கள், உழவுக் கருவிகள், ஏர் அல்லது கலப்பை, ஆழ்குழாய் கிணறுகள் மற்றும் சரக்கு பாதுகாப்பு வசதிகள் போன்ற வடிவங்களில் உள்ளது. நாட்டு வருமானத்தில் 25 சதவீதத்தை வேளாண்மை ஈட்டித்தருவதால் இத்துறையே சேமிப்பிற்கும் பொருளாதாரத்தின் முதலாக்கத்திற்கும் அடிப்படை மூலாதாரமாக விளங்குகிறது.

### 7. உணவு மற்றும் வைக்கோல் (தீவனம்)

இந்தியாவில், வேளாண்மையே அனைத்து மக்களின் உணவுத் தேவையை பூர்த்தி செய்கிறது. பலகோடி கால்நடையை பராமரிக்க வைக்கோல் மற்றும் தீவனங்களை வேளாண்மை அளிக்கிறது.

### 8. பொருளாதார திட்டம்

இந்தியப் பொருளாதாரத்திற்கு வேளாண்மையே முதுகெலும்பாகும். வேளாண்மையின் செழிப்பு நாட்டின் செழிப்பைக் குறிக்கும். நாட்டு பொருளாதாரத்தில் வேளாண்மையின் பங்கினை பல உண்மைகள் குறியீட்டு சுட்டிக்காட்டுகின்றன. எடுத்துக்காட்டாக சாலைப்போக்குவரத்து மற்றும் ரயில் போக்குவரத்துத் தொழிலானது பெருமளவு விவசாய பொருட்களை ஓரிடத்தினின்று மற்றொரு இடத்திற்கு கொண்டு செல்வதில் அடங்குகிறது. வேளாண்பொருட்கள் வெளிநாட்டு வாணிபத்தில் பெரும்பங்கு வகிக்கின்றன. வேளாண் – வளர்ச்சி, வறுமை–ஒழிப்பு திட்டத்தில் ஒரு நேரிடை பாதிப்பை ஏற்படுத்தக்கூடியது.

### 9. பன்னாட்டு – தரப்படுத்தலில் இடம் பெறுதல்

உலக அளவில், இந்திய வேளாண்துறை சில குறிப்பிட்ட பண்டங்களில் நல்ல தரத்தில் இடம் பெற்றுள்ளன. நிலக்கடலை உற்பத்தியில் உலக அளவில் இந்தியா முதல் இடத்தையும், அரிசி உற்பத்தியில் இரண்டாம் இடத்தையும் புகையிலை உற்பத்தியில் மூன்றாம் இடத்தையும் பிடித்துள்ளது.

நாட்டு பொருளாதார முன்னேற்றத்திற்கு விவசாய முன்னேற்றம் மிக மிக அத்தியாவசியமானது என்று குறிப்பிடும்போதுதான் இந்தியாவின்

முக்கியத்துவம் எழுகின்றது. அறிஞர் ரேக்னர் நர்க்ஸ் என்பவரின் கூற்றுப்படி, உபரி (அதிக) மக்களை வேளாண்மையிலிருந்து பிரித்தெடுத்து அவர்களைப் புதிதாக ஆரம்பிக்கும் தொழிற்சாலைகளிலும் கிராமப் புறங்களில் செய்யப்படும் பொதுப் பணிகளிலும் வேலைக்கமர்த்துதல் வேண்டும். இவ்வாறாக செய்வதின் வாயிலாக விவசாய உற்பத்தித்திறனை ஒருபுறம் அதிகரிப்பதோடு மறுபுறத்தில் சிறிய உபரி உழைப்பாளர்களுக்காக சிறிய புதிய தொழிலமைப்புகளையும் அமைத்துக்கொள்ளலாம். இந்திய வேளாண்மை மிகப் பெரிய மற்றும் முக்கியமான துறை மட்டுமின்றி மிகப்பின்தங்கிய நிலையிலும் உள்ளது. முழுப்பொருளாதாரமும் வளர்ச்சி அடைய விவசாய வளர்ச்சி மிக மிக முக்கியமானதாகும்.

## பொருளாதார வளர்ச்சியில் வேளாண்மையின் பங்கு

ஒட்டு மொத்த பொருளாதார வளர்ச்சிக்கு வேளாண்மை அளிக்கும் நான்கு வகையான பங்குகளை சைமன் குஸ்நட் அவர்கள் கீழ்காணுமாறு விளக்குகிறார்.

1. பொருட்களின் பங்களிப்பு (உணவு மற்றும் கச்சாப் பொருட்களை கிடைக்கச் செய்தல்)

2. அங்காடியின் பங்களிப்பு (விவசாயம் சாரா உற்பத்தி துறையில் உற்பத்தியாளர் பொருட்களுக்கும் நுகர்வு பொருட்களுக்கும் அங்காடியை ஏற்படுத்திக் கொடுத்தல்.

3. உற்பத்தி காரணிகளில் பங்களிப்பு (வேளாண் சாரா துறைக்கு உழைப்பையும் முதலையும் கிடைக்கச் செய்தல்)

4. அயல்நாட்டு வாணிபத்திற்கு பங்களிப்பு

## வேளாண் சார்ந்த மற்றும் வேளாண் சாரா துறைகளுக்குமிடையே உள்ள தொடர்பு

ஒரு நாடு வளர்ச்சியடையும் பாதையில் செல்லும் போது, வேளாண்மைக்கும் மற்றும் தொழிற்சாலைகளுக்குமிடையே உள்ள ஒன்றோடொன்று – சார்ந்த நிலை கீழ்கண்ட தொடர்ச்சிகளால் வலுப்படுத்தப்படுகிறது. அவை (*linkage)*

1. உற்பத்தி தொடர்ச்சி

2. தேவை தொடர்ச்சி

3. சேமிப்பு மற்றும் முதலீட்டு தொடர்ச்சி

**அ. உற்பத்தி தொடர்ச்சி**

இத்தொடர்ச்சி, வேளாண்மையும் தொழிலும் உற்பத்தி இடுபொருட்களுக்காக ஒன்றை ஒன்று சார்ந்திருப்பதால் ஏற்படுகிறது. அதாவது, பருத்தி, சணல், கரும்பு போன்ற வேளாண் பொருட்களை வேளாண்மை சார்ந்த தொழில்களுக்கு அளிப்பதன் வாயிலாகவும் இரசாயன உரங்கள், இயந்திரங்கள் மற்றும் மின்சாரம் போன்ற தொழிலின் உற்பத்தியை வேளாண்மைத் துறைக்கு அளிப்பதாலும் கடந்த 50 ஆண்டுகளில் இத்தொடர்ச்சி வலுவாகிறது. மேலும் இது வேளாண்மைத்துறை நவீனமாகுதலையும் பிரதிபலிக்கிறது.

**ஆ. தேவைத் தொடர்ச்சி**

இந்த இரண்டு துறைகளுக்கிடையே வெகுவலுவான தேவைத் தொடர்ச்சி உள்ளது. வருமானம் மற்றும் தொழில்மயமாகுதலின் விளைவானது, உணவு மற்றும் விவசாயக் கச்சாப்பொருட்களின் தேவையை பாதிக்கிறது என்பது பொதுவாக உணரப்பட்டுள்ளது.

**இ. சேமிப்பு மற்றும் முதலீட்டில் தொடர்ச்சி**

கிராம வருமானம், தொழிற்சாலையின் நுகர்வு பொருட்களாகிய ஆடைகள், கால்மிதிகள், சர்க்கரை, சமையல் எண்ணெய், தொலைக்காட்சிப் பெட்டிகள், துணி – துவைக்கும் இயந்திரங்கள், குளிர்சாதனப் பெட்டிகள் மற்றும் மோட்டார் வாகனங்கள் போன்றவற்றில் ஏற்படுத்தும் பாதிப்புகள் இணையாக குறிப்பிடத்தக்கது. சமீப காலத்தில் நடத்திய ஆய்வு, ‘‘கிராமப்புற கடைவீதிகளில் நுகர்வானது நகர்புற அங்காடியைத் தாண்டிவிடுகிறது’’ என்று முடிவு செய்கிறது.

**வேளாண்மை வளர்ச்சிக் கூறுகள்**

வேளாண் உற்பத்தியின் பெருக்கமானது இரண்டு விதங்களில் அதிகரிப்பு ஏற்படக்கூடும்.

1. விவசாயம் செய்யக்கூடிய நிலபரப்பில் அதிகரிப்பு (கிடைமட்ட நீழ்ச்சி / விரிவாக்கம்)

2. வேளாண்மை உற்பத்தி திறனில் அதிகரிப்பு (செங்குத்து நீழ்ச்சி / விரிவாக்கம்)

உற்பத்தித் திறன் இரண்டு கூறுகளை உடையது. அவை நில உற்பத்தித்திறன் மற்றும் உழைப்பின் உற்பத்தித்திறன் என்பனவாகும்.

## இந்திய வேளாண்மையின் உற்பத்தித் திறன்

இந்தியா விவசாய நாடாக இருப்பினும் அது பல பிரச்சனைகளை சந்திக்க வேண்டியுள்ளது. இப்பிரச்சனையின் நடுமையமாக உற்பத்தி குறைவும் உற்பத்தித் திறன் குறைவும் அமைந்துள்ளது. மற்ற நாடுகளை (இந்தியாவிற்கு ஒப்பாகவுள்ள இயற்கை சூழ்நிலைகளில்) ஒப்பிட்டுப் பார்க்கும்போது இந்தியாவின் உற்பத்தித்திறன் மிகக் குறைவாகவே உள்ளது. இன்றைய நாட்களில் சில முன்னேற்றங்கள் ஏற்பட்டாலும் பல நிலைமைகள் அதிகமாக மாற்றமடையவில்லை. எனவே வேளாண்மை பின்தங்கிய நிலையில் இருப்பதற்கான காரணங்களை கீழ்காணுமாறு வகைப்படுத்தலாம்.

1. மக்கட்தொகைப் பற்றிய காரணங்கள்

2. பொதுவான காரணங்கள்

3. நிறுவனம்சார்ந்த காரணங்கள் மற்றும்

4. தொழில்நுட்பக் காரணங்கள்

## 1. மக்கட்தொகைப் பற்றிய காரணங்கள்

வேளாண்மையின் குறைந்த விளைச்சலுக்கான மிக முக்கிய காரணம், நிலத்தின் மீது மக்கள்தொகையினால் ஏற்படுகிற அளவுக்கதிகமான நெருக்கம் (அ) பாரச்சுமை அதிகரிக்கும், கூடுதல் உழைப்பாற்றலை தொழில்துறை தன்னிடமாக ஈர்த்துக்கொள்ள வேண்டும். ஆனால் தொழில்துறை வளர்ச்சி வீதமானது தேவையை விட மிகக் குறைவாக உள்ளது. இதன் விளைவாக அதிகரிக்கும் மக்கள்தொகை பிழைப்பிற்காக நிலத்தையே சார்ந்திருக்க வேண்டியுள்ளது. இதனால் பல தீமைகள் ஏற்படுகின்றன. நில உடைமைகள்

சிறு துன்டுகளாக்கப்பட்டு சிதறிப் போகின்றன. முன்னேற்றத்திற்கான பயிற்சி மற்றும் பணிகளின் அளிப்பு தேவைக்கு குறைவாகவே இருக்கின்றது. இதனால் குறைந்த மற்றும் மறைமுக வேலையிண்மை ஏற்படுகின்றது. இத்தகைய தீமைகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து வேளாண்மையின் உற்பத்தி திறனை குறைக்கின்றது.

### 2. பொதுவான காரணங்கள்

#### அ. வேளாண்மையில் அதிகப்படியான தொழிலாளர்கள்

மிகக் குறைந்த உற்பத்தித் திறனுக்கான மிக முக்கிய காரணம் மக்கள் அதிக எண்ணிக்கையில் வேளாண் தொழிலில் குவிதல் ஆகும். மக்கள்தொகை அதிகரிக்கும்போது, நிலத்தின் மீதான அழுத்தமும் அதிகரிக்கிறது. இந்த இயற்கையான அதிகரிப்பை தொழில் துறையால் ஈர்த்துக் கொள்ள இயலவில்லை.

#### ஆ. ஊக்கமற்ற கிராமபுற சூழ்நிலை

இந்த உழவர்கள் பொதுவாக ஏழைகளாகவும், அறியாமை நிறைந்தவர்களாகவும், மூடநம்பிக்கை கொண்டவர்களாகவும் பழமைவாதிகளாகவும், கல்வியறிவற்றவர்களாகவும், பழமையான பழக்கவழக்கங்களாலும், சாதிப்பாகுப்பாடு முறைகளாலும், கூட்டுக் குடும்ப பிணைப்புகளால் கட்டப்பட்டவர்களாகவும் இருந்து வருகின்றனர். பழமையில் அவர்கள் கொண்டுள்ள நம்பிக்கைகள் மிக பெரிய சாபமாக அமைந்து, அவர்கள் தங்களது பழங்கால உழவு முறைகளிலேயே மனநிறைவு அடையும்படியாக கட்டிவைத்துள்ளது. புதிய தொழில்நுட்ப உற்பத்தி முறைகள் வேகமாக கடைபிடிக்கும் ஒரு சில உழவர்கள் தவிர்த்து பெரும்பாலான அதிகபட்ச உழவர்கள் பொருளாதார முன்னேற்றங்களைப் பற்றி அறிந்துக் கொள்ளவும், பின்பற்றவும் ஊக்கமற்று காணப்படுகின்றனர்.

#### இ. வேளாண் துறை சார்பற்ற பணிகள் குறைவு

நிதி வசதி மற்றும் அங்காடி வசதிகள் போன்ற வேளாண்மை சார்பற்ற பணிகள் போதிய அளவில் கிடைக்கப் பெறாமை குறைவான உற்பத்தி திறனுக்கு மற்றுமொறு காரணமாகும். இவ்வசதிகள் இந்தியாவில் மிக குறைவாக உள்ளது. அங்காடி வசதியானது அதிக குறைபாடுகள் நிறைந்ததாகவும், அதிக செலவுகள் கொண்டதாகவும் காணப்படுகிறது. நவீன

பண்டகசாலைகள் நம் நாட்டு பாணியிலேயே அமைக்கப்பட்டு, அவைகள் போதுமானதாக இல்லை. தானியங்கள் சேமித்து வைக்கும் முறையானது குறைகள் நிறைந்ததாகவும், அதிக செலவுகள் கொண்டதாகவும் காணப்படுகிறது. உழவர்களுக்கான கடன்வசதிகள் இன்னும் வளர்ச்சியடையாமலே உள்ளது. உழவர்கள் முழுக்க முழுக்க நிறுவனம் சாராத தனியார் கடன் வழங்குவோர்களையே அவர்களின் அன்றாடத் தேவைகளுக்கு நம்பியுள்ளனர்.

### 3. நிறுவன அமைப்பு காரணங்கள்

#### அ. நில உடைமையின் அளவு

இந்தியாவில் சராசரி நில உடமையின் அளவானது மிக குறைவான அளவில் உள்ளது. 80 சதவீத அளவு நிலவுடைமை 2 ஏக்கருக்குக் குறைவாகவே உள்ளது. இத்துடன் நிலங்கள் சிறு, சிறு துண்டுகளாக பிரிக்கப்பட்டு அவை பரவலாக கிடக்கின்றன. நாட்டின் ஒரு சில பகுதிகளில் நிலத்தின் அளவு வெகு சிறியதாக குறைக்கப்பட்டதால் (அ) துண்டாடப்பட்டதால் சாதாரண கலப்பை (அ) ஏர் கூட அங்கு பயன்படுத்த முடியாமல் உள்ளது. மேலும் சராசரி நில உடைமைகள் மிக சிறியதாக உள்ள காரணத்தால் அறிவியல் ரீதியான சாகுபடி முறைகளையோ, மேம்பட்ட கருவிகளையோ தரமான விதைகளையோ பயன்படுத்த முடியாத நிலையுள்ளது. இச்சிறிய அளவான நிலங்கள் பலவித பெருமளவு நட்டத்தை விளைவிக்கிறது. காலம், உழைப்பு, கால்நடை சக்தி, நீர்பாசன வசதிகளை சரியான முறையில் பயன்படுத்துவதற்கான தடைகள், உழவர்களுக்கிடையே சண்டை சச்சரவுகள், நீதிமன்ற வழக்குகள், மற்றும் சரியான வேலி அமைப்புகள் இல்லாமையால் பயிர் வகைகள் வீணாகுதல் போன்ற இடர்பாடுகள் ஏற்படுகின்றன.

#### ஆ. குத்தகை அமைப்பு முறையின் குறைபாடுகள்

இந்தியாவில் காணப்படும் குத்தகைஅமைப்பு மிகவும் ஊக்கமற்ற நிலையில் காணப்படுகிறது. இக்குத்தகைமுறைகள் தமக்குள்ளேயே தேக்கநிலை ஏற்படுத்தக்கூடிய தன்மை வாய்ந்ததாக உள்ளது. இதன் முக்கியஇயல்பு இடை தரகர்களின் தலையீடு, நில உடைமையாளர்களின் சுரண்டல் போக்கு, துண்டுகள் ஆக்கப்பட்ட நிலங்கள், தொடர்ந்து அதிகரிக்கும் மக்கள் தொகையின் அழுத்தம் ஆகியனவாகும்.

### 4. தொழில்நுட்ப காரணங்கள்

### அ. ஏழ்மையான இடுபொருள் களும், முறைகளும்

சாகுபடி முறைகள் பழமையானதாகவும், திறமையற்றதாகவும் உள்ளன. மரபுவழி பயிரிடும் முறைகளே பின்பற்றப்படுகின்றன. இதனால் சுகசெலவும், குறைந்த உற்பத்தித்திறனும் ஏற்படுகிறது. பல்லாண்டு காலமாக உற்பத்தி முறையில் எந்த மேம்பாட்டு மாற்றமும் மேற்கொள்ளப்படவில்லை. வேளாண்மையின் முதலீடுகளாகிய இயற்கை உரங்கள் மற்றும் இரசாயன உரங்கள், வீரிய விதைகள், நீர்பாசன வசதிகள், கருவிகள் மற்றும் பிற சொத்துக்களானது மிக குறைவான நிலையில் உள்ளது.

### ஆ. பற்றாக்குறையான பாசன வசதிகள்

இந்திய வேளாண்மையின் நலிவிற்கு முக்கிய காரணம் நாடு முழுவதிலும் உள்ள உழவர் பெறும் மக்கள் மழையையே நம்பி இருக்கின்றனர். அங்காங்கே ஒரு சிலர் மட்டும் செயற்கை நீர் பாசன வசதிகளை பயன்படுத்தக்கூடும்.

### இ. உழவர்கள் கடனில் மூழ்கிய நிலை

*"இந்திய உழவர்கள் கடனில் பிறந்து, கடனில் வாழ்ந்து, கடனில் இறந்து, கடன் விட்டுப்போக பிறப்பெடுத்துள்ளான்"* என்று கூறப்படுகிறது. அவர்களது தீராத கடனுக்கான காரணங்கள் தலைமுறை தலைமுறையான கடன்கள், நீதிமன்ற வழக்குகளால் ஏற்படும் கடன்கள் வருமானத்தை ஈடுசெய்ய ஏற்படும் கடன்கள் மற்றும் வீணான சமூக செலவுகள் ஆகும்.

### ஈ. போதுமான ஆராய்ச்சியின்மை

ஆராய்ச்சி மற்றும் மேம்பாட்டு முறைகளின் நன்மைகள் பற்றிய போதிய விளக்கங்கள் இன்னும் அநேக உழவர்களை சென்றடையவில்லை. அவைகளை உழவர்கள் விவசாயத்தில் கையாளவும் இல்லை. விரிவாக்கம் ஒரு சிலருக்கு மட்டுமே என குறிக்கப்பட்டது. ஆகவே இக்கிராமபுறங்களில் நவின உழவுமுறைகள் வேரிட்டு வளரவேண்டும்.

### உ. குறை நீக்கும் வழிமுறைகள் (Remedial Measure)

மேலே விளக்கப்பட்ட வேளாண்மையின் குறைந்த உற்பத்தி திறனுக்கான காரணங்கள் கீழ்காணும் வழிமுறைகளை சுட்டிக்காட்டுகிறது.

இந்திய வேளாண்மையின் பல்வேறு குறைபாடுகளை கீழ்கண்டவாறு தீர்வு காணலாம்.

1. நாட்டளவிலான கூட்டுறவு கூட்டு விவசாயமுறை துவங்கப்பட வேண்டும்.

2. மக்கட்தொகை வளர்ச்சியைக் கட்டுப்படுத்துதல்

3. தரமான உரவகைகள் கிடைக்கச் செய்தல்

4. உயர்தர விதைகளை பயன்படுத்துதல்

5. பாசன வசதிகளுக்கு மாற்று முறைகள் அமைத்தல்

6. விவசாய கடன் வசதியை அதிகரித்தல்

7. புறம்போக்கு மற்றும் மேய்ச்சல் நிலங்களை மேம்படையச் செய்தல்

8. நில உடைமைகளை ஒருங்கிணைத்தல்

9. புதிய கருவிகளை பயன்படுத்துதல்

10. மண் பாதுகாப்பு மற்றும் தீவிரமான சாகுபடி

11. அங்காடி அமைப்பில் முன்னேற்றம்

12. விவசாய ஆராய்ச்சிக்கும், பயிர் பாதுகாப்பிற்கும் ஊக்கம் அளித்தல்

இந்தியாவில் இத்தகைய முன்னேற்ற முறைகளை நம்முடைய திறமைக்கு தக்கவாறு செய்யவேண்டும். கிராம மக்களின் எதிர்காலம், உணவுப் பிரச்சனைகளுக்கான தீர்வுகள் மற்றும் நம் நாட்டின் தொழில்வளர்ச்சி விவசாயத்தையே சார்ந்துள்ளன.

**வேளாண்மைப் பயிர்களும், பயிர் வகைகளும்**

பொருளாதார திட்டமிடல், 1950–51ல் அறிமுகப்படுத்தப்பட்ட பின்பும், 1965 பசுமைப்புரட்சிக்குப் பின்பும், சாகுபடிக்கு கீழ் உள்ள நிலத்தின் அளவு மற்றும் ஒரு ஹெக்டேர் நிலத்தின் சராசரி உற்பத்தியும் தொடர்ந்து

அதிகரித்தது. அதன் விளைவாக, அனைத்து வேளாண்மைப் பயிற்சிகளின் உற்பத்தியும் ஏறுமுகமாக இருக்கிறது.

இந்தியாவின் முதன்மையான உணவுப் பயிர்கள் – அரிசி, கோதுமை, சோளம், தானியங்கள் மற்றும் பருப்பு வகைகள் முதலியனவாகும். கரும்பு, சணல், பருத்தி, தேயிலை, காப்பி, நிலக்கடலை மற்றும் மற்ற எண்ணெய் வித்துகள் முதலியன முக்கிய பணப்பயிர்களாகும். பசுமைப் புரட்சிக்கு முந்தைய காலத்தில், அதாவது 1949–65 வரை, உணவு தானியங்களின் உற்பத்தியானது 55 மில்லியன் டன்னிலிருந்து 89 மில்லியன் டன்னாக உயர்ந்தது. இது ஆண்டு வளர்ச்சி வீதத்தில் 3.2% ஆகும். பசுமைப் புரட்சிக்கு பிந்தைய காலத்தில், அதாவது 1965–2001 வரை உணவு தானியங்களின் உற்பத்தி 89 மில்லியன் டன்னிலிருந்து 195.9 மில்லியன் டன்னாக உயர்ந்தது. ஆனால், ஆண்டு வளர்ச்சி வீதத்தில் இது 2.2% மட்டுமே ஆகும்.

### இந்தியாவில் பயிர் வகைகள் (Cropping Pattern in India)

ஒரு குறிப்பிட்ட கால கட்டத்தில், பல்வேறு வகைப் பயிர்களின் கீழ் உள்ள நிலத்தின் அளவு பயிரிடுதலின் பாங்கு எனப்படும். வேறு வகையில் கூறினால், ஒரு குறிப்பிட்ட காலத்தில் சாகுபடியின் கீழ் உள்ள பல்வேறு வகையான பயிர்களின் விகிதம் பயிரிடுதலின் பாங்கு எனப்படும். பயிரிடுதலின் பாங்கில் ஏற்படும் மாற்றம் பல்வேறு பயிர்கள் பயிரிடப்படும் நிலப்பரப்பின் வீதத்தில் ஏற்படும் மாற்றத்தைக் குறிக்கும்.

**அட்டவணை 6.1 பயிர்வகைகளின் பகிர்வு (1951லிருந்து)**

| பயிர் வகைகள் | 1950-51 | 1980-81 | 2000-01 |
|---|---|---|---|
| *a.* அனைத்து வகை பயிர்கள் | 100 | 100 | 100 |
| *b.* உணவு தானியங்கள் | 74 | 80 | 75 |
| *c.* உணவு தானியங்கள் அல்லாத பயிர்கள் (அ) பணப் பயிர்கள் | 26 | 20 | 25 |

பயிரிடப்பட்ட மொத்த நிலப்பரப்பில் பலவகையான பயிர்களின் பங்கை மேலே உள்ள அட்டவணை காட்டுகிறது.

**பயிரிடுதலின் வகையை பாதிக்கும் காரணிகள்**

**இயற்கை காரணிகள்**

நிலத்தின் தன்மை, மண்வளம், தட்பவெப்ப நிலை, மழையளவு, மற்றும் சராசரி வெப்பநிலை ஆகியவற்றை உள்ளடக்கியதே இயற்கை காரணிகள் ஆகும். வேளாண்மையில் மனிதனின் பங்கைவிட இயற்கையின் பங்கு முக்கியத்துவம் வாய்ந்ததாக உள்ளதால் மேற்கண்டவை பயிர் வகைகளைப் பாதிக்கும் முக்கிய காரணிகள் ஆகும்.

**நில உடைமையின் அளவு**

நில உடைமையின் அளவு சிறியதாக இருந்தால் உழவர்கள் உணவு தானியங்கள் பயிரிடுவதை விரும்புவர். நிலத்தின் அளவு குறிப்பிடத்தக்க அளவு அதிகமாக இருந்தால், உழவர்கள் பணப்பயிர்களையே பயிரிடுவர்.

**வேளாண் பண்டங்களின் விலை**

உழவர்கள் தங்களுக்கு அதிக லாபம் தரும் பயிர்களையே பயிரிட விரும்புவர்.

**வேளாண் உள்ளீடுகளின் கிடைப்பளவு**

உழவர்கள் அதிக தரம் வாய்ந்த உள்ளீடுகளைப் (இடு பொருள்கள்) பெற்றிருந்தால் பணப்பயிர்களையே அவர்கள் பயிரிடுவர். இதற்கு, உரங்கள், இரசாயனப் பொருட்கள், உயர் விளைச்சலைத் தரும் விதைகள் மற்றும் நீர்ப்பாசன வசதிகள் ஆகியன தேவைப்படுகின்றன.

**சமூக காரணிகள்**

சமூக பழக்க வழக்கங்கள், புதிய தொழில் நுட்ப முன்னேற்றத்தில் உழவர்களின் மனப்பான்மை முதலியன பயிரிடுதலின் வகைகளை தீர்மானிக்கும். புதிய தொழில்நுட்ப முன்னேற்றத்தை உழவர்கள் ஏற்றுக்கொண்டால், பணப்பயிர்களை பயிரிடுவதற்கு அவர்கள் முன்வருவர்.

**அரசின் கொள்கை**

சில குறிப்பிட்ட பயிர்களுக்கு அரசு வழங்கும் உதவித் தொகைகள் கூட பயிர் வகைகளைத் தீர்மானிக்கும்.

**பயிர் வகைகள் பற்றிய அறிவு**

பயிர் வகைகள் மற்றும் பயிரிடுதலின் பாங்கு பற்றிய தெளிவான அறிவு உழவர்களுக்கு இருக்குமானால் அவர்கள் தங்கள் பயிர் வகைகள் மாற்றிட விழைவர்.

**பயிர் காப்புத் திட்டம்**

பயிர்ப்பாதுகாப்புத் திட்டம் நாட்டின் பயிர்வகைகளைப் பாதுகாக்க உதவுகிறது. இடர்பாடுகள் உடைய பயிர்களைப் பயிரிட இப்பயிர் பாதுகாப்புத் திட்டம் உதவி செய்கிறது.

**அரசின் முயற்சிகள்**

கீழ்க்கண்ட வழிமுறைகளை பின்பற்றுவதன் மூலம் பயிர் வகைகளை பாதுகாக்க அரசு உதவுகிறது. **1.** உயிர் விளைச்சல் தரும் விதைகளை அரசின் முகவர்கள்மூலம் பகிர்ந்தளித்தல், **2.** இரசாயன உரங்கள் சலுகை விலையில் கிடைக்கும்படி செய்தல், **3.** வேளாண் பொருட்களை இருப்பு வைக்கவும், ஓரிடத்தில் இருந்து மற்றொரு இடத்திற்கு எடுத்து செல்லவும். போதுமான வசதிகளை வழங்குதல், **4.** வேளாண் பொருட்களுக்கான அங்காடி அமைப்பை திறம்பட செயல்படச் செய்தல் மூலம் உழவர்களுக்கு தங்கள் பண்டங்களுக்கு நல்ல விலை கிடைக்கச் செய்தல்.

**நிலஉடைமை**

நிலஉடைமையே வேளாண் உற்பத்தியின் அளவு, தரம், அமைப்பு ஆகியவற்றைத் தீர்மானிக்கும் முக்கிய காரணியாகும். நிலஉடைமை என்பது ஒரு உழவனுக்கு சொந்தமான மற்றும் பயிரிடும் நிலத்தின் அளவைக் குறிக்கும். இதை இரண்டு அடிப்படையில் கூறலாம்.

*1.* உரிமையின் அடிப்படையில், நிலஉடைமை என்பது, ஒரு உழவனுக்கு சொந்தமான நிலத்தின் அளவு **2.** பயிரிடுதல் (சாகுபடி செய்தல்) அடிப்படையில்.

நில உடைமை என்பது ஒரு குறிப்பிட்ட காலத்தில் சாகுபடி செய்யப்படும் நிலத்தின் அளவைக் குறகிகும்.

**நிலச் சீர்திருத்தங்கள்**

நிலச்சீர்திருத்தம் என்பது நில உரிமையாளர், குத்தகைதாரர், மற்றும் நில மேலாண்மை ஆகியவற்றில் ஏற்படும் கொள்கை மாற்றத்தைக் குறிக்கும்.

**இந்தியாவில் நில சீர்த்திருத்தத்தின் நோக்கங்கள்**

இந்தியாவில், நிலச் சீர்திருத்த திட்டங்கள் ஊரக முன்னேற்றத்திற்கு மிக முக்கியமான கொள்கையாகும். இதன் முக்கிய நோக்கங்களில் பின்வருமாறு :

1. சமஉடைமை சமுதாய அமைப்பை அடைய வேளாண் அமைப்பை மாற்றி அமைத்தல்
2. நிலஉடைமையில் சுரண்டுதலைத் தவிர்த்தல்
3. உழவனுக்கே நிலம் சொந்தம் என்ற கொள்கையை உறுதிப்படுத்துதல்
4. அடிப்படை நில அளவை (*Land base)* விரிவுபடுத்துதல் மூலம் கிராமப்புற ஏழை விவசாயிகளின் சமூக – பொருளாதார நிலையை உயர்த்துதல்.
5. வேளாண்உற்பத்தி மற்றும் உற்பத்தித் திறனை அதிகரிக்கச் செய்தல்.
6. நில அமைப்பை கிராமப்புற ஏழைகளுக்கு ஏதுவாகச் செய்தல்.
7. உள்ளூர் நிறுவனங்களின் மேம்பாட்டை சமப்படுத்துதல்.

**இந்தியாவில் நிலசீர்திருத்த முறைகள்**

இந்தியாவில், நிலச்சீர்திருத்தம் கீழ்கண்ட மூன்று வழிகளில் கையாளப்படுகிறது.

1. அரசு சலுகைகளான, கூட்டுறவு பண்ணை மற்றும் நிலங்களை ஒருங்கிணைத்தல் மூலம் தானாக முன்வந்து ஏற்றுக் கொள்ளுதல்.

2. நிலங்களை ஒருங்கிணைத்தல் போல சட்ட திருத்தங்கள் மூலமும், தாமே முன் வந்தும் நிலச் சீர்திருத்த முறைகளை ஏற்றுக் கொள்ளுதல்.

3. இடைத் தரகர்களை ஒழித்தல், குத்தகைதாரர்கள் சீர்திருத்தம், நில உச்ச வரம்பு ஆகிய பல வகையான சட்டங்கள் மூலம் கட்டாயப்படுத்துதல்.

**வேளாண் அங்காடி**

வேளாண்பொருட்களை பரிமாற்றம் செய்யப் பயன்படும் பொருளாதார செயல்பாட்டிற்கு வேளாண் அங்காடி என்று பொருள். இது வேளாண் பொருட்களின் மதிப்பை பணத்தால் தீர்மானிக்கிறது. மேலும் இது பண்டங்களை கடைசி நுகர்வோருக்கு வழங்குகிறது.

**வேளாண் அங்காடியின் முக்கியத்துவம்**

அங்காடியின் ஒரு குறிப்பிடத்தக்க பகுதியே வேளாண் அங்காடியாகும். இது வேளாண் பொருட்கள் தொடர்பானதாகும். நாட்டின் பெரும்பாலான பொருளியல் நடவடிக்கைகளுக்கு இது ஒரு அடிப்படையாகும். இது விற்பனைக்குரிய உபரியை விற்பனைக்காக அங்காடிக்கு கொண்டு வருகிறது. உழவர்கள் தங்கள் உற்பத்தியின் ஒரு பகுதியை சொந்த நுகர்வுக்காகவும் மற்றும் கால்நடைகளுக்காகவும் வைத்துக் கொண்டு எஞ்சிய பகுதியை விற்பனைக்கு கொண்டு வருகின்றனர். விற்பனைக்குரிய உபரியில் ஏற்படும் அதிகரிப்பு பொருளாதார முன்னேற்றத்தில் உயர்வினை ஏற்படுத்தும்.

**வேளாண் அங்காடியின் முக்கியத்துவம் பின்வருமாறு**

1. தொழிற்சாலைகளுக்குத் தேவையான கச்சாப்பொருட்களை வழங்குகிறது.

2. மக்களுக்கு தேவையான உணவு தானியங்களையும், மற்றும் கால்நடைகளுக்குத் தேவையான தீனியையும் வழங்குகிறது.

3. நாட்டின் உள்நாட்டு அங்காடி விரிவடைவதற்குத் தேவையான அடிப்படை அமைப்பை வழங்குகிறது.

4. உள்நாட்டு தேவையைவிட விற்பனைக்குரிய உபரி அதிகமாக இருக்கும்பொழுது, பன்னாட்டு அங்காடி விரிவடைவதற்கும், கனிசமான அளவு அந்நியச் செலாவணியை ஈட்டவும் உதவுகிறது.

அண்மை காலங்களில், உழவர்கள் தங்கள் உற்பத்திப் பண்டங்களை, கிராமப்புற அங்காடிகள், காட்சிகள், மண்டிகள், கூட்டுறவு சங்கங்கள் இவற்றில் விற்பனை செய்கின்றனர். மேலும் அரசு நேரடியாக உழவர்களிடமிருந்து வேளாண் பண்டங்களை வாங்குகிறது.

### விற்பனைக்குரிய உபரி

பண்ணைத் தேவைகளுக்கும், சொந்த நுகர்வுக்கும் போக எஞ்சியிருக்கும் உபரியே விற்பனைக்குரிய உபரி எனப்படும். இது விற்பனைக்கு எஞ்சியிருக்கும் பகுதியை குறிக்கும். விற்பனைக்குரிய உபரி என்பது திணிக்கப்பட்டதோ, செயற்கையானதோ அல்ல, நுகர்வு போக தானாக எஞ்சியது. இது வேளாண்மை முன்னேற்றத்திற்கு மட்டுமல்லாது, நாட்டின் ஒட்டு மொத்த பொருளாதார முன்னேற்றத்திற்கும் வழி வகுக்கிறது. இது வேளாண்மை துறையில் உற்பத்தி செய்யபட்ட உண்மை உபரியாகும். இதை கீழ்கண்டவாறு கணக்கிடலாம்.

(பழைய இருப்பு + நடப்பு உற்பத்தி) – (நுகர்வு + சேதாரம் + அடுத்த பருவகாலத்திற்கான விதைகள்)

விற்பனைக்குரிய உபரி என்பது வேளாண்மையின் மொத்த உபரியாகும். விற்பனை செய்யப்பட்ட உபரி என்பது வேளாண்மையின் நிகர உபரியாகும்.

### விற்பனைக்குரிய உபரியைத் தீர்மானிக்கும் காரணிகள்

விற்பனைக்குரிய உபரியைத் தீர்மானிக்கும் பலவகையான காரணிகளாவன : 1. நில உடைமையில் அளவு, 2. பயிர் உற்பத்தி 3. குடும்ப அளவு 4. பிற துறைகளிலிருந்து கிடைக்கும் வருமானம். இது தவிர, விற்பனைக்குரிய உபரியானது, திறமையான அங்காடி அமைப்பைப் பொருத்தும் அமையும்.

### விற்பனைக்குரிய உபரியின் முக்கியத்துவம்

விற்பனைக்குரிய உபரியை அதிகரித்தல் என்பது உண்மை உபரி ஆகும். இது உண்மை வருமானம், உண்மை சேமிப்பு, உண்மை மூலதன திரட்சி, உண்மை முதலீடு ஆகியவற்றை தீர்மானிக்கும். மேலும் இது பணவீக்கமற்ற பொருளாதார நலனை உயர்த்தும். உண்மை விற்பனைக்குரிய உபரியில் ஏற்படும் சரிவு, குறைந்த வளர்ச்சியுடைய நாடுகளில், உணவுப் பண்டங்களின் விலையை மட்டுமல்லாது, கூலிப்

பண்டங்களின் விலையையும் உயர்த்தும். மேலும் உழைப்பாளர்களின் உண்மை வாழ்க்கைத்தரம் குறையும்.

## இந்தியாவின் உணவுப் பிரச்சனை

உணவு, உடை, இருப்பிடம் முதலியன ஒரு மனிதனின் அடிப்படைத் தேவையாகும். இவற்றுள் உணவு தான் முதல் முக்கியத்துவம் வாய்ந்தது. போதுமான உணவு இல்லாமல் ஒருவரும் வாழ முடியாது. நாட்டில் உள்ள அனைத்து மக்களுக்கும் தேவையான உணவை வழங்குவது அரசின் முக்கிய கடமையாகும். தன் நாட்டு மக்களுக்கு போதுமான மற்றும் சத்தான உணவை வழங்கத் தவறிவிட்டால் அது பொருளாதார சமூக, மற்றும் அரசியல் ரீதியாக தோல்வியடைந்ததாகும். எனவே, நாட்டு மக்கள் அனைவருக்கும் தேவையான உணவை வழங்க வேண்டும். உணவுப் பொருள் உற்பத்தி, தேவையை சமாளிக்கும் அளவு போதுமானதாக இருக்க வேண்டும். தேவையை விட உற்பத்தி குறைவாக, இருப்பின், அரசு உணவுப் பொருள்களை இறக்குமதி செய்ய வேண்டும். இது வாணிப சமநிலையிலும், வாணிப செலுத்து சமநிலையிலும் சிக்கல்களை உருவாக்கும்.

இந்தியாவில், உணவுப் பிரச்சனை ஒரு தீராத பிரச்சனையாகும். *1937*-ல் பர்மா இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டதும் **1947**ல், ஏற்பட்ட வேலையின்மையும் இப்பிரச்சனையை மேலும் சிக்கலாக்கியது.

## இந்தியாவில் உணவுப் பிரச்சனையின் தன்மை

உலகில், மக்கள்தொகை அளவில் இந்தியா இரண்டாவது இடத்தை வகிக்கிறது. அதனால், உணவுப் பொருட்களின் தேவை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. இந்தியாவில், உணவு உற்பத்தி பற்றிய பிரச்சனை கீழ்கண்ட நான்கு கூறுகளைக் கொண்டள்ளது.

### 1. அளவு சார்ந்தவை

இம்முறையில் உணவுப் பிரச்சனையானது, உணவு தானியங்களின் தேவை, அளிப்பை சார்ந்ததாகும். நீண்ட காலமாக, உணவு தானியங்களின் உற்பத்தியானது, தேவையை விட குறைவாகும். கடந்த சில ஆண்டுகளாக, உணவு தானியங்களின் உள்நாட்டு உற்பத்தி கனிசமான அளவு உயர்ந்திருந்தாலும், நாம் அதிக அளவிலேயே உணவு தானியங்களை இறக்குமதி செய்ய வேண்டி உள்ளது.

### 2. தரம் சார்ந்தவை

இம்முறையில், உணவுப் பிரச்சனையானது, உணவிலுள்ள சத்தின் தன்மையை (கலோரிகளை) (*nutritive element)* அடிப்படையாகக் கொண்டது. வைட்டமின்கள், மினரல்கள், கார்போஹைட்ரேட்டுகள் போன்றவை சரிவிகித உணவில் அடங்கியுள்ள மூலக்கூறுகள் ஆகும். ஆனால் இம்மூலக்கூறுகள் போதுமான அளவில் பெரும்பாலான இந்திய மக்களுக்கு கிடைப்பதில்லை. வல்லுனர்களின் கருத்துப்படி ஒரு மனிதனுக்கு ஒரு நாளைக்கு 3000 கலோரிகள் தேவைப்படுகின்றது. ஆனால், சராசரியாக இந்திய மக்களுக்கு 2100 கலோரிகளே கிடைக்கின்றது. இந்தியாவில் நிலவும் வறுமையே இதற்கு முக்கிய காரணமாகும்.

### 3. பகிர்வு சார்ந்தவை

இம்முறையில், உணவுப் பிரச்சனையானது. வேளாண் பொருட்களின் அங்காடி அமைப்பை சார்ந்ததாகும். பகிர்விலுள்ள குறைபாடுகள் காரணமாக, பெருவாரியான மக்களுக்கு, போதுமான அளவு உணவு தானியங்கள் குறிப்பிட்ட நேரத்தில், நியாய விலையில் கிடைப்பதில்லை. சமூக விரோத சக்திகள், அங்காடியில், உணவுப் பண்டங்களுக்கு செயற்கை பற்றாக்குறையை ஏற்படுத்தி, நியாயமற்ற விலைக்கு விற்கின்றனர்.

### 4. பொருளாதாரம் சார்ந்தவை

இம்முறையில் உணவுப் பிரச்சனை என்பது மக்களின் வாங்கும் சக்தியைச் சார்ந்ததாகும். இந்தியாவின் நாட்டு வருமானமும், தலா வருமானமும் குறைவாக உள்ளது. இதன் காரணமாக, இந்திய மக்களால், சத்தான உணவு தானியங்களைப் போதுமான அளவில், தகுந்த விலை கொடுத்து வாங்கமுடிவதில்லை.

### உணவுப் பிரச்சனைக்கான காரணங்கள்

இந்தியாவில், உணவுப் பிரச்சனைக்கான முக்கிய காரணங்கள் பின்வருமாறு : *(i)* வேகமான மக்கள்தொகை வளர்ச்சி *(ii)* குறைவான வேளாண் உற்பத்தி திறன் *(iii)* இயற்கைச் சீற்றங்கள் *(iv)* பணப் பயிர்களின் வளர்ச்சி *(v)* நுகர்வுத் தன்மையில் ஏற்பட்டுள்ள மாற்றங்கள், *(vi)* உணவிற்கான வருமானத் தேவையில் ஏற்பட்டுள்ள உயர்வு *(vii)* பொருளாதார முன்னேற்றமும், நகர்மயமாதலும், *(viii)* பதுக்கல் மற்றும் கள்ளச் சந்தை.

## இந்திய அரசின் உணவுக் கொள்கை

நாட்டு விடுதலைக்குப்பிறகு, உணவு தானிய பற்றாக்குறை பிரச்சனையை அரசு தீவிரமாக ஆராய்ந்தது இப்பிரச்சனையை தீர்க்க அரசு பல விதிமுறைகளை மேற்கொண்டது அம்முறைகள் பின்வருமாறு :

## உணவு தானிய உற்பத்தியை அதிகரித்தல்

எல்லா ஐந்தாண்டுத் திட்டங்களிலும் வேளாண்மை முன்னேற்றத்திற்கு முன்னுரிமை வழங்கப்பட்டது. வேளாண்உற்பத்தி மற்றும் உற்பத்தி திறனை அதிகரிக்க, ஆழ உழுதல், பல பயிர் சாகுபடி திட்டம், உயர் விளைச்சல் தரும் விதைகள், உரங்களை அதிக அளவில் பயன்படுத்துதல் முதலிய திட்டங்கள் மேற்கொள்ளப்பட்டன. இம் முயற்சிகளின் விளைவாக உணவு தானிய உற்பத்தியானது 1950–51ல் *50.8* மில்லியன் டன்னாக இருந்தது. 1997–98ல் 192.4 மில்லியன் டன்னாக உயர்ந்தது.

## உணவு தானியங்கள் இறக்குமதி

உணவுப் பற்றாக்குறையை தீர்க்க அவ்வப்பொழுது அரசு உணவு தானியங்களை இறக்குமதி செய்தது. 1951ல் 48 லட்சம் டன் உணவு தானியங்கள் இறக்குமதி செய்யப்பட்டது. 1966ல் இது 103 லட்சம் டன்னாக உயர்ந்தது. 1991, *1992*, 1995, 1996 ஆகிய நான்கு வருடங்களில் உணவு தானியங்கள் எதுவும் இறக்குமதி செய்யப்படவில்லை.

## உணவு தானியங்களை கொள்முதல் செய்தல்

அரசு, உணவு தானியங்களை கொள்முதல் செய்யும் முறையை நடைமுறைப்படுத்தியது. இதன்படி, அரசு ஒவ்வொரு வருடமும் அங்காடியிலிருந்து, உணவு தானியங்களை கொள்முதல் செய்தது. இந்நோக்கத்திற்காக, ஒவ்வொரு வருடமும் முக்கியமான அனைத்து உணவு தானியங்களுக்கும் கொள்முதல் விலை அல்லது குறைந்த அளவு ஆதரவு விலையை அரசு அறிவித்தது. மேலும், இவ்விலையிலேயே அரசு உணவு தானியங்களை வாங்கியது. இது தரகர்கள் மற்றும் வணிகர்களின் முறைகேடான செயல்களிலிருந்து உழவர்களை காப்பாற்ற உதவுகிறது.

### உணவுப் பண்டங்களின் பொதுப் பங்கீட்டு முறை

உணவுப் பொருட்களை கட்டுப்படுத்தப்பட்ட விலையில் நியாயமான பங்கீடு கிடைக்க அரசு பொதுப் பங்கீட்டு முறையை செயல்படுத்தியது. இம்முறையின் படி நியாயவிலைக் கடைகள் திறக்கப்பட்டன. இத்தகை கடைகள் ஒவ்வொன்றும் 2000 மக்களுக்கு பணியாற்றும்படி அமைக்கப்பட்டன. 1998 மார்ச் 31 வரை 4.50 லட்சம் நியாய விலைக் கடைகள் நாடெங்கும் உள்ளன. இக்கடைகள் அரிசி, கோதுமை, சர்க்கரை, சமையல் எண்ணெய் மற்றும் மண்ணெண்ணெய் ஆகியவற்றை குறிப்பிட்ட அளவில், கட்டுப்படுத்தப்பட்ட விலையில் மக்களுக்கு வழங்குகின்றன.

### தாங்கியிருப்பு திட்டம் (Buffer Stock Scheme)

ஆண்டு முழுவதும் முக்கியமான உணவு தானியங்களின் அளிப்பு (வழங்கல்) சீராக இருப்பதை உறுதிசெய்ய அரசு ஒரு திட்டத்தை தொடங்கியது. எப்பொழுதெல்லாம் அவற்றின் விலை உயர்கிறதோ அப்பொழுதெல்லாம் விலையை நிலைநிறுத்துவதற்காக அரசு உணவு தானியங்களை தாங்கியிருப்புலிருந்து வெளியிடுகிறது. இந்திய அரசின் உணவுக் கொள்கையின்படி, தாங்கியிருப்பு திட்டத்தின் நடவடிக்கைகள் வழக்கமான ஒன்றாக இந்நாட்களில் காணப்படுகிறது.

### குறிப்பிடத்தக்க நிறுவனங்கள் ஏற்படுத்துதல்

வேளாண் உற்பத்தி மற்றும் உற்பத்தித் திறனை உயர்த்துவதற்கும், முறையான அளிப்பை உறுதிப்படுத்துவதற்கும், உணவு தானியங்களின் நியாயமான பங்கீட்டிற்கும் அரசு, குறிப்பிடத்தக்க பல நிறுவனங்களை ஏற்படுத்தியது. தேசீய விதை கழகம், வேளாண் தொழிற்கழகம், வேளாண் விலை குழு, இந்திய உணவு கழகம், இந்திய உர கழகம் முதலியன சில குறிப்பிடத்தக்க நிறுவனங்களாகும்.

### வேளாண்மை ஆராய்ச்சி மற்றும் முன்னேற்றம்

வேளாண்மைத் துறையில் ஆராய்ச்சி மற்றும் முன்னேற்றத்தை ஊக்கப்படுத்த அரசு பல முயற்சிகளை மேற்கொண்டது. ஆராய்ச்சி

நடவடிக்கைகளை மேற்கொள்ள பல வேளாண்மை பல்கலைக்கழகங்களும், இந்திய வேளாண்மை ஆராய்ச்சி வாரியம் *(ICAR)* ஆகியவற்றையும் அரசு ஏற்படுத்தியது.

### பொதுப் பங்கீட்டுத் துறை *(*PDS*)*

அவசியமான உணவுப் பண்டங்களை சீரான மற்றும் கட்டுப்படுத்தப்பட்ட முறையில் மக்களுக்கு பகிர்வு செய்வதே பொதுப் பங்கீட்டு முறை எனப்படும். இம்முறையின்படி அவசியமான நுகர்வுப் பொருட்களை குறிப்பிட்ட விலையில் அரசின் முகவர்கள் மூலம் மக்களுக்கு வழங்கப்படுகிறது.

### பொதுப் பங்கீட்டு முறையின் முக்கிய நோக்கங்கள்

### நியாய விலைக் கடைகள்

### (Fair Price Shops (FPS) or Ration Shops)

நாடு முழுவதும் உள்ள நியாய விலைக் கடைகள் மூலம் அடிப்படைத் தேவைப் பண்டங்களின் அளிப்பை பொதுப் பங்கீட்டு முறை உறுதிப்படுத்துகிறது. தற்போது இந்தியாவில் **4.50** லட்சம் நியாய விலைக் கடைகள் உள்ளன. அவற்றுள் **3.60** லட்சம் கடைகள் கிராமப் புறத்தில் செயல்படுகின்றன. **0.90** லட்சம் கடைகள் நகர்ப்புறத்தில் செயல்படுகின்றன. ஒவ்வொரு நியாயவிலைக் கடையும் **2000** மக்களுக்கு பணிபுரிகின்றன.

### நுகர்வோர் கூட்டுறவு சங்கங்கள்

தரமான பொருட்கள், நியாயமான விலையில் பொது மக்களுக்கு கிடைக்கும்படி செய்வதில் நுகர்வோர் கூட்டுறவு சங்கங்கள் பெரும் பங்காற்றுகிறது. மூன்று நிலையான கட்டமைப்பு கொண்ட நுகர்வோர் கூட்டுறவு சங்கங்கள் இந்தியாவில் உள்ளன. அவைகளாவன அடிப்படை நுகர்வோர் கூட்டுறவு சங்கங்கள், மைய நுகர்வோர் கூட்டுறவு சங்கங்கள், மாநில அளவிலான நுகர்வோர் கழகங்கள் ஆகும். ஊரகப் பகுதியில் நுகர்வுப் பண்டங்களை பங்கீடு செய்ய **50,000**க்கு மேற்பட்ட கிராமப்புற அளவிலான சங்கங்கள் உள்ளன.

## கட்டுப்படுத்தப்பட்ட மலிவு விலை துணிக் கடைகள்

## (Shops selling cloth at controlled prices)

இக்கடைகள் மலிவு விலைத் துணிகளை நுகர்வோருக்கு அவர்களது பங்கீட்டு அட்டைகள் மூலம் வழங்குகிறது. நாடு முழுவதும் **66,000**க்கும் மேற்பட்ட கடைகள் இவ்வகையான துணியை விற்பனை செய்கின்றன.

## சிறப்பு அங்காடி

அன்றாட தேவைக்கான பொருட்களை கட்டுப்படுத்தப்பட்ட விலையில் வழங்கும் அங்காடிக்கு சிறப்பு அங்காடி என்று பெயர். நுகர்வோருக்குத் தேவையான அனைத்துப் பொருட்களையும் ஒரே இடத்தில் பெற இவ்வங்காடிகள் உதவுகின்றன. இந்தியாவில் முக்கியமான நகரங்களில் இவ்வகை அங்காடிகள் இயங்குகின்றன.

## மண்ணெண்ணெய் சில்லறை விற்பனையாளர்கள்

சில மாநிலங்களில், மண்ணெண்ணெய் நியாய விலைக் கடைகள் மூலம் வழங்கப்படுகின்றது. மற்ற மாநிலங்களில் இந்நோக்கத்திற்கு உரிமம் பெற்ற சில சில்லறை விற்பனையாளர்கள் உள்ளனர்.

## பண்டங்களின் பகிர்வு

கோதுமை, அரிசி, சர்க்கரை, இறக்குமதி செய்யப்பட்ட சமையல் எண்ணெய்கள், மண்ணெண்ணெய் மற்றும் மென்மைக்கரி முதலிய ஆறு வகையான இன்றியமையாய் பண்டங்கள் பொதுப் பங்கீட்டு முறை வாயிலாக வழங்கப்படுகின்றன. இது தவிர, மற்ற இன்றியமையாப் பண்டங்களையும் இம்முறையில் சேர்த்துக் கொள்ள மாநில அரசுக்கு அதிகாரம் உள்ளது.

## பண்டங்களை வழங்குவதில் பொறுப்பு

பல்வேறு வகையான நிறுவனங்களுக்கு, கொள்முதல் செய்தல், ஒதுக்கீடு செய்தல், பகிர்வு செய்தல் முதலியவற்றிற்கு வேவ்வேறு பொறுப்புகள் கீழ்கண்டவாறு வழங்கப்பட்டுள்ளது. *(i)* கோதுமை, அரிசி மற்றும் ஏனைய உணவு தானியங்களுக்கு இந்திய உணவுக் கழகமும் *(ii)* இந்திய எண்ணெய் கழகம் மற்றும் பெட்ரோலிய அமைச்சகம் மண்ணெண்ணெய்க்கும் *(iii)* மென்மைக் கரிக்கான இந்திய நிலக்கரி லிமிடெட் *(iv)* தேசிய நெசவுத் தொழில் கழகம், *(v)* சமையல் எண்ணெய்கான மாநில வாணிப கழகம்.

## வேளாண்மை விலைக் கொள்கை

வேளாண்மைப் பொருட்களின் விலையை, நிர்ணயித்தல், ஒழுங்குபடுத்துதல், மற்றும் கட்டுப்படுத்துதல் ஆகிய கொள்கைக்கு வேளாண் விலைக் கொள்கை என்று பெயர். வேளாண் விலைக் கொள்கையின் முக்கிய நோக்கங்களாவன. (1) வேளாண் பண்டங்களுக்கான விலையை நிர்ணயித்தல், ஒழுங்குபடுத்துதல், மற்றும் கட்டுப்படுத்துதல் (2) விலையிலுள்ள ஏற்றத் தாழ்வுகளைத் தவிர்த்தல் (3) வேளாண் பண்டங்களுக்கான நியாய விலை, உழவர்களுக்கு கிடைக்கும்படி செய்தல் (4) நல்ல தரமான பண்டங்களை ஏற்றுக்கொள்ளத் தக்க விலையில் மக்களுக்கு வழங்குதல் (5) உணவு தானியங்கள் மற்றும் உணவு தானியங்கள் அல்லாத பொருட்களின் விலைகளுக்கிடையே நல்ல தொடர்பை நிலைப்படுத்துதல் (6) வெவ்வேறு மாநிலங்களுக்கிடையே விலைகளை ஒருங்கிணைத்தல்.

## அரசின் விலைக் கொள்கைகள்

### 1. குறைந்த ஆதரவு விலைகள்

விதைக்கும் பருவகாலத்தின், தொடக்கத்தில் ஒவ்வொரு முக்கிய வேளாண் பண்டங்களுக்கும் குறைந்த ஆதரவு விலையை அரசு அறிவிக்கும். வேளாண் பண்டங்களின் விலையானது ஒரு குறிப்பிட்ட அளவிற்குக் கீழ் (இறங்காது) குறையாது என்ற உறுதியை உழவர்களுக்கு இது வழங்ககுகிறது. உற்பத்தியை தொடர்ந்து செய்யவும், விரிவுபடுத்தவும் இவ்விலையானது உழவர்களுக்கு உறுதியையும், ஊக்கத்தையும் வழங்கும். உழவர்கள் தங்களால் ஆன முழு முயற்சிகளைக் கொண்டு உச்சகட்ட உற்பத்தியை அடைய முயல்வர். வேளாண் பண்டங்களின் விலையானது. குறைந்த ஆதரவு விலையைவிட குறையுமானால், அங்காடி உபரி அனைத்தையும் கொள்முதல் விலையில் அரசே வாங்கும்.

### 2. கொள்முதல் விலை

இது பயிர் அறுவடை காலத்தில், அரசு அறிவிக்கும் விலையாகும். இவ்விலையில் தான் அரசு வேளாண் பண்டங்களை உழவர்களிடமிருந்து பெரும் இவ்விலையானது இரண்டு முக்கிய நோக்கங்களைக் கொண்டது. (1) குறிப்பிடத்தக்க அளவிற்கு கீழ் விலை குறையாது என்ற உறுதியை இது உழவர்களுக்கு வழங்குகிறது. அங்காடி விலையானது. கொள்முதல் விலைக்கும் கீழ் குறையுமானால் தங்கள் பண்டங்களை அரசுக்கு விற்றுவிடலாம்.

*(2)* பொது பங்கீட்டு முறைக்கும், *''தாங்கிருப்புக்கும்''* *(buffer stock)* தேவையான பண்டங்களை கொள்முதல் செய்ய அரசுக்கு இது உதவுகிறது. வேளாண் செலவு மற்றும் விலைகள் குழுவின் *(Commission for Agricultural Cost and Prices –CACP)* பரிந்துரையின்படி அரசால் இவ்விலை அறிவிக்கப்படுகிறது. கோதுமை மற்றும் அரிசியை கொள்முதல் செய்ய இவ்விலையை பெருவாரியாக அரசு பயன்படுத்துகிறது. பொதுவாக குறைந்த ஆதரவு விலையைவிட கொள்முதல் விலை உயர்வாக இருக்கும்.

### 3. வழங்கல் விலை (Issue Price)

மாநில மற்றும் யூனியன் பிரதேசங்களுக்கு உணவு தானியங்கள் அளிப்பு மற்றும் ஒதுக்கீட்டிற்காக இந்திய உணவு கழகத்தல் அறிவிக்கப்படும் விலை வழங்கல் விலையாகும். இவ்விலை பொதுப்பங்கீட்டு முறைக்கான தேவையை பூர்த்தி செய்கிறது. நியாயவிலை கடைகளின் மூலம் வழங்கப்படும் பொருட்களின் விலையானது வழங்கல் விலையை சார்த்திருக்கும். வழங்கல் விலையானது, அங்காடி விலையைவிட குறைவாகவும், கொள்முதல் விலையைவிட அதிகமாகவும் இருக்கும்.

### 4. சில்லரை விலை

நியாய விலைக் கடைகள் மூலமாக பொதுப் பங்கீட்டு முறை செயல்படுகிறது. அரசால் நிர்ணயிக்கப்பட்ட விலையில், அடிப்படை நுகர்வுப் பண்டங்களை நியாய விலைகடைகள் மக்களுக்கு வழங்கும். இவ்விலைக்கு சில்லரை விலை என்று பெயர். இவ்விலை வழங்கல் விலையைவிட அதிகமாக இருக்கும். அப்பொழுதுதான் பொதுப் பங்கீட்டு முறையின் செலவினங்களை சரிகட்டவும், உரிமம் பெற்றவர்கள் சிறிதளவு இலாபத்தையும் அடையமுடியும்.

### 5. தாங்கிருப்பு நடவடிக்கைகள்

தாங்கிருப்பு நடவடிக்ககைகள் என்பது அரசால் உணவு இருப்பை வாங்குதல் மற்றும் விற்பனை செய்வதைக் குறிப்பதாகும். இந்த நடவடிக்கைகள் இரு முக்கிய நோக்கங்களைக் கொண்டது. 1. குறிப்பிடத்தக்க அளவில் விலை ஏற்றத் தாழ்வுகளை ஒழுங்குபடுத்துதலும், கட்டுப்படுத்துதலும். 2. அரசு உணவு தானியங்களை கொள்முதல் செய்ய உதவுகிறது. எனவே உணவு தானியங்கள் இருப்பு நாடு முழுவதும், ஆண்டு முழுவதும் ஒரே சீராக இரப்பதை உறுதி

செய்கிறது. இந்நடவடிக்கைகள் இந்திய உணவு கழகத்தால் *(FCI)* மேற்கொள்ளப்படுகிறது. எப்போதெல்லாம் உணவு தானிய இருப்பின் விலை வீழ்ச்சியடைகிறதோ, அப்பொழுது இந்திய உணவு கழகம் கொள்முதல் விலையில் அவற்றை வாங்குகிறது. மேலும் எப்பொழுதெல்லாம் விலை உயர்கிறதோ அப்பொழுது இந்திய உணவு கழகம் அவற்றை விற்பனை செய்ய முற்படுகிறது. இவ்வாறு தாங்கிருப்பு நடவடிக்கைகள் வேளாண் பொருட்களின் விலையை நிலைப்படுத்துவதில் முக்கியப் பங்காற்றுகிறது.

### வேளாண்மை உற்பத்தி

வேளாண்மை உற்பத்தி என்பது வேளாண்மை உள்ளீடுகளுக்கும் மற்றும் வெளியீடுகளுக்கும் இடையே உள்ள விகிதத்தைக் குறிக்கும். இத்திறனுள்ள வகையில் உள்ளீடுகள் எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன என்பதைக் குறிப்பதாகும். மேலும் கொடுக்கப்பட்ட உள்ளீடுகளிலிருந்து எவ்வளவு உற்பத்தி பெறப்படுகின்றது என்பதைக் குறிப்பதாகும். பின்வருமாறு இதனைக் கணக்கிடலாம்.

$$\text{வேளாண்மை உற்பத்தி} = \frac{\text{மொத்த உற்பத்தி}}{\text{வேலைக்கு அமர்த்தப்பட்ட உள்ளீடுகளின் அளவு}}$$

$$\text{நிலத்தின் உற்பத்தித் திறன்} = \frac{\text{மொத்த உற்பத்தி}}{\text{நிலத்தின் பரப்பளவு}}$$

$$\text{உழைப்பின் உற்பத்தித் திறன்} = \frac{\text{மொத்த உற்பத்தி}}{\text{வேலைக்கு அமர்த்தப்பட்ட ஆட்களின் எண்ணிக்கை}}$$

$$\text{மூலதனத்தின் உற்பத்தித் திறன்} = \frac{\text{மொத்த உற்பத்தி}}{\text{மொத்த முதலீட்டு அளவு}}$$

## இந்தியாவில் வேளாண்மை உற்பத்தியின் போக்கு

*1.* நிலத்தின் உற்பத்தித் திறன் : பிற நாடுகளின் சராசரி நிலத்தின் உற்பத்தித் திறனை ஒப்பிடும்போது இந்தியாவில் நிலத்தின் உற்பத்தின் மிகவும் குறைவாக உள்ளது. இது பின்வரும் இரண்டு அட்டவனைகள் மூலம் தெளிவாக தெரிய வருகிறது.

**அட்டவணை 6.2**

**ஹெக்டேர் ஒன்றுக்கு முக்கியப் பயிர்வகைகளின் விளைச்சல்**

(1 ஹெக்டேருக்கு – கி.கிராமில்)

| **பயிர் வகை** | **1950-51** | **1970-71** | **1990-91** | **2003-04** |
|---|---|---|---|---|
| உணவு தாண்யம் | *522* | *872* | *380* | *1731* |
| தாண்யங்கள் | *542* | *949* | *1571* | *1987* |
| பருப்பு வகைகள் | *441* | *524* | *578* | *637* |
| அரிசி | *668* | *4423* | *740* | *2077* |
| கோதுமை | *663* | *1307* | *2281* | *2713* |
| எண்ணெய் வித்துக்கள் | *481* | *579* | *771* | *1067* |

ஆதாரம் : பொருளாதார ஆய்வு **2005–2006**

அட்டவணை **6.3** மூலம் நிலத்தின் உற்பத்தித்திறன் மேம்பட்டு, இருப்பதையும் குறிப்பாக திட்ட காலத்தில் இது இரட்டிப்பாக இருப்பினும் இதனை நாம் திருப்திகரமாக இருக்கிறது என கருத இயலாது. பிற நாடுகளின், நிலத்தின் உற்பத்தித் திறனைக் காணும்போது இந்தியா மிகவும் பின்னடைவில் உள்ளதை நாம் காண்கிறோம். இந்தியாவில் ஹெக்டேர் ஒன்றிற்கு சராசரி உற்பத்தி உலக நாடுகளின் அனைத்துப் பயிர் வகைகளின் சராசரி உற்பத்தியைவிட மிகவும் குறைவாக உள்ளது. வேளாண் விளைநிலங்களின் நிலத்தின் உற்பத்தித் திறனில்

இந்தியா வளர்ந்த மற்றும் வளரும் நாடுகளின் நிலத்தின் உற்பத்தித் திறனைவிட மிகவும் பின்தங்கியுள்ளது.

**அட்டவணை 6.3**
**குறிப்பிட்ட பண்டங்களின் விளைச்சல் சர்வதேச நாடுகளுடன் ஒரு ஒப்பீடு.**

(1 ஹெக்டேருக்கு – கி.கிராமில்)

| பண்டம் | நாடுகள் | ஹெக்டேருக்கு கி.கி |
|---|---|---|
| அரிசி | தாய்லாந்து | *2597* |
| | இந்தியா | *2915* |
| | எகிப்து | *9135* |
| | யு.எஸ்.ஏ. | *7372* |
| கோதுமை | வங்களதேசம் | *2164* |
| | இந்தியா | *2770* |
| | சீனா | *3885* |
| | ஐக்கிய அரசு | *8043* |
| நிலக்கடலை | சீனா | *2986* |
| | அர்ஜென்டினா | *2329* |
| | பிரேசில் | *2043* |
| | இந்தியா | *794* |

**ஒரு தொழிலாளரின் உற்பத்தித் திறன்**

தொழில் மற்றும் இதர துறைகளோடு ஒப்பிடும்போது வேளாண்மையில் உள்ள ஒரு தொழிலாளரின் உற்பத்தித் திறன் மிகவும் குறைவாக உள்ளது.

கணக்கீட்டின்படி பேரளவு தொழில் உற்பத்தியில் உள்ளவரோடு ஒப்பிடும்போது வேளாண்மையில் உள்ள உற்பத்தித் தொழிலாளரின் உற்பத்தித் திறனானது மூன்றில் ஒரு பங்கே ஆகும். அதே நேரத்தில் சிறுதொழிலில் உள்ளவரோடு ஒப்பிடும்போது இரண்டில் ஒரு பங்கு ஆகும். இதன் தொடர்பாக, நாம் நினைவில் கொள்ள வேண்டியது என்னவெனில் மனிதசக்தி மற்றும் மூலதனத்தின் பங்கு இயற்கையைவிட மிக முக்கியமானதாகும். இரண்டாவதாக வேளாண்மையில், ஒரு தொழிலாளிக்கு செய்யப்படும் முதலீடு தொழிலில் செய்யப்படும் முதலீட்டைவிட மிகவும் குறைவாகும்.

# பயிற்சி

## பகுதி – அ

**I. சரியான விடையைத் தேர்ந்தெடுக்கவும்.**

1. இந்தியாவில் ஏறத்தாழ 64% உழைப்பாளர்கள் இதனைச் சார்ந்துள்ளனர்.

அ வேளாண்மை | ஆ. தொழில்துறை
இ. பணிகள் துறை | ஈ. அயல்நாட்டு வாணிபம்

2. வேளாண்மை உற்பத்தியை அளவிடும் முறை

அ. உரத்தின் நுகர்வளவு | ஆ. நீர்ப்பாசன வசதி
இ. நிலம் மற்றும் உழைப்பின் உற்பத்தித் திறன் | ஈ. எந்திரமயமாதல்

3. பயிர் செய்யப்படும் பகுதிகளில் ஏறத்தாழ 20% இதனால் நீர்ப்பாசனம் பெறுகிறது.

அ. ஆழ்குழாய்க்கிணறு | ஆ. அணைக்கட்டு பாசனம்
இ. வற்றாத கால்வாய்கள் | ஈ. குளங்கள்

4. மொத்த உள்நாட்டு உற்பத்திக்கு வேளாண்மையின் பங்கு குறைந்துள்ள அளவு

அ. 29.7% | ஆ. 56.1%
இ. 27.9% | ஈ. 26%

5. பசுமைப் புரட்சியால் குறிப்பாக இவ்வகை உணவு உற்பத்தியில் பெருக்கம் ஏற்பட்டது.

அ. அரிசி மற்றும் கரும்பு | ஆ. அரிசி மற்றும் கோதுமை
இ. கோதுமை மற்றும் கரும்பு | ஈ. கேழ்வரகு மற்றும் அரிசி

**II. கோடிட்ட இடங்களை நிரப்புக.**

6. ............. இந்தியாவில் வாழும் மக்களுக்கு ஒரு பெரும் வாழ்வாதாரமாகும்.

7. வேளாண்மைத் தொழில், தொழில்துறைக்கு ........... அளிக்கிறது.

8. குறிப்பிட்ட நேரத்தில் நிலத்தின் ஒரு குறிப்பிட்ட அளவை பல்வேறு வகை பயிர் செய்வதற்காக பயன்படுத்துவதை ........ என்கிறோம்.

9. குறிப்பிட்ட நேரத்தில் உழவர்கள் நிலத்தைப் பெற்றும் பயன்படுத்துவதையும் .............. முறை என்கிறோம்.

10. .............. எனப்படுவது வேளாண் விளைப் பொருள்கள் பரிமாற்றத்தைக் குறிப்பதாகும்.

**III. பொருத்துக :**

| | | |
|---|---|---|
| 11. | நிலங்கள் பிரிக்கப்படுதலும், துண்டாடப்படுதலும் | அ. புதிய வேளாண்மை விலைக் கொள்கை |
| 12. | ஒரு ஏக்கர் நிலத்தின் உற்பத்தி திடீரென்று அதிகரித்தல் | ஆ. கூட்டுக்குடும்ப முறை வீழ்ச்சி |
| 13. | ஜமீன்தாரி முறை | இ. பசுமைப்புரட்சி |
| 14. | மறைமுக வேலையின்மை | ஈ. ஆங்கிலேயர் ஆட்சி காலம் |
| 15. | 1986 | உ. வேளாண்மை |

**IV. ஓரிரு வார்த்தைகளில் விடையளிக்கவும் :**

16. ஒரு ஹெக்டேரில் விளையும் விளைச்சலை எவ்வாறு அழைக்கலாம்?

17. வேளாண்மை உற்பத்தித்திறனை எவ்வாறு அளவிடலாம்?

18. மூலதன ஆக்க விதம் வேளாண்மையில் குறைவானதா?

19. வேளாண்மை விளைச்சலை பாதிக்கக்கூடிய இயற்கை அம்சம் எது?

20. 'பயிர் பாதுகாப்பு' காப்பீடு முறை உழவர்களுக்கு அவசியமானதா?

## பகுதி – ஆ

**V. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடையளிக்கவும்.**

21. பொருளாதார முன்னேற்றத்திற்கு வேளாண்மையின் பங்கு என்ன?

22. வேளாண்மை வளர்ச்சியின் வகைகள் யாவை?

23. வேளாண்மை பின்னடைவுக்கான காரணிகளைப் பட்டியலிடுக.

24. வேளாண் பயிர் வகைகளை விளக்குக.

25 நில உடைமை முறை என்றால் என்ன?

## பகுதி – இ

**VI. பின்வரும் வினாக்களுக்கு ஒரு பக்க அளவில் விடையளிக்கவும்.**

26. வேளாண்மைப் பிரிவிற்கும் இதர பிரிவிற்கும் இடையே உள்ள தொடர்பினை விளக்குக.

27. இந்திய வேளாண்மையில் உள்ள இடர்ப்பாடுகளைக்களைய எடுக்கப்பட்டுள்ள நடவடிக்கைகளை ஆராய்க.

28. பயிர் வகை முறைகளை பாதிக்கும் காரணிகளை விவரி.

29. இந்தியாவில் நிலச் சீர்திருத்த முறையின் நோக்கங்களையும் நடவடிக்கைகளையும் விவரி.

30. வேளாண் விளை பொருள் சந்தையின் முக்கியத்துவம் யாது?

## பகுதி – ஈ

**VII. பின்வரும் வினாக்களுக்கு மூன்று பக்க அளவில் விடையளிக்கவும்.**

31. பொருளாதார வளர்ச்சிக்கு வேளாண்மையின் பங்கினை விவரமாக எடுத்துரைக்கவும்.

32. வேளாண்மைப் பின்னடைவுக்கான காரணிகளை விவரமாக எடுத்துரைக்கவும்.

33. வேளாண் பயிர் வகை முறையினை பாதிக்கும் காரணிகளை விவரமாக எடுத்துரைக்கவும்.

# பாடம் – 7

# தொழில்துறை

# *(Industrial Sector)*

### தொழில் மயமாக்கலின் தேவை

### (Need for Industrialisation)

தொழில்துறையின் தேவை மற்றும் பணி, உலகம் முழுவதும் வளர்ச்சிச் சிந்தனையுடைய அனைத்து நாடுகளாலும் உணரப்பட்டுள்ளது. தொழில்துறையானது, இதர துறைகளுடனான தனது முன்னேற்றம் மற்றும் பின்னடைவுத் தொடர்புகளினால், விரைவான பொருளாதார வளர்ச்சி மற்றும் மேம்பாட்டிற்கு முக்கிய பங்கு வகிக்கிறது. தனது தொழிற்புரட்சியினால் தற்கால செல்வந்த நாடுகள் நன்கு வளர்ச்சியுற்ற தொழிற்துறையைப் பெற்றுள்ளது.

“தொழில் மயமாக்குதல்” என்பது அதிக அளவு உற்பத்தி செய்யும் தொழிற்துறை பரவலாக்கம், அதிக நபர்களை வேலைக்கு அமர்த்துதல், பன்னாட்டுச் சந்தையை ஊக்குவித்தல், தனித் திறன் மேம்பாடு, அறிவியல், தொழில்நுட்பம், உற்பத்தியை மேம்படுத்த மின் அணு சாதனங்கள், கனிணி தொழில்நுட்பம் போன்றவற்றின் செயல்பாடுகள் அதிகரிக்கச் செய்தன. இவ்வாறான முனைப்பான தொழில் மயமாக்குதல் இல்லாமையாலேயே பல நாடுகள் பின்னடைவு பெற்று ஏழ்மை நிலையில் உள்ளன. எனவே, நவீன வளர்ச்சி நிலைகளில் விரைவான வளர்ச்சியையும் பொருளாதார மேம்பாட்டையும் பெறுவதற்கு தொழில் துறையின் முக்கியத்துவம் உணர்த்தப்படுகிறது. பின் வருபவை தொழில் துறையின் அவசியத்தை உணர்த்துகிறது.

### நாட்டு வருமானத்தை உயர்த்துதல்

தொழில் மயமாக்குதல் மூலம் நாட்டு வருமானம் உயர்வதால் பொருளாதாரம் சீரடைகிறது. தொழில் துறையில் முன்னேறிய நாடுகளில் நாட்டு வருமானத்தின் பெரும்பங்கு தொழிற்துறையிடமிருந்து வருகிறது.

**வேலைவாய்ப்புகள்**

**(Employment Opportunities)**

வளரும் நிலைக்கு உபரியான உழைப்பும் (அதிகமக்கள்தொகை) வேலையின்மையும் (*unemployment)* ஒரு பெரும் சவாலாகும் (*Challenge)* தொழில்மயமாதல், நாட்டின் உற்பத்தி வளங்களை நன்கு பயன்படுத்திக்கொள்வதால், வேலை வாய்ப்புப் பெருகிறது. இதனால் மக்களின் வருமானம் உயர்ந்து வாழ்க்கைத் தரமும் மேம்படுகிறது.

**உயர்வான வாழ்க்கைத் தரம் (Higher Living Standard)**

தொழில் மயமாதலின் மூலம் நாட்டு வருமானம் உயர்வதால் தொழில் பொருட்களின் மீது மக்களுக்கு நாட்டம் ஏற்படுகிறது. இதனால், மக்களின் 'தலா வருமானம்' உயர்வடைகிறது. எனவே வாழ்க்கைத்தரம் மேம்படுகிறது. இது திட்டமிட்ட வளர்ச்சிப் பாதையின் மூலமே சாத்தியமாகும்.

**ஏற்றுமதியை ஊக்குவித்தல் (Promoting Exports)**

தொழில்வளர்ச்சியில் முன்னேறிய நாடுகள், அதிக ஏற்றுமதியை செய்வதனால் அதிகப்படியான அந்நியச் செலாவணியை ஈட்டமுடிகிறது. தொழில் பொருட்களின் 'வருமான நெகிழ்ச்சி; அடிப்படைப் பண்டங்களைக் காட்டிலும், மிக அதிகமாக உள்ளது. எனவே, முன்னேறிய தொழில் பொருட்களை உற்பத்தி செய்வதன் மூலம், ஏற்றுமதி ஊக்குவிக்கப்பட்ட போதுமான அளவு அந்நியச் செலாவணியை ஈட்டமுடிகிறது.

**மூலதன ஆக்கம் (Capital Formation)**

வேலைவாய்ப்புக்களை பெருக்குதல், விரைவான தொழில் மயமாக்குதலினால் ஏற்படும் வருமானப் பெருக்கம் ஆகியன பொருளாதாரத்தில் சேமிப்பு மற்றும் மூலதன ஆக்கத்தை பெருக்குகிறது. மேலும், இதனால் ஏற்படும் அதிக முதலீட்டினால் தொழில் துறைகள் பல வகைகளிலும் முன்னேறுகிறது.

**தொழில்நுட்ப வளர்ச்சி (Technological Progress)**

வளர்ச்சி மற்றும் விரிவாக்கத்தால் தொழில்துறை, தொழில்நுட்ப

வளர்ச்சியினையும் ஊக்குவிக்கிறது. இந்த தொழில்நுட்ப வளர்ச்சியும், அதன் இயக்க ரீதியான பொருளடக்கமும், நாட்டின் ஒட்டுமொத்த பொருளாதாரத்தை பலப்படுத்துகிறது.

**தொழில் முன்னேற்றத்தின் வகைகள்**
**(Patterns of Industrial development)**

விடுதலைக்கு முன்னர், இந்தியா பின்தங்கிய நிலையிலேயே இருந்தது. இங்கு முறையான தொழில்துறை ஏதும் இல்லை. இரண்டாம் உலகப் போர், தொழில் வளர்ச்சியில் ஒரு சிறு முன்னேற்றத்தை ஏற்படுத்தியது. இருப்பினும், நாட்டு வருமானத்தில் தொழில்துறையின் பங்கு மிகவும் குறைவாகவே இருந்தது. விடுதலைபெற்ற இந்தியாவில், ஐந்தாண்டு திட்டங்கள் அமுல்படுத்தப்பட்ட பின்பு தொழில் துறையில் குறிப்பிடத்தக்க மாற்றம் ஏற்பட்டது. தற்கால இந்தியாவின், திட்டமிடுபவர்களால், விரைவான பொருளாதார வளர்ச்சியும், ஒட்டுமொத்த வளர்ச்சியும், தொழில் மயமாதலின் மூலமே முடியும் என்பது உணரப்பட்டது.

விரைவான வளர்ச்சி மற்றும் முன்னேற்றம் தவிர, பொருளாதார நாட்டுடைமையாதல் ஈர்க்கப்பட்ட வளர்ச்சித் திட்டத்தின் இந்திய நிலைப்பாடானது, பொதுத் துறையின் நெறிகாட்டுதலுடன் 'தன்னிறைவு' பெற விரும்பியது. மேலும், இதன் வழியே பெற்ற பொருளாதார வளர்ச்சியை அனைவரின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த பயன்படுத்திக் கொண்டது. அதிக அளவு உற்பத்தி மற்றும் வேலை வாய்ப்பு, பொருளாதார சமத்துவம் அடைதல், ஆகியவை முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் நீண்டகால நோக்கங்களாகும். இதன் கொள்கைகள், வளர்ச்சி மற்றும், பகிர்மான நீதி (*distributive justice)* ஆகியவற்றை நோக்கங்களாக கொண்டது. எனவே, தொழிற்சாலைகளின் விரிவான முன்னேற்றம் மற்றும் பல்துறைப் பெருக்கம் வளர்ச்சிக்கு அடிப்படையில் தேவை என தீர்மானிக்கப்பட்டது.

கடந்த 40 ஆண்டுகளில் அரசே பங்கேற்ற வளர்ச்சித் திட்டத்தின் மூலமாக நாம் பெற்ற அனுபவம் இந்திய தொழில் மற்றும் கட்டமைப்பின் வளர்ச்சியில் மிகப்பெரிய முக்கியமான சாதனைகளை கொண்டு வந்துள்ளது 'சமுதாய நீதியுனூடே' வளர்ச்சி (*Growth with Social Justice)* என்பது 1951ல் ஏற்படுத்தப்பட்ட திட்டமிடுதலின் முக்கிய நோக்கமாக தொடர்ந்து வந்துகொண்டு உள்ளது. சமுதாயத்தின் பெருவாரியான மக்கள் பயன்பெறும் வகையில் வளர்ச்சிப்பாதை மாற்றியமைக்கப்பட்டதோடு, போதுமான வேலை வாய்ப்பைப் பெருக்கி, வருமானப் பகிர்வினை செய்து, விரைவான தொழில்

வளர்ச்சியின்மூலம் அனைவரின் நலனும் பாதுகாக்கப்பட்டது. கலப்புப் பொருளாதாரத்தின் வழியேயான 'புதிய தொழில் கொள்கை நாட்டின்' தொழில்களில் பொதுத்துறை மிகப்பெரிய பங்கினை வகிப்பதால் வளர்ச்சியை முடுக்கிவிடுதல், வேலை வாய்ப்பை பெருக்குதல், வட்டார ஏற்றத்தாழ்வுகளை குறைத்தல், பொருளாதார சக்தி குவிப்பினை சோதனை செய்தல், தற்சார்பினை அடைதல் ஆகியவற்றை நோக்கங்களாகக்கொண்டு பொதுத்துறை தொழில்களில் முன்னேற்றம் ஏற்பட்டது.

**பொதுத்துறையின் முக்கியத்துவம்**

தொழில்துறை வளர்ச்சியின் வகையானது தனியார் மற்றும் பொதுத்துறைகளிடையே நிலவும் சம்பந்தப்பட்டப் பங்கினைப் பொறுத்தது. 'பொதுத்துறை' என்பது பொருளாதாரத்தின் ஒரு பங்கினை 'அரசே' நிர்வகித்துக் கொள்வதாகும். தனியார் துறை, தனி நபரோ அல்லது நிறுவனங்களோ சொந்தமாக ஏற்று நடத்துவதாகும். அது மிக முக்கியமான பல பணிகளை ஆற்றி வருகிறது. உற்பத்தி வளங்களை வேலைக்கமர்த்திக்கொண்டு 'பொதுத் துறைகள்' பொதுமக்களுக்கு வேண்டிய பல வசதிகளான ஆரம்பக் கல்வி, பொதுச் சுகாதாரம், குடிநீர், சமூகப் பணிகள், குழந்தைச் சத்துணவு, பெண்கள் மற்றும் தொழிலாளர் நலன், சமூகப் பாதுகாப்பு, உடல்நலம், வறுமை ஒழிப்பு, சாலை போக்குவரத்து, பாதுகாப்பு போன்றவற்றை அளித்து வருகிறது.

மேற்கூறிய அனைத்தும் பொருளாதாரத்தின் ஒட்டுமொத்த வளர்ச்சிக்கும், மக்களின் வாழ்க்கை தரம் உயர்வுக்கும் வழிவகை செய்யும்.

பொதுத்துறை பொறுப்புடன் பொதுமக்களுக்கு பண்டங்களை வழங்குவதைப் போல தனியார் அமைப்புக்களோ அல்லது நிறுவனங்களோ செயலாற்றுவதில்லை. இவ்வாறு "தனியார்த்துறையும், பொதுத் துறையில் சேர்ந்து செயல்படும் "கலப்புப் பொருளாதாரம்" அநேக தற்கால நாடுகள் கடை பிடிக்கும் வழிமுறையாகும். விடுதலைக்குப் பின்னர் பொருளாதாரத்தை ஒழுங்குமுறைப் படுத்தியும் நலத் திட்டங்களுக்கு வழிவகை செய்தும் இந்திய அரசு மாபெறும் பங்காற்றியது. இத்தகைய தேவைகளை நிறைவேற்ற இந்திய அரசானது பொதுத்துறைக்கு முக்கியத்துவம் கொடுத்து உற்பத்தியை உருவாக்கி ஏறத்தாழ 45 ஆண்டுகளாக வளர்ச்சித் திட்டத்திற்கு அடிகோலியது.

பல வளர்ந்த மற்றும் வளர்ந்து வரும் நாடுகளுக்கு உள்நாட்டு உற்பத்தியில் (*GDP)* அதிக பங்கினை பொதுத்துறை நிறுவனங்கள் குறிப்பிடத்தக்க அளவு தந்து வருகிறது. வளரும் உலகத்தில் அநேக நாடுகள் 1950களில், தனது தொழில்துறையை புதுப்பித்துக் கொள்வதிலும், "தற்சார்பு" மற்றும் 'பொருளாதார நாட்டுடைமையாதல் கொள்கை' ஆகிய இரண்டையும் குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டன. வளர்ச்சித் திட்டத்தின் வழியேயான பொதுத்துறை மேம்பாடு என்பது அடிப்படையில் வளங்களை உத்தம அளவு பயன்படுத்திக் கொள்வதும் சமமாகப் பங்கிடுவதும் ஆகும். அரசியல் சாசன கடமையான "சமுதாயத்தின் பொருள்சார் வளங்கள் அனைத்தும் பொது நலனை அடிப்படையாகக் கொண்டு பங்கீடு செய்தல் வேண்டும்" என்பதை இந்திய நாடும் உணர்ந்து பொதுத்துறை நிறுவனங்களை அதிக அளவு விரிவாக்கம் செய்தது.

விடுதலைபெற்றது முதல் 50, 60, 70 ஆண்டுகளில் பொதுத்துறை நிறுவனங்கள் நாட்டின் நிலையான வளர்ச்சிக்கு முதன்மையான இயங்கு சக்தியாக முக்கியப் பங்கு வகித்தது. பொதுதுறை நிறுவனங்கள் நாட்டு வருமானத்திற்கு அளித்த பங்களிப்பு 1950–51ல் 7.5% ஆகும். ஆனால் 1982–83ல் இதுவே 24% ஆக உயர்ந்தது. பொருளாதார முன்னேற்றம் அடிப்படை, கனரகத் தொழில், மற்றும் போர்த்திறன் சார்ந்த தொழில்கள் வாயிலாக பொதுத் துறையின் பங்களிப்பு குறிப்பிடத்தக்க அளவு உயர்ந்தது. பொதுத் துறையின் தொழில், வேளாண்மை மற்றும் உள்கட்டமைப்பு, மற்றும் அனைத்து தனியார்த் துறைகளின் வளர்ச்சிக்கும் பொதுறையின் பங்கு மற்றும் பங்களிப்பு குறிப்பிடத்தக்க அளவு இருந்தது. தொழில் துறையில் பொதுத்துறையின் முதலீடு, வலுவான பல நிலை தொழில் ஆதாரத்தை உருவாக்கியது. இது பொருளாதாரத்திற்கு பல வழிகளில் உதவிபுரிந்தது. பின்னடைவு (*Backward)* மற்றும் முன்னேற்ற *(forward)* தொடர்பின் (*linkages)* காரணமாக சிறுதொழில்கள் மற்றும், துணைத் தொழில்கள் வளர்ச்சியுற்றன. இது வேளாண் அடிப்படையிலான தொழில்களை வளர்ச்சியுறச் செய்ததோடு, வேளாண் தொழிலுக்கு அவசியமான இடுபொருள்கள், இரசாயன உரங்கள், மின்சாரம் போன்றவற்றை அளித்து வேளாண்தொழில் சார்ந்த தொழில்களை வளர்த்தன. இதனால், உள்கட்டமைப்பு மேம்பட்டு தனியார்த்துறைக்கு உதவியது. பொதுத்துறை அதிக வேலை வாய்ப்பளித்ததன் மூலம் மக்களின் நலனில் மாபெரும் அக்கறை கொண்டுள்ளது.

எனினும், 1990 சந்தைப் பொருளாதாரம் மற்றும் தனியார் துறை பற்றிய சிந்தனையாளர்கள் மேற்காணும் வளர்ச்சியை குறை கூறினர். இருப்பினும் பொதுத்துறை அநேக முக்கிய பங்கு ஏற்று பணியாற்றி வருகிறது.

**தொழில் வளர்ச்சியின் வகைகள்**
**(Pattern of Industrial Growth)**

குறிப்பிட்ட வகையான தொழில் வளர்ச்சி, பயன்பாடு அடிப்படையில் வகைப்படுத்தப்பட்ட தொழில்களைப் பொறுத்து காணப்படும்.

தொழில்கள் நான்கு மிக முக்கியப் பிரிவுகளை கொண்டுள்ளது.

***1. அடிப்படைப் பண்டங்கள் :*** சிமெண்ட், இரசாயனப் பொருட்கள், உரம் போன்றவை.

***2. மூலதனப் பண்டங்கள் :*** இயந்திரங்கள், இயந்திர தளவாடங்கள், பொறியியல் பண்டங்கள்.

***3. நுகர்வுப் பண்டங்கள் :*** மிதிவண்டி, தொலைக்காட்சிபெட்டி, குளிர்சாதனப்பெட்டி, இருசக்கர வாகனம், மகிழ்வூந்து, உணவுப் பண்டங்கள், குளிர் பானங்கள்.

***4. இடைவினைப் பண்டங்கள் :*** பெயிண்ட், பிளைவுட், பைப் மற்றும் குழாய்கள், துணைப் பொருள்கள் போன்றவை.

**அட்டவணை 7.1**

**தொழில் வளர்ச்சியின் வகைகள்**

**ஆண்டு சராசரி வளர்ச்சி விகிதங்கள்**

| | **1980-91** | **1992-2000** | **2001-05** |
|---|---|---|---|
| அடிப்படைப் பண்டங்கள் | *7.4* | *5.9* | *4.6* |
| மூலதனப் பண்டங்கள் | *9.4* | *5.4* | *8.6* |
| நுகர்வுப் பண்டங்கள் | *6.0* | *6.5* | *8.0* |
| இடைவினைப் பண்டங்கள் | *4.9* | *8.6* | *4.5* |

அட்டவணை 7.1 அனைத்து நான்கு பிரிவுகளிலும் ஆண்டுச் சராசரி வளர்ச்சி வீதத்தின் போக்கைக் காட்டுகிறது. தொழில் வளர்ச்சி என்பது நுகர்வுப் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்கள் தொடர்ந்து முன்னேறுகிறது என்பதைக் காட்டுகிறது. இது 1980–81ல் *6* விழுக்காடாக உள்ளது. 2001–05ல் 8 விழுக்காடாக உயர்ந்துள்ளது. மூலதனப் பண்டங்களின் உற்பத்தி செய்யும் தொழில்கள் வளர்ச்சி *1980-91*ல் 9.4 விழுக் காட்டிலிருந்து 1992–2000ல் 5.4 சதவீதமாக வீழ்ச்சியடைந்தது. ஆனால் சமீபத்தில் 8.6 விழுக்காடு பெற்று மீண்டும் வளர்ச்சியுற்றது. அடிப்படை பண்டங்கள் உற்பத்தித் தொழிலானது 1980 முதல் தொடர்ந்து சரிந்து கொண்டே வருகிறது.

**இரும்பு எஃகுத் தொழில் (Steel Industry)**

இரும்பு எஃகுத் தொழில்கள் மற்ற எல்லா தொழில்களுக்கும் **திறவுகோலாக** உள்ளது. உற்பத்தி, சுரங்கத் தொழில், கட்டுமானம், மின்சாரம், போக்குவரத்து மற்றும் இதர உள்கட்டமைப்பு மற்றும் பணிப்பிரிவுகள் அனைத்திற்கும் இரும்பு எஃகு உள்ளீடாகப் பயன்படுகிறது. எனவே, எஃகு வளர்ச்சி பொருளாதாரத்தின் அனைத்துத் துறைகளுக்கும் முடுக்கி விசையை ஏற்படுத்துகிறது. எனவே இரும்பு எஃகுத் தொழில் **“தாய்த் தொழில்”** என்று அழைக்கப்படுகிறது.

தொழில்மயமாதல், நாட்டு வருமானம், அதிக வேலைவாய்ப்பை உருவாக்குதல் ஆகியவற்றுக்கு இரும்பு எஃகுத் தொழில் அதிக அளவு தனது பங்கினை ஆற்றி வருகிறது. எனினும், அதிக ஊதியமற்ற விலைகள் (*unremunerative prices),* மிகப்பெரிய பொதுத்துறை இரும்பு எஃகு நிறுவனங்களில் காணப்படும் திறமையற்ற மேலாண்மை, தொழில் நுட்பவாதிகளை விட அதிகாரிகளின் ஆதிக்கம் ஆகியவை இரும்பு எஃகுத் தொழிலில் நிலவும் மிகப்பெரிய பிரச்சினைகள் ஆகும்.

இந்திய இரும்பு எஃகுத்தொழில் நிறுவனம் (*SAIL) 70*வதுகளின் இடைக்காலத்தில் நிறுவப்பெற்றது. இதன் முக்கிய பணிகள் மூலப்பொருள்களை (*raw materials)* பெற உதவி செய்வதும் மற்றும் அநேக இரும்பு எஃகுத் தொழில்களின் வளர்ச்சிக்கு ஒருங்கிணைப் பாளராக செயல்படுவதும் ஆகும். 1992 ஆம் ஆண்டு விலை மற்றும் பகிர்மானக் கட்டுப்பாட்டை இந்நிறுவனம் (*SAIL)* அகற்றியது ஒரு மிகப்பெரிய கொள்கைச் சீர்திருத்தம் எனலாம்.

விடுதலை பெற்றது முதல் இரும்பு எஃகுத் தொழில் உற்பத்தி ஏறத்தாழ 57 மடங்கு உயர்வடைந்துள்ளது. 1951 ஆம் ஆண்டு ஆண்டொன்றுக்கு 7 மில்லியன் டன் ஆக இருந்த இரும்பு எஃகுத் தொழில் உற்பத்தி 2004–05 ஆண்டுகளில் 40 மில்லியன் டன் ஆக உயர்ந்துள்ளது.

## நெசவுத் தொழில் (Textiles)

இந்தியாவில் நெசவுத்தொழில் மிகவும் பெரியதுமான மற்றும் பழமை வாய்ந்ததுமான தொழிலாகும். இத்தொழில் நாட்டின் அனைத்து பகுதிகளிலும் பரவியுள்ளது. இத்தொழில் உழைப்பை வேலைக்கமர்த்திக் கொள்வதிலும் வெளியீட்டினை *(out-put)* வியாபாரமாக்குவதிலும் நன்றாக ஒழுங்குபடுத்தப்பட்டுள்ளது.

மொத்த தொழில்துறை உற்பத்தியில் 20 விழுக்காடு நெசவுத்தொழில் மூலம் கிடைக்கிறது. 20 மில்லியன் மக்கள்தொகை இதன்மூலம் வேலை பெறுகின்றனர். முதல் ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் 4775 மில்லியன் சதுர மீட்டர் துணி உற்பத்தி செய்யப்பட்டுள்ளது. அதுமுதல் இத்தொழிலில் மிகப் பெரிய மாற்றம் ஏற்பட்டது. 2004–05 ஆண்டுகளில் 45378 மில்லியன் சதுர மீட்டர் துணி உற்பத்தி செய்யப்பட்டுள்ளது. இது விடுதலை பெற்றது முதல் நெசவு உற்பத்தியை கணக்கிடும் போது ஏறத்தாழ 10 மடங்கு உயர்வினைக் குறிக்கிறது.

போதுமானஅளவு மூலப்பொருள் கிடைக்காமை, உள்ளீடுப் பொருள்களின் விலைஏற்றம், சிறு ஆலைகளின் குறைவான இலாபம், நவீனமாக்குதலின் ஏற்படும் அதிக செலவு ஆகியவை நெசவுத் தொழில் சந்திக்கும் மிக முக்கியப் பிரச்சினைகள் ஆகும்.

சமீப ஆண்டுகளில், நிதிநிலை அறிக்கையில் அளிக்கப்படும் சலுகைகள், இறக்குமதி வரி விதிப்பில் உள்ள பங்கீட்டுமுறை, தொழில்நுட்ப மேம்பாட்டுத் திட்டத்தின்கீழ் அரசின் உதவி ஆகியவை நெசவுத்தொழிலுக்கு இறுதிநிலை பங்குத்தொகையை அளிக்கத் தொடங்கியுள்ளது.

## சிமெண்டு ஆலைத்தொழில் (Cement)

அதிக வளர்ச்சி வாய்ப்புக்கள் உள்ள ஒரு மிகப்பெரிய தொழில் சிமெண்டு தொழில் ஆகும். தற்போது உள்ள நாட்டின் வளர்ச்சிப் பாதையில் கட்டுமான தொழில் மிக முக்கிய பணியாற்றி வருவதால் இதற்கு சிமெண்ட் பெரும் கச்சாப்

பொருளாக அமைகிறது. இத்தொழில் கச்சாப் பொருள், இயந்திரங்கள், தொழில்நுட்பம் மற்றும் பெருகிவரும் உள்ளூர் தேவை ஆகியவற்றில் ‘தன்னிறைவைப் பெற்றுள்ளது’.

மேற்காணும் அனைத்து நன்மைகளின் விளைவாக உலகின் சிமெண்ட் உற்பத்தியில் 6 விழுக்காடு பங்கினை இந்தியா பெற்றுள்ளது. கடந்த *20* ஆண்டுகளில் ஆண்டொன்றுக்கு 8.4 விழுக்காடு வளர்ச்சியினைப் பெற்றுள்ளது. சிமெண்ட் தொழிற்சாலை 140.53 மில்லியன் மெட்ரிக் டன் நிறுவன திறனைப் பெற்றுள்ளது. இதனுள் 365 சிறு தொழிற்சாலைகளும், 120 பெரிய தொழிற்சாலைகளும் அடங்கும். பெரிய தொழிற்சாலைகளின் திறன் பயன்பாடு 80 சதவீத அளவிற்கு அதிகம் உயர்ந்தது.

தற்கால கொள்கைச் சீர்திருத்தங்கள் சிமெண்டு தொழிற்சாலைகளின் திறன் பயன்பாட்டினை மேலும் உயர்த்துவதாக உள்ளது. அதிக உள்ளீட்டுச் செலவுகளும் மற்றும் ஏற்றுமதிக்கான உள்கட்டமைப்பு இன்மையும் இத்தொழில் (சிமெண்ட்) சந்திக்கும் பிரச்சினைகள் ஆகும். 10ஆம் ஐந்தாண்டுத் திட்டம் 203 மில்லியன் மெட்ரிக் டன் உற்பத்தி இலக்கு நிர்ணயித்து; 2002–07 ஆண்டுகளில் 17600 கோடி முதலீட்டினை நிர்ணயித்துள்ளது.

**சர்க்கரை**

சர்க்கரைத் தொழில் வேளாண்மையைச் சார்ந்த ஒரு முக்கியத் தொழில் ஆகும். பொருளாதாரத்திற்கு இதன் பங்களிப்பு பலவகையாகும். வேலைவாய்ப்பின் மூலம் வருமானத்தைப் பெருக்குதல், போக்குவரத்து மற்றும் தொலைத் தொடர்பு வசதிகளை பெருக்குவதன்மூலம் சர்க்கரைத் தொழில் கிராமப்புற வளர்ச்சிக்கு பேருதவியாக இருந்து வருகிறது. இத்துடன் கூட சர்க்கரை ஆலை தொழில் பிற தொழில்களுக்கு உள்ளீடுகளை *(inputs)* அளிக்கிறது. ஏற்றுமதியின் வாயிலாக அயல்நாடுகளிலிருந்து அந்நியச் செலாவணியையும் இத்தொழில் ஈட்டித்தருகிறது.

உலகிலேயே அதிக அளவு சர்க்கரை உற்பத்தி செய்யும் நாடாக இந்தியா விளங்குகிறது. உலக சர்க்கரை உற்பத்தியில் 15 விழுக்காட்டினை இந்தியா பெற்றுள்ளது. எனினும், பன்னாட்டு வாணிபத்தில் இந்தியாவின் சர்க்கரைத் தொழிலின் பங்கு **மிகவும் குறைவே. அதாவது 0.05** விழுக்காடு சர்க்கரை ஆலைத் தொழில் எதிர்நோக்கும் சில பிரச்சினைகள், ஆலைகளின் திறனை முழுமையாகப் பயன்படுத்தாமை, கரும்பு உற்பத்தியாளர்களுக்கு குறைவான விலை நிர்ணயம் செய்தல், தொழில் நலிவு, தொழிற்சாலைகளை மூடுதல் ஆகியனவாகும்.

அரசின் ஆதரவு, வங்கி மற்றும் நிதி நிறுவனங்களின் நிவாரணம் மூலம் நலிவடைந்த சர்க்கரை ஆலைகளை உயிர்பிக்கச் செய்தல். *10*ஆம் ஐந்தாண்டுத் திட்டம் (2002–2007) ஆண்டுகளில் ரூ.1300 கோடி முதலீட்டிணை இலக்காகக் கொண்டுள்ளது.

## தொழில் கொள்கைகள்

விடுதலைக்கு முன்னர் தொழில்துறை மிகச் சிறியதாகவும் இருந்தது. நாட்டில், குறிப்பிடத்தக்க அளவில் தொழில்கொள்கை ஏதும் இல்லை. ஆனால், விடுதலைக்குப் பின்னர் *1948* ஆம் ஆண்டு தீர்மானிக்கப்பட்ட தொழிற்கொள்கை முதன்முதலில் தொழில்மயமாக்கலுக்கு அளிக்கப்பட்ட ஊக்கமெனலாம்.

எனினும், 1951 ஆம் ஆண்டு தொடங்கப்பெற்ற முதலாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் விரிவான, குறிப்பிடத்தக்க மற்றும் உண்மையான தொழில் மயமாக்குதல் கொள்கை உருவாகியது. தொழில் மயமாக்குதலில் ஒரு மிகப்பெரிய மாற்றம் என்பது 1951 ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட (வளர்ச்சி மற்றும் ஒழுங்குபடுத்துதல்) சட்டம் ஆகும். இச்சட்டத்தின்மூலம் மிக முக்கிய மற்றும் அடிப்படை தொழிற்சாலைகளை அரசு தன் வசம் கொண்டு வந்தது. தேசிய முக்கியத்துவம் வாய்ந்த பின்வரும் தொழில்கள் அரசின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரப் பட்டன. அவையாவன, அனுமின்சக்தி, போர்த்தளவாடங்கள், விமானப் போக்குவரத்து, கப்பல் கட்டுதல், தொலைத் தொடர்பு, இரும்பு எஃகுத் தொழில், நிலக்கரி, கனிவளங்கள் போன்றவை ஆகும்.

இரண்டாம் ஐந்தாண்டுத்திட்டம், தொழிற்கொள்கை மற்றும் நாட்டின் வளர்ச்சியில் மிகப்பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியது. விரைவான தொழில் வளர்ச்சியின்மூலம் பொருளாதார வளர்ச்சியை முடுக்கி விடுதலே இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் முக்கியக் குறிக்கோளாகும்.

*1950* ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட அரசியலமைப்பையொட்டி *1956* ஆம்ஆண்டு உருவாக்கப்பட்ட தொழிற்கொள்கைத் தீர்மானத்தின்படி விரைவான தொழில்மயமாதலின் அடிப்படை திட்டமிடுதலும், நெறிப்படுத்துதலும் உருவாக்கப்பட்டது. 1956 ஆம் ஆண்டு தீர்மானம் "நாட்டின் நோக்கம் சமதர்ம பொருளாதாரத்தை ஏற்றுக்கொள்ளுதல்" என்பதாகும். இதன்படி அனைத்து தொழில்களும் (அடிப்படை மற்றும் போர்த் தொழில்கள்) அல்லது சமூகப் பயன்பாட்டு தன்மையுடைய அடிப்படை

முக்கியத்துவம் வாய்ந்த தொழில்கள் பொதுத்துறையின் பொறுப்பிலிருந்து நல்லமுறையில் திட்டமிட்டு விரைவான வளர்ச்சி அடையச் செய்ய வேண்டும். இவ்வாறு, அரசு எதிர்கால தொழிற்சாலைகளின் வளர்ச்சிக்கு நேரடி பொறுப்பேற்க நேரிட்டது.

*1956*ஆம் ஆண்டு தீர்மானத்தின் மற்றுமொரு பரிமாணம் என்னவெனில், அடிப்படை மற்றும் கனரகத் தொழில்கள், மூலதனப் பொருள்களை உருவாக்கும் தொழில்கள், 'தற்சார்பு' பெறும் வகையில் முக்கியத் துறைகளில் பங்கேற்க செய்தல் ஆகும். நுகர்வு பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழிலைவிட, மூலதனப் பண்டங்களை உற்பத்தி செய்யும் தொழில்களை ஒரு குறிப்பிட்ட கால அளவுக்குள் விரைவான வளர்ச்சிப் பெற இயலும் என்பதை உணர்த்தியது. இத்திட்டம் எதிர்கால பொருளாதார வளர்ச்சிக்கு அடித்தளமிட்டது. மேலும் இத்திட்டம் வேளாண்மை, ஊரக சிறு தொழில்களுக்கும், அடிப்படைக் கட்டமைப்புகளுக்கும் பேருதவி புரிந்தது.

## பொதுத் துறையை மாற்றியமைத்தல் (Public Sector Restructuring)

*1991* ஆம் ஆண்டு முதல் தொடங்கப்பெற்ற பேரியல் பொருளாதார சீர்திருத்தங்கள், பொதுத்துறை நிறுவனங்களை குறிப்பிடத்தக்க அளவிற்கு சீரமைத்தது. விடுதலைக்குப் பின்னர் தொடரப்பட்ட இந்தியப் பொருளாதாரக் கொள்கைகள், புதிய பொருளாதார சீர்திருத்தக் கொள்கைகள்மூலம் முற்றிலும் மாற்றப்பட்டது. நாட்டின் பொருளாதாரம், அரசின் தலையீடுகளிலிருந்து விலகி சந்தையை சார்ந்ததாக மாறியது. பேரியல் பொருளாதார நிலைத்தன்மையின் பாதை; நாட்டின் திட்டமிட்ட பொருளாதாரத்தை சந்தை வழி போட்டியிடும் பொருளாதாரமாக ஆக்கியது. இதனைப் பொருளாதாரக் கொள்கைச் சீர்திருத்தம் என்று அழைக்கிறோம்.

இந்த வழிமுறை, தாராளமயமாக்குதல், தனியார்மயமாக்குதல் மற்றும் உலக மயமாக்குதல் ஆகியவற்றை உள்ளடக்கியது. இப்புதிய கொள்கைகள் பொதுத்துறையின் பெரும்பங்கினை (*dominant role)* குறைத்தது. இதற்கு (பொதுத்துறையின் பங்கு குறைவிற்கு) காரணம், **1991** புதிய தொழில் கொள்கை, பங்கு விலக்கல் *(disinvestment)* தனியார் மற்றும் அயல்நாட்டு மூலதனத்தை ஊக்குவித்தல் போன்றவை ஆகும். மேற்கூறிய அனைத்து கொள்கைத் தூண்டுதல்களும் பொதுத்துறை நிறுவனங்களை மாற்றி அமைத்தது. பொதுத்துறை நிறுவனங்கள் வேலைவாய்ப்பை பெருக்குதல்

மற்றும் வருமானப் பகிர்வு செய்தல் என்ற நிலையிலிருந்து மாறி உச்ச இலாபத்தை நோக்கமாகக் கொண்டு செயல்படத் தொடங்கியது. பொதுத் துறையின் செயல்பாடுகள் இலாப நோக்கத்தைக் கொண்டு செயல்படுவதை பலர் குறை கூறினர். நலம் அடிப்படையிலான 'விலைக் கொள்கை' திறனாய்வுக்குட்பட்டது.

### 1991 ஆம் ஆண்டின் புதிய தொழில் கொள்கை

ஜூலை 1991 ஆம் ஆண்டு முதல் அமுல்படுத்தப்பட்ட புதிய தொழில் கொள்கையின் மிக முக்கிய நோக்கம் தொழில் துறையில் போட்டியை ஊக்குவித்தலின் மூலம் தனியார் நிறுவனங்களை அதிக அளவு உற்பத்தியில் ஈடுபடச் செய்தலே ஆகும். கடந்த ஆண்டுகளில் தொழில் அமைப்பு வளர்ச்சியில் ஏற்பட்டிருந்த 'உருச்சிதைவை' சரிசெய்யும் விதத்திலும், முந்தய இலாபத்தை சேர்த்து ஈட்டும் பொருட்டும் தொழில்துறை செயல்படத் துவங்கியது. மேலும் இத்துறை வேலை வாய்ப்பு மற்றும் உற்பத்தியில் பன்னாட்டு அளவில் போட்டியிட்டு முன்னேறும் நோக்கத்தையும் கொண்டிருந்தது.

### பொது நிறுவனங்களை மறுச்சீரமைத்தலின் சிறப்பு சீர்திருத்தங்கள் பின்வருமாறு

*(i)* பொருளாதாரத்தில் தனியார்த் துறை பங்கேற்பை ஊக்குவித்தல். பொதுத் துறைக்கென தொழில்துறையில் ஒதுக்கப்பட்ட பகுதிகள் 17லிருந்து 8ஆக குறிப்பிடத்தக்க அளவு குறைக்கப்பட்டது. குறிப்பாக தொலைத் தொடர்பு, மின்சாரம், விமானப் போக்குவரத்து, பெட்ரோலியம் போன்ற துறைகள் தனியாருக்கு திறந்துவிடப்பட்டன.

*(ii)* பங்குவிலக்கல் (*disinvestment of share)* கொள்கை மூலம் பொதுத்துறையின் வளங்களை பெருக்குவதுடன்; பொதுத்துறை நிறுவனங்களில் தனியார் பங்கேற்பையும் ஊக்குவித்தல்.

*(iii)* நலிந்த தொழில் நிறுவனங்களுக்கு (*sick industries),* மறுவாழ்வு கொடுக்கவும், மறுச்சீரமைக்கவும் தொழில் மற்றும் நிதி மறுக்கட்டமைப்பு குழுவிற்கு *(Board of Industrial Financial Reconstruction (BIFR)*) பரிந்துரை செய்தல்.

*(iv)* திறன்பெற்ற பொதுத்துறை நிறுவனங்களை (*PSU)* மட்டும் புதுப்பித்து புதிய சட்டதிட்டங்கள்மூலம் அதன் செயல்பாடுகளையும் மதிப்பீடு செய்தல்.

(*v*) 'ஆண்டு நிதிநிலை அறிக்கை' மூலம் நலிவடைந்த பொதுத்துறை நிறுவனங்களுக்கு அளிக்கப்படும் ஆதரவை படிப்படியாக விலக்கிக் கொள்ளுதல்.

(*vi*) நன்றாக செயல்படக்கூடிய பொதுத்துறை நிறுவனங்களை *(Public Sector Undertaking PSU)* மட்டுமே வைத்துக்கொண்டு மற்ற நிறுவனங்களை மூடிவிடுவது ஆகும்.

*1998-99* ஆம் ஆண்டு மேலும் இரண்டு பொதுத்துறை நிறுவனங்கள் அகற்றப்பட்டது. மூன்று துறைகள் மட்டுமே பொதுத்துறைக்கு ஒதுக்கப்பட்டு மற்ற அனைத்தும் தனியார் மற்றும் வெளிநாட்டு முதலீட்டிற்கு ஒதுக்கப்பட்டது. இவ்வாறு 1991 ஆம் ஆண்டின் தொழிற் கொள்கை தொழில் கட்டுப்பாட்டினைத் தளர்த்தியது. எனவே குறிப்பிடத்தக்க அளவு பொதுத்துறை நிறுவனங்கள் சீரமைக்கப்பட்டதோடு தனியார்த்துறை வளர்ச்சியும் ஊக்குவிக்கப்பட்டது.

**பொது நிறுவனங்களின் பங்குவிலக்கல்**
**(Disinvestment of Public Enterprises)**

*1991* ஆம் ஆண்டின் புதிய தொழில் கொள்கையினால் தொழில் மறுச்சீரமைப்பு தொடர்ந்தது. இப்புதிய கொள்கை பங்கு விலக்கலில் அதிக அளவு (*Ceiling)* எதையும் நிர்ணயிக்காமல் பொதுத்துறை நிறுவனங்கள் பங்கு விலக்கல் செய்து கொள்ள பரிந்துரை செய்தது. நிதி நெருக்கடியின் காரணமாக பொதுத் துறை நிறுவனங்கள் பெருமளவில் பங்கு விலக்கல் கொள்கையை செயலாக்க விரிவான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இது தனியார் மயமாக்குதல் தவிர வேறொன்றும் இல்லை. இதில் மூன்று மாதிரிகள் உள்ளன. அவை யாவன. பொது வெளியீடு (*Public Offer)* யுக்தி அளவு (*Strategic Scale)* மற்றும் குறுக்கு உடமை (*cross holding)*, *1998* ஆம் ஆண்டு அரசு 51 விழுக்காடுக்கு மேல் 'யுக்தி அளவு' விற்பதற்கு முடிவு செய்தது. புதிதாக 74 முதல் 100*%* நிர்ணயித்தது.

பங்குவிலக்கலின் நோக்கம் முக்கிய பகுதிகளான சமூகத் துறைகளுக்கு அதிக அளவில் முதலீடு செய்யும் பொருட்டு வேறு சில துறைகளிலிருந்து பங்கு விலக்கலை மேற்கொண்டு வளங்களைத் திரட்டுதல் ஆகும். இவ்வாறு திரட்டிய வளங்களை விருப்ப ஓய்வு பெற்றவர்களுக்கு (*VRS)* தொகை வழங்குதல், தொழிலாளர் பணிநீக்கத்திற்கு பயன்படுத்துதல், தொழிற்சாலைகளுக்கு

வேலைக்கமர்த்தப்பட்டோர் (*redeployment*) போன்றவர்களுக்கு வழங்குதல். தனியார்த் துறையை வளர்ச்சியுறச் செய்தல், திறனையும் போட்டியையும் மேம்படச் செய்தல் ஆகியன பங்கு விலக்கலின் வேறு சில நோக்கங்களாகவும் இருந்தது. 1991–92 ஆம் ஆண்டு ரூ.30 பில்லியனுக்குமேல் பொதுத் துறைப் பங்கு விலக்கல்மூலம் எழுப்பப்பட்டது. 1992–93 ஆண்டு ரூ.35 பில்லியன் இலக்கு நிர்ணயிக்கப்பட்டு ரூ.18.6 பில்லியன் எழுப்பப்பட்டது. *2002-2003* ஆம் ஆண்டு வரை ரூ.300 பில்லியன் பங்கு விலக்கல் மூலம் எழுப்பப்பட்டது. இடது சாரிக் கட்சிகளும், தொழிற்சங்கங்களும் பங்கு விலக்கல் கொள்கையை குறைகூறிய போதிலும் அரசானது தொடர்ந்து பங்கு விலக்கல் கொள்கையை பொதுத்துறை மற்றும் லாபமீட்டும் துறைகளிலும் செயல்படுத்தி வருகிறது.

### தாராளமயமாக்கலும் மற்றும் தனியார்மயமாக்கலும் (Liberalisation and Privatisation)

தாராளமயமாக்குதல் என்பது “சந்தை முறை அல்லது முதலாளித்துவ பொருளாதாரம் போட்டியையும் தனியார்த் துறையையும் முற்றிலும் சார்ந்திருத்தல்” ஆகும். இது தடையிலா வாணிபம், பேதமற்ற சுங்க வரி மற்றும் முழு பங்கேற்பினை ஏற்றல் ஆகியவற்றை கொண்டிருந்தது. தாராளமயமாக்குதல் கொள்கை தனியார்த் துறையை ஊக்குவிக்கும் பொருட்டு அரசின் பங்கினை பொருளாதார நடவடிக்கைகளில் மிகக் குறைவான அளவே செயல்படுத்துதல் ஆகும். மேலும் வெளியிலிருந்து மூலதனத்தை வரவேற்றல், மூலதன ஆக்கத்தைப் பெருக்குதல், ஏற்றுமதி வருமானத்தை அதிகரித்தல், மூலதனப் பயன்பாட்டின் திறனை அதிகரித்தல் இதன்மூலம் ஏற்றுமதிப் பொருட்களின் தர மேம்பாடு உறுதி செய்யப்படுதல் ஆகியனவும் ஆகும். இந்தியாவில் தாராளமயமாக்கல் ஆரம்பத்தில் சந்தைக்கட்டுப்பாட்டினையும் அல்லது சந்தை ஒழுங்கின்மை மூலம் தனியார் மயமாக்குவதையும் குறிக்கும்.

தாராளமயமாக்கலின் ஒரு பகுதியாகவே தனியார்மயமாக்கல் ஏற்றுக் கொள்ளப்பட்டது. தனியார் மயமாக்கல் என்பது தொழிற்சாலைகளை பொதுறையிலிருந்து தனியாருக்கு உரிமை மாற்றத்தை குறிப்பிடுவதாகும். இது *(Transfer of Ownership).* நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளில் அரசின் பங்கினைக் குறைக்கும் ஒரு வழிமுறையாகும். அதிகமான வளர்ச்சியைப் பெறுவதற்காக, தனியார் துறை வளங்களை முழுமையாகப் பயன்படுத்துதலின் மூலம் வளர்ச்சி உறுதி செய்யப்படுகிறது. 1991 ஆம் ஆண்டு முதல் தனியார் மயமாக்குதல் ஊக்குவிக்கப்பட்டது. இம்முறை மேற்கொள்ளப்பட்டதன்

வகைகள் முறையே பங்குவிலக்கல் முறை, பொதுறையை தனியாருக்குக் கொடுத்தல், பொதுத்துறையில் தனியார் துறையை தாராளமாக (*deregulation and delicencing)* நுழையச் செய்தல், மேலாண்மையை பொதுத்துறையிலிருந்து தனியார்த்துறைக்கு கொடுத்தல், பொது முதலீட்டை தடுத்து நிறுத்துதல் போன்றவையாகும். பொதுத்துறையை மறுசீரமைத்தல் என்பது தற்போதுள்ள பொதுத்துறை நிறுவனங்களுக்கு பங்குவிலக்கல் அல்லது தனியார் மயமாதலைக் **(Denationalisation)** குறிக்கும். தாராளமயமாதல் மற்றும் தனியார்மயமாதலை வரன்முறை மற்றும் உரிமம் மறுத்தலின் வாயிலாக பொதுத்துறையின் பங்கினைக் கட்டுப்படுதலைக் குறிக்கும்.

*1992-97* ஆம் ஆண்டின் எட்டாவது ஐந்தாண்டுத் திட்டம் புதிய பொருளாதாரக் கொள்கையின் மூலம் பொதுத்துறையின் புதிய இலக்குகளை அடைய மறுச்சீரமைப்பு தேவை என்பதை வலியுறுத்துகிறது. புதிய நோக்கம் யாதெனில், ''பொதுத்துறை நிறுவனங்கள் மிக முக்கியப் பங்கு வகிக்கவேண்டி உள்ளது. எவ்வாறெனில் தன்னிச்சையோடும், போட்டி மனப்பான்மையோடும் திறமையான நிர்வாகத்தோடும் திகழவேண்டிய இத்துறை, அத்தியாவசிய உள்கட்டமைப்புப் பண்டங்கள் மற்றும் இயற்கை வள மேம்பாடுகளையும் யுக்தி சார்ந்தப் பகுதிகளையும் அளிக்கவேண்டும்.''

**கீழ்க்காணும் யுக்திகள் எட்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் பொதுத்துறை சீர்திருத்தங்களாகும்**

1. மறுச்சீரமைப்பு, ஈடுபடச் செய்தல், நவீனமாக்குதல், பகுத்தறிவுச் செயல்பாடுகள், உற்பத்திக் கலவை மாற்றம், தன்மை வெளியேற்றம் (*Selective Exit)* மற்றும் தனியார்மயமாதல்.

2. ஏழாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் கொண்டுவரப்பட்ட புரிந்துணர்வு ஒப்பந்தம் மூலம் (*MOU)* நிர்வாக அமைச்சுப்பணி மற்றும் மத்திய பொதுத்துறை நிறுவனங்கள் தங்கள் தன்னிச்சை செயல்பாடுகளை அதிகரித்து விரைவுபடுத்தியது.

3. குறிப்பிட்ட நிறுவன அளவில் திறன்மேம்பாடு, திறமையான தலைமை, வளம் மற்றும் புத்தாக்கம் வாயிலாக மேலாண்மையை மாற்றியமைத்தல்.

4. பொதுத்துறையில் பெரிய மாற்றத்தை கொண்டுவர மாநில அரசுகள் முயற்சித்தன.

5. ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி (*R & D*) வாயிலாக தொழில்நுட்ப இறக்குமதி, தொழில்நுட்ப மேம்பாடு.

6. தாராளமயமாக்குதல் மற்றும் வெளிச்சந்தை முறையை பற்றி அரசு மற்றும் அமைச்சகங்களுக்கு போதிய புத்தாக்கப் பயிற்சி அளித்தல்.

## சுற்றுச்சூழல் மாசடையக் காரணங்கள் (Environmental Hazards)

மனித இனத்திற்கு சுற்றுச்சூழல் மாசடைதல் மிகப்பெரிய கவலை அளிக்கக்கூடியதாக உள்ளது. மேலைச் சமுதாயம் 'நுகர்வுத்தன்மை' (*consumerism*) என்னும் பண்பாட்டினால் அதிக உற்பத்தியை முடுக்கிவிட்டது. இத்தகைய மேலை நாட்டுச் செயல்பாடு கீழை நாடுகளிலும் "பயன்படுத்து மற்றும் எரிந்துவிடு" (*use & through*) என்னும் உற்பத்திப் பண்டங்களை பெருமளவில் பெருகச்செய்தது.

இந்தியா போன்ற வளரும் நாடுகளில் வளர்ச்சித் தேவைகளை நிறைவேற்ற சுற்றுச்சூழலில் மாற்றத்தை சந்திக்க நேர்ந்தது. செல்வந்தநாடுகள், சுற்றுச்சூழலுக்கு போதிய அளவு சேதம் ஏற்படுத்திய பிறகு, வளரும் நாடுகளின் தொழில் வளர்ச்சிக்கு அதிகத் தடைகளை விதிக்க நினைக்கிறது. அதே நேரத்தில் வளர்ந்த நாடுகள் தங்களது சுற்றுச்சூழல் பாதுகாக்கும் வழிமுறைகளை வளரும் நாடுகளோடு பகிர்ந்துகொள்ள மறுக்கிறது.

விடுதலைக்குப் பின்னர் இந்தியா கனரகத் தொழில்களை தொடங்கியதன் மூலம் புதிய தொழில்கள் உருவாகின, ஏற்கனவே இருந்த தொழில்கள் நவீனப்படுத்தப்பட்டன மற்றும் மேம்படுத்தப்பட்டன. தொழில் மயமாக்குதல் சுற்றுச்சூழலுக்கு தீங்காக அமைந்தது. 'பசுமைப் புரட்சி' சுற்றுச்சூழலை பெருமளவு சேதமடையச் செய்தது. மேலும் காடுகளை அழித்தல் மீன்பண்ணைகள் போன்றவை சுற்றுச்சூழலை மிகவும் சேதமடையச் செய்தது,

மத்திய, மாநில அரசுகள் சுற்றுச்சூழலை பாதுகாக்க, மேம்படுத்த பல சட்டங்களை இயற்றியுள்ளன. இப்பிரச்சினைகளை போக்க மாசுக்கட்டுப்பாட்டு வாரியம் உருவாக்கப்பட்டது. பின்வருபவை இந்தியாவில் மாசுக்கட்டுப்பாட்டின் மூலம் சுற்றுச்சூழலை பாதுகாக்க எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் ஆகும்.

1. நாட்டின் சுற்றுச்சூழல் கொள்கை ஒன்றை ஏற்படுத்துதல்.

*2.* கியாட்டோ (*Kyoto Protocol)* முறையைப் பின்பற்றி தேசிய சுத்தம் சார்ந்த வளர்ச்சி கருவி *(Clean Development Mechanism-CDM)* அதிகாரக்குழு ஒன்றை ஏற்படுத்துதல்.

*3.* மறுபொறியியல் சுற்றுச்சூழல் சுத்தமுறையை மேற்கொள்ளல்

*4.* கடலோர கட்டுப்பாட்டு பகுதியை *(Coastal Regulation Zone –CRZ)* திருத்தியமைத்தல்

*5.* நாட்டின் தேசிய இரசாயன நிர்வாக அமைப்பு ஒன்றை வளர்ச்சியுறச் செய்தல்.

இவ்வாறான முயற்சிகள் பல இருந்தும் மாசுபடுத்தும் தொழிற்சாலைகள் குறிப்பாக பல பேரளவுத் தொழில்கள், மீன் வளர்ப்பு, அனல் மின்சாரம் மற்றும் அணுமின்சார நிறுவனங்கள் போன்றவை காற்று, நீர், நிலம் ஆகியவற்றை பெருமளவில் மாசுபடுத்துகின்றன. உலகளவில், பெரிய நகரங்கள், மீது நடத்தப்படும் தாக்குதல்கள், எண்ணெய் கிணறுகள், நாடுகளிடையே தொடர்ச்சியான போர்கள் (எ.கா. அமெரிக்கா, ஈராக்குடன் தொடுத்துள்ளபோர்) நாடுகள் அடிக்கடி நடத்தும் அணுகுண்டுச் சோதனைகள் போன்றவை சுற்றுச் சூழலை அதிக அளவு சேதப்படுத்தி நாகரிக சமுதாயங்களின் சீரமைத்தலைப் பற்றி அக்கரைக் கொள்வதில்லை.

## தொழில் நிதி (Industrial Finance)

'நிதி', தொழில் வளர்ச்சிக்கு முதுகெலும்பாகும். தொழிற்சாலைகளின் 'நிதி'த் தேவை என்பது குறுகிய கால அளவில் 'நடைமுறை மூலதனம்'. (*Working Capital)* தேவையைக் குறிப்பதாகும் (அ) நீண்ட கால அளவில் நிரந்தர மூலதன (*Fixed Capital)* தேவையைக் குறிப்பதாகும். இவ்வாறான தேவையை நிறைவேற்ற தொழிற்சாலைகள் பல வழிகளில் நிதியை எழுப்புகிறது. இந்தியாவில், பல நாடுகளில் உள்ளதுபோன்றே தொழில் நிதியானது இருபெரும் வழிகளில் கிடைக்கிறது அவையாவன (1) வெளிவழி (2) உள்வழி.

## உள்வழி (Internal Source)

தொழில் நிதிக்கான உள்வழி என்பது சிறுதொழில்களைப் பொறுத்தவரை தானே திரட்டிக்கொண்ட நிதி ஆகும். பேரளவு தொழிலைப் பொறுத்தவரை பங்குமூலதனம், சந்தாத்தொகை போன்றவற்றின்மூலம் செலுத்தப்பட்ட

மூலதனத்தைக் குறிப்பதாகும். தொழிற்சாலைகளில் சொந்தமான உபரியையும் வைப்புநிதியையும் இது குறிக்கும்.

## வெளி வழி (External Source)

வெளி வழியாக பெறப்பட்ட தொழில் நிதி என்பது பொது மக்களிடமிருந்து பெறப்பட்ட வைப்புநிதி, சமச்சீர் மூலதனம், கடன்பத்திரம், வணிக வங்கிகளிடமிருந்தும் இதர நிதி நிறுவனங்களிடமிருந்தும் பெறப்பட்ட கடன் போன்றவை ஆகும்.

## நிதி நிறுவனங்கள்

குறுகிய கால நிதித் தேவைகளை பொதுவைப்பு பங்கு மூலதனம் மற்றும் வணிக வங்கிகளின் கடன் போன்றவற்றின் மூலம் நிறைவேற்றிக் கொள்ளலாம். எனினும் நீண்டகால தேவைகளுக்கு தொழிற்சாலைகள் 'சிறப்பு வாய்ந்த' நிதி நிறுவனங்களையே அணுக வேண்டியுள்ளது. வளரும் நாடுகளில் இந்நிதி நிறுவனங்கள் **வளர்ச்சி வங்கிகள்** என்று அழைக்கப்படுகின்றன. இதன் பொருள் இந்நிறுவனங்களின் பணி வளர்ச்சியை நோக்கமாகக் கொண்டதாக இருக்க வேண்டும் இவ்வாறு, இந்நிறுவனங்கள், தங்களின் கொள்கைகள் மற்றும் திட்டங்கள் மூலம் வளர்ச்சிப் போக்கை தூண்டுபவைகளாக உள்ளன.

## நாட்டு அளவில் (At National Level)

1. இந்தியத் தொழில் நிதிக் கழகம் (*IFCI)*
2. இந்தியத் தொழில் முன்னேற்ற வங்கி (*IDBI)*
3. இந்தியத் தொழில் கடன் முதலீட்டுக் கழகம் (*ICICI)*
4. இந்திய தொழில் முதலீட்டு வங்கி (*IIBI)*
5. தேசிய சிறுதொழில் கழகம் (*NSIC)*

## மாநில அளவில் (At State Level)

1. தமிழ்நாட்டு தொழில் முதலீட்டுக் கழகம் (*TIIC) (1949* முதல்)

*2.* மாநில நிதிக் கழகம் (*SFC)*

*3.* மாநில தொழில் வளர்ச்சிக் கழகம் (*SIDC)*

**இடைநிலையளவில் (At the Intermediate Level)**

*1.* யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா (*UTI)*

*2.* இந்திய ஆயுள் காப்பீட்டுக் கழகம் (*LIC)*

*3.* இந்திய பொது இன்சுரன்ஸ் கழகம் (*GIC).*

**பொருளாதார வளர்ச்சியில் சிறுதொழில் நிறுவனங்களின் பங்கு**

ஒரு நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு சிறு தொழில்கள் தலையாய பங்கு வகிக்கின்றன. உற்பத்தி, வேலைவாய்ப்புப் பெருக்கம், ஏற்றுமதியின் பங்கு, வருமானத்தை பகிர்ந்தளித்தல் ஆகியவற்றிற்கு சிறுதொழில்களின் பங்கு குறிப்பிடத்தக்க அளவு உள்ளது. சிறுதொழில்களை இருவகைகளாகப் பிரிக்கலாம். 1. தொன்மை வாய்ந்த கிராம மற்றும் குடிசைத்தொழில்களும் அதாவது, கதர் கிராமத் தொழில், கைவினைத் தொழில், கைத்தறி நெசவு, பட்டுப் புழு வளர்த்தல், கயிறுத் தொழில்கள் போன்றவை சிறந்த எடுத்துக்காட்டுகள் ஆகும். 2. நவீன சிறு தொழில் நிறுவனங்கள். தொன்மைவாய்ந்த கிராம மற்றும் குடிசைத் தொழில்களும் பெருவாரியாக கிராமப்புறங்களிலும், நகரை ஒட்டிய பகுதிகளிலும் காணப்படும். இத்தொழில்கள் சாதாரணமாக மின்சாரத்தினால் இயங்கும் இயந்திரங்களை பயன்படுத்தமாட்டார்கள். மேலும் குறைவான முதலீடு மற்றும் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தியே உற்பத்தியில் ஈடுபடுவார்கள். ஆனால், இவை சமுதாயத்தில் அதிக அளவு ஏழ்மை நிலையில் உள்ளவர்களுக்கு பகுதி நேர வேலை வாய்ப்பை பெற்றுத் தருகின்றன. மேலும் இவை அத்தியாவசியப் பண்டங்களை உற்பத்தி செய்து தருவதுடன் ஏற்றுமதிக்கு வழி வகுக்கிறது.

தற்கால சிறு தொழில்கள், முதலீட்டின் அளவைப் பொறுத்தும், உழைப்பின் சக்தியைப் பொறுத்தும் வரையறுக்கப்படுகின்றன. தொழில்கள் (வளர்ச்சி மற்றும் ஒழுங்குமுறைப் படுத்துதல்) சட்டம் *1951* சிறுதொழில்களை (*SSI)* மின்னிணைப்புடன் செயல்படும் சிறுதொழிற் சாலைகள் 50 நபர்களுடனும், மின்சார உதவியின்றி செயல்படும் சிறு தொழில்களுக்கு 100 நபர்கள் வரை வேலை செய்யலாம் என வரையறை செய்துள்ளது.

அசையா சொத்துக்கள் ரூ.35 இலட்சத்திற்கு குறைவாக (1981ன்படி) இருத்தல் வேண்டும். 1991ல் இதன் வரையறை ரூ.60–75 இலட்சதுக்கு உயர்த்தப்பட்டது. 9 ஆம் ஐந்தாண்டுத் திட்டத்தின்படி இதன் உச்ச வரம்பு ரூ.100 இலட்சமாக உயர்த்தப்பட்டது. 10 ஆம் ஐந்தாண்டுத் திட்டத்தின்படி இதன் உச்ச வரம்பு உயர்தொழில் நுட்ப (*Hi-tech*)ங்களை பயன்படுத்தும் சிறு தொழில்களுக்கு ரூ.50 கோடி ஆக உயர்த்தப்பட்டது.

சிறுதொழில் வளர்ச்சிக்கு (*SSI)* அரசு பல வித நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. இந்தியாவில் 'ஒதுக்கீடு' *(Reservation)* என்னும் தனிச் சிறப்பு வாய்ந்த சாதனம் 1970 ஆம் ஆண்டு முதல் சிறு தொழில்களைக் காத்து வருகிறது. இதன்படி பெருந்தொழில்களுக்கு உற்பத்தி மற்றும் வளர்ச்சியை சட்ட ரீதியாக தடுக்க சில தடைகளும், சிறுதொழில் உற்பத்திக்கும் வளர்ச்சிக்கும் பாதுகாப்பு அளித்து உயர்வடையச் செய்கிறது. 9 ஆம் ஐந்தாண்டுத் திட்டத்தில் சிறுதொழில்கள் ஏறத்தாழ 8000 பொருள்களை உற்பத்தி செய்கிறது. இதனுள் 812 பொருள்கள் (15 விழுக்காடு) சிறு தொழில்களுக்கு பாதுகாப்பு அளிக்கும் பொருட்டு ஒதுக்கப்பட்டுள்ளது. இதனுடன் கூட, உள்கட்டமைப்புக்கு துணைபுரிதல், தொழில்நுட்பத்தை மேம்படுத்துதல், கடன் பெறுவதற்கு முக்கியத்துவம் அளித்தல், கொள்கை ரீதியாக சிறு தொழில்களுக்கு உதவி புரிதல் ஆகிய வகைகளில் 'அரசின் கொள்கைகள்' சிறுதொழில்களை ஊக்குவித்தும் உதவி புரிந்தும் வருகின்றது.

## பொருளாதார வளர்ச்சியில் சிறுதொழில்களின் பங்கு (Role of SSI in Economic Development)

பின்வருபவற்றை செய்து உதவி புரிவதன்மூலம் சிறுதொழில் முக்கியத்துவம் பெறுகிறது. அதிக அளவு வேலை வாய்ப்புக்களை ஏற்படுத்துகிறது, அநேக பொருள்களை அளிக்கிறது, ஏற்றுமதிக்கு அதிக அளவு பங்களிப்பு செய்கிறது. வருமானத்தை சமமாக பங்கீடு செய்வதற்கு வசதி வாய்ப்பை ஏற்படுத்துகிறது. **வெளித்திறன் பதவி பெறுவதற்கு** (*Outsourcing Designation)* வழி வகுக்கிறது. இதனால் கடந்த 50 ஆண்டுகளில் சிறுதொழில் துறை மிக முக்கிய இடத்தைப் பெற்று விளங்குகிறது.

ஒட்டுமொத்த தொழில் துறை பெற்ற வளர்ச்சியைவிட கூடுதலாக ஒன்று முதல் இரண்டு விழுக்காடு வரை வளர்ச்சியை சிறுதொழில்கள் (*SSI)*

பெற்றுள்ளன. **2002** மார்ச் கணக்கெடுப்பின்படி இந்தியாவில் **3.4** மில்லியன் சிறுதொழில் அலகுகள் உள்ளன. இவை உற்பத்தித் துறையில் **40** விழுக்காட்டிற்கு அதிகமாக மொத்த மதிப்பினைப் பெற்றுள்ளது. மேலும் மொத்த ஏற்றுமதிக்கு **35** விழுக்காடு தனது பங்களிப்பை செலுத்தியுள்ளது.

பின்வருபவை (*SSI)* சிறுதொழில்களின் மிக முக்கிய பங்கு ஆகும்.

*1.* உற்பத்தித் துறை மற்றும் மொத்த உள்நாட்டு உற்பத்தியின் (*GDP)* ஒட்டுமொத்தத்திற்கு சிறுதொழில்களின் பங்கு குறிப்பிடத்தக்க அளவு உள்ளது.

*2.* நீண்ட காலத்திற்கு வேலை வாய்ப்பை உருவாக்கக்கூடிய துறையாகவும், சிறுதொழில்துறை விளங்குகிறது.

*3.* வாணிபச் செலுத்து சமநிலையில் உள்ள சமநிலையின்மையை போக்குவதற்கு சிறுதொழில்கள் தனது ஏற்றுமதியை ஊக்குவிப்பதன்மூலம் உதவி புரிகிறது.

*4.* பேரளவுத் தொழில்கள் வருமான ஏற்றத் தாழ்வுகளையும், 'செல்வக் குவிப்பு'க்கும் வழிவகுக்கும் நிலையில், சிறுதொழில்கள், செல்வம் மற்றும் சமமான வருமானப் பகிர்வதற்கு உதவி புரிகிறது.

*5.* நலிந்த, வாய்ப்பை இழந்த, திறமையான தொழில் முயல்வோர்களுக்கு அதிக வாய்ப்புக்களை சிறுதொழில்கள் வழங்குகின்றன.

*6.* போதிய மூலதனத்தை உற்பத்திப் பயன்பாட்டிற்கு கொடுத்து உதவுகிறது.

*7.* சிறுதொழில்கள் புதிய செலவுக்கு ஏற்ற தொழில் நுட்பத்தை பயன்படுத்துவதால், உற்பத்திக்கு ஏற்ற நன்மைகள் ஏற்படுகின்றன.

*8.* சிறுதொழில்கள் வளங்களை முழுமையாக பயன்படுத்திக் கொள்ளும். இதில் அதிக கழிவு (*Wastage)* இருக்க வாய்ப்பில்லை. சிறுதொழில்கள் அதிக ஒதுக்கீட்டுத் திறனை பெற்றுள்ளன.

*9.* சிறுதொழில்களில் இடர்ப்பாடுகள் குறைவு. எனவே, அதிக வளங்களை பெருமளவிலா ன உழைப்புச் சக்திகள் (*Huge Labour Force)* பயன்படுத்திக் கொள்ளமுடியும்.

## சிறுதொழில்களில் காணப்படும் பிரச்சினைகள்
## (Problems of Small Scale Industries)

சிறுதொழில்கள் அநேக பிரச்சினைகளை சந்திக்கின்றன. பின்வருபவை அவற்றுள் மிக முக்கியமானவை ஆகும். அவை யாவன

1. உள்ளீடுகளில் பற்றாக்குறை
2. மூலதனப் பற்றாக்குறை
3. சந்தைப்படுத்துதல்
4. திறன்களை முழுமையாகப் பயன்படுத்தாமை
5. மிக அதிகமான உற்பத்திச் செலவு

## சிறுதொழில்களும், அரசின் கொள்கையும்
## (Government Policy on SSI)

1. இந்தியப் பொருளாதாரத்தில் சிறு தொழில்களின் அவசியத்தை உணர்ந்தமையால், விடுதலை பெற்ற நாள் முதல் அரசு சிறு தொழில் நிறுவனங்களை பாதுகாக்க பல்வேறு கொள்கை முடிவுகளை கொண்டு வந்துள்ளது.

2. 1955 ஆம் ஆண்டு திட்டக்குழுவில் ''சிறுதொழில் மேம்பாட்டு வழிமுறைகளைக் கண்டறிய'' நியமிக்கப்பட்ட ''கார்வே குழு'' இதற்கு பெரிய திருப்புமுனையாக அமைந்தது.

3. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின்போது இந்திய சிறுதொழில்களை (*SSI*) ஆராய்ந்த ஐப்பான் வல்லுநர் குழு "தொழில் பேட்டைகளை" (*Industrial Estate*) பெருமளவில் பரிந்துரை செய்தது சிறுதொழில் வளர்ச்சிக்கு பெருமளவில் உதவியது.

4. *1967* ஆம் ஆண்டின் ''உற்பத்திப் பொருள்கள் ஒதுக்கீட்டுக் கொள்கை'' சிறு தொழிலுக்கென உருவாக்கப்பட்டது. இது 1984 ஆண்டு சட்டப்பூர்வமான வங்கியைப் பெற்றது.

5. *1991* ஆம் ஆண்டின் 'தொழில் கொள்கை' சிறுதொழில் மேம்பாட்டிற்கும் வளர்ச்சிக்கும் பெரிதும் உதவியது.

6. *S.P.* குப்தாவின், பத்தாம் ஐந்தாண்டுத் திட்டம் ஒரு கொள்கை வடிவம் சிறுதொழில்களுக்கு பின்வரும் சலுகைகளை அளித்தது.

(அ) உற்பத்தி வரி விதிவிலக்கு உயர்த்தப்பட்டது.

(ஆ) கடன் வரையறை உயர்த்தப்பட்டது (*Loan limit)*

(இ) கடன் வசதிகள்.

(ஈ) முதலீட்டளவு உயர்த்தப்பட்டது.

# பயிற்சி

## பகுதி – அ

**I. சரியான விடையைத் தேர்ந்தெடுக்கவும் :**

1. ஒரு நாட்டின் உற்பத்தித்திறன் இதன் வளர்ச்சியின் மூலம் தெரிய வருகிறது.

அ. வேளாண்மை ஆ. இதர உள்கட்டமைப்பு

இ. இறக்குமதி ஈ. தொழில்கள்

2. ஒரு நாட்டின் வலிமை இதன்மூலம் பிரதிபலிக்கிறது

அ. வேளாண்மை வளர்ச்சி ஆ. ஏற்றுமதி

இ. போக்குவரத்து ஈ. தொழில் வளர்ச்சி

3. தொழில் மயமாக்குதல் இதற்கு மிக முக்கியமானது ஆகும்.

அ. வேலைவாய்ப்பைப் பெருக்குதல் ஆ. மூலதனத்தைத் தூண்டுதல்

இ. பொருளாதார வளர்ச்சியை அடைதல் ஈ. தலா வருமானத்தை உயர்த்துதல்

4. புதிய தொழில் கொள்கை வெளியிடப்பட்ட ஆண்டு

அ. 1980 ஆ. 1984

இ. 1991 ஈ. 2001

5. கீழ்க்காண்பனவற்றுள் மிக முக்கியமான வேளாண்மையை அடிப்படையாகக் கொண்ட தொழில்

அ. இரும்பு எஃகு | ஆ. சிமெண்ட்
இ. சர்க்கரை | ஈ. சணல்

## II. கோடிட்ட இடங்களை நிரப்புக.

6. ………… இந்தியாவின் மிகப் பழமையானதும், மிகப் பெரிய அளவிலான தொழிலாகும்.

7. ……….. முக்கிய நோக்கம் விரைவான தொழில்மயமாக்குதலின் மூலம் நாட்டின் வளர்ச்சியை முடுக்கி விடுதல் ஆகும்.

8. ………… என்பதன் பொருள் அங்காடி அல்லது முதலாளித்துவ பொருளாதார பெருவாரியாக தனியார் துறையின் போட்டியைச் சார்ந்ததாகும்.

9. ……….. என்பது பொதுத் துறையை தனியார் வசம் ஒப்படைத்தல் ஆகும்.

10. ……….. பொருளாதார வளர்ச்சியில் பெரும்பங்கு வகிக்கிறது.

## III. பொருத்துக :

| | | |
|---|---|---|
| 11. | பங்கு விலக்கல் | மரபுத் தொழில்கள் |
| 12. | குடிசைத் தொழில் | தனியார் மயமாக்குதல் |
| 13. | உரிமம் மறுத்தல் (*Delicencing*) | தொழிற் செறிவு |
| 14. | சிறுதொழில் அலகுகள் | இடைநிலைப் பண்டங்கள் |
| 15. | சிமெண்டு | 1991 தொழில் கொள்கை |

## IV. கீழ்க்காணும் வினாக்களுக்கு ஓரிரு வார்த்தைகளில் விடையளிக்கவும்.

16. கலப்புப் பொருளாதாரத்தை பின்பற்றும் நாடு எது?

17. பேரளவுத் தொழிலுக்கு ஓர் எடுத்துக்காட்டுத் தருக.

18. சர்க்கரை ஆலைத் தொழில் வேளாண்மையை அடிப்படையாகக் கொண்டத் தொழிலா?

19. *L.P.G.*யின் விரிவாக்கம் தருக.

20. இரண்டாம் ஐந்தாட்டுத் திட்டத்தின் முக்கியக் குறிக்கோள் என்ன?

## பகுதி – ஆ

**V. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடையளிக்கவும்.**

21. தொழில்மயமாக்குதலுக்கு விளக்கம் தருக.

22. கலப்புப் பொருளாதாரம் என்றால் என்ன?

23. தனியார்மயமாதால் என்பதன் விளக்கம் தருக.

24. பயன் அடிப்படையிலான தொழில்களை வகைப்படுத்துக.

25. தாராளமயமாதலின் விளக்கம் தருக.

## பகுதி – இ

**VI. கீழ்க்காணும் வினாக்களுக்கு ஒரு பக்க அளவில் விடையளிக்கவும்.**

26. பொதுத்துறையின் முக்கியத்துவத்தை விவரிக்கவும்.

27. விடுதலைக்கு முன்னரும் பின்னரும் தொழில்களின் நிலைகளை விவரி?

28. என்னென்ன நிறுவனங்கள் தொழில்வளர்ச்சிக்கு நிதிஉதவி அளிக்கிறது என பட்டியலிடுக.

29. பொது நிறுவனங்களின் பங்கு விலக்கலைப் பற்றி குறிப்பெழுதுக.

30. எட்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் பொது நிறுவனங்களை மறுசீரமைப்பு செய்ய எடுக்கப்பட்ட ஒருங்கிணைந்த யுக்திகளை விவரி.

## பகுதி – ஈ

**VII. கீழ்க்காணும் வினாக்களுக்கு மூன்று பக்க அளவில் விடையளிக்கவும்.**

31. பல்வேறு வகை பேரளவுத் தொழிற்சாலைகளையும் அவைகளின் செயல்பாடுகளையும் விவரிக்கவும்.

32. தொழிற்பிரிவுகளின் அவசியத்தை ஆராய்க.

33. பொருளாதார வளர்ச்சியில் சிறு தொழில் நிறுவனங்களின் பங்கை விவரி.

34. 1991 ஆம் ஆண்டின் புதிய தெழில் கொள்கையை விரிவாக விவாதிக்கவும்.

35. சுற்றுச்சூழல் மாசடையக் காரணங்கள், விளைவுகள் இவற்றை கட்டுப்படுத்த அரசு மேற்கொண்ட நடவடிக்கைகளை விவரி.

# பாடம் – 8

# வங்கியியல்

## (Banking)

**வங்கியியலின் வரலாறு**

பொதுவாக 'வங்கி' என்பது வணிக வங்கிகளையே குறிக்கும். 'வங்கி' என்ற சொல் ஜெர்மானிய மொழியான 'பாங்க்' (*Bank)* லிருந்து உருவாகியது, 'வங்கி' என்பதற்கு கூட்டுப் பங்கு நிதி (*Joint Stock Fund)* அல்லது குவியல் (*Heap)* எனப்படும். பிரெஞ்சு மொழிச் சொல்லான 'பாங்கே' (*Bangue)* மற்றும் இத்தாலிய மொழிச் சொல்லான 'பாங்கா' (*Banco)* ஆகியவற்றிலிருந்து தோன்றியிருக்கலாம். இத்தாலிய மொழியில் 'பாங்கா' எனப்படுவது இருக்கையைக் குறிக்கும். அதிலிருந்து பணம் மாற்றுபவர் அல்லது இடைத்தரகர்கள் பணத்தின் ஒருவகையை மற்றொரு வகையாக மாற்றித் தருவதன் மூலம் வங்கி வாணிபம் செய்தனர். இவ்வாறு, பழங்கால வங்கியியல் முறை பணமாற்று வாணிபத்துடன் தொடர்பு கொண்டிருந்தது.

*1157*ல், முதல் பொது வங்கி நிறுவனமான 'வெனிஸ் வங்கி' தோற்றுவிக்கப்பட்டது. 'பார்சிலோனா வங்கி' மற்றும் ஜெனோவா வங்கி முறையே 1401 மற்றும் 1407ம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்டன. இவையே நவீன வணிக வங்கிகளின் முன்னோடியாகும். 1609 ஆம் ஆண்டு தோற்றுவிக்கப்பட்ட ஆம்ஸ்ட்ர்டாம் வங்கி மற்றும் 1690ல் மாம்பர்க் (*Mamburg Bank)* வங்கிகளுக்குப் பின்னர் பரிவர்தனை வங்கி முறை வளர்ச்சியுற்றது.

இங்கிலாந்து நாட்டில் நவீன வங்கிமுறையை தோற்றுவித்ததன் பெருமை இத்தாலியைச் சேர்ந்த இலம்பார்டி யூதர்களையே சாரும். இவர்கள் இத்தாலியிலிருந்து ஐரோப்பிய நாடுகள் மற்றும் இங்கிலாந்துக்குக் குடிபெயர்ந்தனர். இலம்பார்டி யூதர்கள் இங்கிலாந்தில் பணத்தை வட்டிக்குக் கொடுக்கும் வாணிபம் நடத்தினர். 1694 ஆம் ஆண்டு 'இங்கிலாந்து வங்கி' தொடங்கப்பெற்றது. **1833**ல் கூட்டுப் பங்கு வணிக வங்கிமுறை (*Joint Stock Commercial Banking).* தொடங்கப்பெற்றது. நவீன வங்கிமுறை **19–**ஆம் நூற்றாண்டிலேயே வளர்ச்சியுற்றது எனலாம். இந்தியாவில் வங்காளத்தில் **1806** ஆம் ஆண்டு 'வங்காள வங்கி' முதன்முதல் தோற்றுவிக்கப்பட்டது.

**வங்கிமுறை வளர்ச்சி**

தொழிற்புரட்சிக்கு முன்னர் வியாபார அளவு மிக மிகச் சிறியதாக இருந்தது. சில ஆண்டுகளுக்குப் பிறகு வியாபார அலகின் அளவு அதிகரித்தது. எனவே, கூட்டு வாணிப முறைகளான அமைப்பு வியாபார அமைப்புகள் நிறுவப் பெற்றன. இத்தகைய வாணிபமுறை முதலீடு செய்பவர்களை விரிவடையச் செய்தன. எனவே குறைவான முதலீடுகள் உள்ளவர்கள்கூட பெரிய தொழில் நிறுவனங்களில் பங்குதாரர்கள் ஆனார்கள். எனினும், ஒரு சிலர், இடர்ப்பாடுகளை ஏற்று இந்நிறுவனங்களில் முதலீடு 'செய்வதை' விரும்பவில்லை. எனவே, மக்களால் ஏற்றுக்கொள்ளக் கூடிய வகையில் 'நிதியைத் திரட்டுவதற்காக ஒரு நிறுவனம் தோற்றுவிக்கப்பட்டது. இவ்வாறு நாட்டிற்காக முதலீட்டினை திரட்டும் ஒரு நிறுவனமே 'வங்கி' எனப்பட்டது. எனவே, 'வங்கி' என்பது பணம் மிகையாகக் கொண்டிருப்பவர் களையும் பணம் தேவைப்படுபவர்களையும் இணைக்கும் ஒரு நிறுவனமாகும். இதனுடன்கூட வங்கி தம்மிடமிருந்து பணம் கடனாகப் பெறுபவர்கள் தவனைத்தவறி (*default)* செலுத்துதலினால் ஏற்படும் இடர்ப்பாடுகளையும் ஏற்றுக் கொள்கிறது.

**வங்கிகளின் பழங்கால நிலைகள் மூன்று வகையான நிறுவனங்களை உள்ளடக்கியது**

1. *'வணிகர் வங்கி' (Merchant Banker):* வணிகர் என்பவர் அடிப்படையில் ஒரு வியாபாரி ஆவார். நுகர்வோரின் பணத்தைப் பெற்றுக்கொண்டு அதனை தங்களது பாதுகாப்பில் வைத்துக் கொள்வார்.

2. *பணத்தை வட்டிக்குக் கொடுப்பவர் (The Money Lender):* இவர் தன்னிடம் உள் அதிகப்படியான பணத்தை தேவைப்படுபவர்களுக்கு கடனாகக் கொடுத்து அதற்குண்டான வட்டியையும் பெற்றுக்கொள்வார்.

3. *பொற்கொல்லர் (Goldsmith)* என்பவர் வாடிக்கையாளர்களின், மதிப்புமிக்க பொருள்களான தங்கம் மற்றும் வைரம் ஆகியவற்றை தனது சொந்தப் பாதுகாப்பில் வைத்துக்கொள்வார். வாடிக்கையாளர்களுக்குத் தேவைப்படும்போது அதனைத் திருப்பிக் கொடுத்து அதற்கான வட்டியைப் பெற்றுக் கொள்வர்.

தற்கால வங்கிகள் மேற்காணும் மூன்று வகை அம்சங்களையும் பெற்று விளங்குகிறது. சமுதாயத்தின் முன்னேற்றம், பொருளியல் சிந்தனைகள்,

தனித்தன்மை விரிவாக்கப்பட்ட சந்தையின் விளைவாக தொழிற்புரட்சி ஏற்பட்டு அதன் காரணமாக, தற்கால வணிக வங்கிகள் வளர்ச்சியுற்றன. வங்கிகளின் பணியானது சேமிப்பு மற்றும் கழிவுகளை (*Discounts)* மட்டுமே செய்யும் நிறுவனமாக இல்லாமல் நாட்டின் நிதியையும், அறக்கட்டளை மற்றும் பொதுமக்களின் உபரி இருப்புக்களை பாதுகாக்கும் பாதுகாவலனாகவும் செயல்படுகிறது. தற்கால வணிக வங்கிகள் தொழில் மற்றும் வணிகச் செயல்பாடுகளுக்கு மிகவும் இன்றியமையாததாக இருக்கின்றன.

**வங்கியியலின் இலக்கணம் (Definition of Banking)**

வங்கிகளின் பல்வேறு நடவடிக்கைகளை பொருளியல் வல்லுநர்கள் 'வங்கி' அல்லது 'வங்கியியலை' பின்வருமாறு வரையறை செய்துள்ளனர்.

"வங்கி என்பது சாதாரண வணிக நிலையில் காசோலைகளை (*Cheques)* வாடிக்கையாளர்களிடமிருந்து பெற்று அதனை ஏற்றுக்கொண்டு பணத்தை அவரவரது நடப்புக்கணக்கில் (*Current Accounts)* கணக்கு வைப்பதாகும்" என டாக்டர் எஸ். ஹெர்பர் மற்றும் எல். ஹார்ட் வங்கியின் இலக்கணத்தை கூறுகின்றனர்.

சேம்பரின் இருபதாம் நூற்றாண்டு அகாராதியின் (*Dictionary)* கூற்றுப்படி, வங்கி என்பது "பணத்தை தன்னகத்தே வைத்துக் கொள்வதற்கும், கடன் கொடுப்பதற்கும் மற்றும் பரிவர்தனை போன்றவற்றை செய்யும் நிறுவனமாகும்".

பொருளியலாளர் கிரௌத்தர் கூற்றுப்படி "வங்கியாளர்களின் பணியாவது' பரிவர்தனை மூலம் பணத்தைப் பெற்றும் அதனைக் கடனாகவும் கொடுப்பதாகும்"

பேராசிரியர் கெண்ட் (*Kent)* வங்கியின் பணியினை இவ்வாறு குறிப்பிடுகிறார். பொது மக்களிடம் உள்ள பணத்தை சேகரித்து (*accumulation through deposit)* அப்பணத்தை தேவைப்படுபவர்களுக்கு முன்பணமாக *(Advance)* கொடுப்பதை தனது முக்கியப் பணியாக கொண்டிருக்கும் ஒரு நிறுவனமே வங்கியாகும்".

மேற்கண்ட வரைவிலக்கணங்களின்படி வங்கி என்பது "பொது மக்களிடமிருந்து வைப்பு நிதியைப் (*Deposits)* பெற்று அதனைக் கடனாகவும் முன்பணமாகவும் மக்களுக்கே வழங்குவதாகும்".

### பொருளாதார வளர்ச்சியில் வங்கிகளின் பங்கு

ஒவ்வொரு நாட்டின் பொருளாதார வளர்ச்சியிலும் வங்கிகள் மிகவும் பயனுள்ள மற்றும் முக்கியமான பங்கினை வகிக்கின்றன. அவை புழக்கத்திலுள்ள பணத்தின் பெரும்பகுதியை தங்கள் கட்டுப்பாட்டுக்குள் வைத்துள்ளன. மேலும் வங்கிகள் எந்தவொரு நாட்டிலும் உற்பத்தியின் இயல்பைத் தூண்ட வல்லன. பொருளாதாரத்தில் வங்கிகளின் முக்கியத்துவத்தை அறிய வங்கிகளின் பொதுவான மற்றும் முக்கியப் பணிகளை பரிசீலனை செய்ய வேண்டும்.

### 1. மூலதன ஆக்கத்திலுள்ள பற்றாக்குறையைப் போக்குதல்

எந்த ஒரு பொருளாதாரத்திலும் 'மூலதன ஆக்கம்' இல்லையெனில் பொருளாதார வளர்ச்சி ஏற்படாது. சமுதாயம் குறைவாக சேமிப்பதால் மூலதன ஆக்கத்தில் பற்றாக்குறை ஏற்படுகிறது. வளரும் நாடுகளில் மூலதனப் பற்றாக்குறை இருப்பதால் ஒரு பணியாளுக்கான மூலதன சாதனம் குறைவாகவும், அறிவுத்திறன் பயிற்சியில் அறிவியல் முன்னேற்றம் போன்றவற்றில் குறைவும் ஏற்படுகிறது. இந்நிலையில் வங்கிகள் மிகவும் பயனுள்ள பணியாற்றுகின்றன. இப்பற்றாக்குறையைப் போக்க வங்கிகள் சேமிப்பையும் முதலீட்டையும் தூண்டுகின்றன. சிறந்த வங்கிமுறை சமுதாயத்தில் சிறு சேமிப்பைத் திரட்டி, உற்பத்தி நிறுவனங்களுக்கு அவற்றை முதலீடாகத் தருகின்றது.

### வங்கியின் முக்கியச் செயல்பாடுகள்

அ. வங்கிகள் 'கவர்ச்சிகரமான' வட்டியளித்து அதிக வைப்பு நிதியைத் திரட்டுவதோடு, இதன் மூலம் பெற்ற சேமிப்பை செயல் முதலீடு (*active capital)* ஆக மாற்றுகின்றன. இல்லையெனில், இத்தொகை பயன்படாமல் இருந்திருக்கும்.

ஆ. வங்கிகள் இச்சேமிப்புகளை உற்பத்தி நிறுவனங்களுக்கு கடனாக வழங்கி, நாட்டு வளர்ச்சிக்கு உதவுகிறது.

இ. வங்கிகள் சமுதாயத்தின் நிதிவளங்களை உத்தம அளவில் பயன்படுத்த உதவி புரிகின்றன.

## 2. நிதி அளிப்பதற்கும் கடன் கொடுப்பதற்கும் வழிவகை செய்கிறது (Provision of finance & credit)

தொழில் மற்றும் வர்த்தகத்திற்கு வங்கிகள் நிதி அளிப்பதற்கும், கடன் கொடுப்பதற்கும் மிக முக்கிய ஆதாரமாகச் செயல்படுகிறது. வாணிகம் மற்றும் வர்த்தகத்திற்கு வங்கிகள் உராய்வு எண்ணெய் *(lubricant)* போல் செயல்படுகிறது. எனவே வங்கிகள் வர்த்தகச் செயல்பாடுகளின் முதுகெலும்பாகச் செயல்படுகிறது எனலாம். எனவே வங்கிகளின் வலிமையான செயல்பாடுகளினால் வாணிபமும் வர்த்தகமும் செழிக்கும்.

அயல்நாட்டு வாணிகத்தையும் வங்கிகள் மேற்கொண்டுள்ளன. அயல்நாட்டுப் பரிவர்த்தனை தொழில்களை மிகப்பெரிய வங்கிகள் மேற்கொண்டுள்ளன. உள்நாட்டு தொழில் நிறுவனங்களுக்கும் அயல்நாட்டு நிறுவனங்களுக்கும் இடையே தகுந்த ஏற்பாடு செய்து உள்நாட்டு நிறுவனங்களுக்கு தேவையான இயந்திரங்கள் மற்றும் இதர சாதனங்களை வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்வதற்கு கடனுதவி அளித்து (எதிர்கால செலுத்துகை மூலம்) உதவி செய்கிறது.

## 3. அங்காடி அளவின் விரிவாக்கம் (Extension of the size of market)

வேறுவழியிலும் வணிக வங்கிகள் தொழில் மற்றும் வாணிகத்திற்கு உதவிபுரிகின்றன. வங்கிகளின் சிறந்த நடவடிக்கைகளால் தொழில் மற்றும் வணிகம் விரிவடைகிறது. வாங்குவோருக்கும் மற்றும் விற்போருக்கும் இடையே இடைத்தரகராக வணிக வங்கிகள் செயல்படுகின்றன. வங்கிகளின் உத்தரவாதத்தின் பேரில் (*Bank Guarantee)* பண்டங்கள், வழங்கப்படுகின்றன, தொழில்கள் மற்றும் வாணிகம் விரிவடைவது மட்டுமல்லாமல், அதன் பொருளுக்குத் தேவையான உள்நாட்டுச் சந்தைக்கும் வழிவகுக்கிறது. இதற்காக வங்கிகள் இடர்ப்பாடுகளை ஏற்றுக்கொள்கிறது. வங்கிகள் இடர்பாடுகளை தன்னிச்சையாக விடுவிக்கும் போது, தொழிற்துறையானது பேரளவுச் சந்தையை எதிர்நோக்கி செயல்படலாம்.

## 4. ஒரு வட்டாரத்தின் சமநிலை வளர்ச்சிக்கு இயந்திரமாக (Engine) வங்கிகள் செயல்படுகின்றன

ஒரு நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கு தேவைக்கேற்ப நிதி ஒதுக்கீடு செய்து வணிக வங்கிகள் உதவி செய்கிறது. வங்கிகள் இலாப நோக்கிலேயே

செயல்படுகின்றன. வங்கிகள் தங்கள் நிதியை உற்பத்திக்காக அதிக அளவு கடன் வழங்கும்போது இலாபம் அதிக அளவு இருக்கும். வங்கிகள் பல்வேறு பகுதிகளை தேர்ந்தெடுத்து கிளைகளை அமைத்தல் சாத்தியமாகிறது.

வளர்ச்சி வாய்ப்பு அதிகமுள்ள பகுதி, வணிக வங்கிகளின் நிதியை அதிக அளவில் ஈர்க்கிறது. ஆனால், சமீப ஆண்டுகளில், கிளை வங்கிகளின் வட்டார வளர்ச்சியில் மாற்றம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. பொருளாதார வளர்ச்சிக்கான உள்கட்டமைப்பு (*Infrastructure)* மேம்பாட்டிற்கு வங்கிகள் உதவி புரிகின்றன. எனவே ஒரு வட்டாரத்தின் சமநிலை வளர்ச்சிக்கு உற்பத்தி இயந்திரமாக வங்கிகள் செயல்படுகின்றன.

### 5. வேளாண்மை மற்றும் இதரச் செயல்பாடுகளுக்கு நிதி உதவி செய்தல்

வணிக வங்கிகள் உழவர்களுக்கு கடனுதவி செய்வதன் மூலம் வேளாண் வளர்ச்சிக்கு துணைபுரிகிறது. விளைநில மேம்பாட்டிற்காகவும், நீர்பாசனத்திற்காகவும், வேளாண்மையை நவீனப்படுத்துவதற்காகவும், இயந்திரமயமாக்குவதற்காகவும், தங்களின் உற்பத்தியை உருவாக்குவதற்கும் உழவர்களுக்கு கடன் வசதி தேவைப்படுகிறது.

வணிக வங்கிகள் தங்களின் நிதி உதவியை கால்நடை பராமரிப்பு, பால்வளம், ஆடு வளர்ப்பு, கோழி வளர்ப்பு, தோட்டக்கலை போன்ற துறைகளுக்கும் விரிவாக்கம் செய்துள்ளன.

### 6. மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த உதவுகிறது

நுகர்வு முறையைப் பொருத்தே மக்களின் வாழ்க்கைத்தரம் அளவிடப்படுகிறது. நுகர்வோர் அழியாப் பண்டங்கள், அசையாச் சொத்துக்கள் ஆகியவற்றை வாங்குவதற்கு வங்கிகள் கடனுதவி செய்து, அதன்மூலம் அவர்களின் வாழ்க்கைத் தரம் உயர உதவுகின்றன.

மனித முதலீட்டு ஆக்கத்தைத் தூண்டியும், பணக்கொள்கை அமைப்பை ஏதுவாக்கியும், தொழில்முனைவோரை ஊக்குவித்தும் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு வணிக வங்கிகள் பெரும் பணியாற்றுகிறது.

### வணிக வங்கிகள்

இலாபத்திற்காக செயல்படும் ஒரு நிறுவனமே வணிக வங்கியாகும்.

வணிக வங்கிகளின் தொன்மைப் பணிகளாவது, பொதுமக்களின் வைப்பு நிதிகளை ஏற்றுக்கொள்வது, பல்வேறு துறைகளுக்கு கடனுதவி அளிப்பது ஆகியவை ஆகும். எனினும், நவீன வங்கிகளின் எழுச்சியாலும், வங்கியியல் முறை வளர்ந்து வருவது பொருளாதார வளர்ச்சியில் ஒரு இணைச் செயல்பாடகவும் உள்ளதாலும் வணிக வங்கிகளின் வளர்ச்சியில் குறிப்பிடத்தக்க வகையில் மாற்றம் ஏற்பட்டது. வணிக வங்கிகள் நுகர்வோருக்கு இவ்வாறு பலவகை வங்கிப் பணிகளைச் செய்யத் தொடங்கியது. வணிக வங்கிகளின் அடிப்படை இயல்புகள் மாறாமலேயே இருந்தது. முற்காலத்தில் வணிக வங்கிகள் கூட்டு நிறுவனங்களாகவே (*Joint Stock Companies)* இலாப நோக்குடனேயே செயல்பட்டன. அவை குறுகியகால மற்றும் நடுத்தரகால கடன்களையும், வணிகர்களுக்கும், தொழில் அதிபர்களுக்கும் கடனுதவி செய்து அவர்களின் தேவையைப் பூர்த்தி செய்தது. நவீன காலத்தில் வங்கிகள் நீண்டகால கடன்களை வியாபாரிகளுக்கும், தொழிலதிபர்களுக்கும் வழங்குகிறது.

**வணிக வங்கிகளின் பணிகள்**

வணிக வங்கிகளின் பல்வேறு பணிகளை பின்வருமாறு காண்போம்

**1. வைப்பு நிதியை ஏற்றுக்கொள்ளுதல் (அல்லது) ஈர்த்தல்**

மக்களின் சேமிப்பைத் திரட்டி ‘வைப்பு நிதி’யை உருவாக்குகிறது. இந்த வைப்புநிதி மூவகைப்படும்.

**அ) சேமிப்பு வைப்பு நிதி**

இது மக்களுக்கு சாதாரணப் பணத்திற்கான பாதுகாப்புப் பெட்டகம் ஆகும். இவை சேமிப்புக் கணக்கில் வைக்கப்படுகிறது. வைப்புத் தொகைக்கு பெயரளவுக்கு வட்டி அளிக்கப்படுகிறது, மேலும் பணம் தேவைப்படும்போது வைப்புதாரருக்கு பணம் வழங்கப்படுகிறது. வழக்கில் குறிப்பிட்ட காலத்திற்கு குறிப்பிட்ட அளவு பணம், குறிப்பிட்ட எண்ணிக்கையில் மட்டும் பணம் திரும்பப் பெறலாம் (*withdrawal)* என உள்ளது. காசோலை வசதிகளும் வைப்புதாரர்களுக்கு வழங்கப்படுகிறது.

**ஆ) தேவை வைப்பு**

இது நடப்புக் கணக்கில் வைக்கப்படுகிறது. தேவைப்படும்போது வைப்புதாரர் பணத்தைப் பெறலாம். ஆனால் கணக்கு வைத்திருப்பவர் எவ்வளவு தொகை மற்றும் எத்தனை முறை வங்கியிடமிருந்து பணத்தை திரும்ப

பெற்றுள்ளார் என்பதையும், பணம் பெறும் எண்ணிக்கையும் *(Number of withdrawals)* குறிப்பிடவேண்டும். இவ்வகைக் கணக்கு மீது வங்கிகள் வட்டி ஏதும் அளிக்காது. மாறாக, இவ்வகை கணக்குகளை வைத்திருப்பவர்களுக்கு சேவைக் கட்டணம் விதிக்கிறது.

### இ) நிரந்தர வைப்பு

இதனைக் கால வைப்பு என்றும் அழைக்கலாம். ஒப்பந்த காலத்திற்கு முன் வைப்பு நிதியைப் பெற இயலாது. இத்தகைய வைப்பு தொகைக்கு அதிக வட்டி வழங்கப்படுகிறது.

### 2) கடன் வழங்குதல்

வங்கிகள் கடன் மற்றும் முன்பணம் வழங்குவதற்கு பல வழிமுறைகளைக் கையாளுகிறது. இச்செயல்பாடுகள் பலவகையாகும்.

### அ) ரொக்கக் கடன்

தனி நபருக்கோ, நிறுவனங்களுக்கோ பிணையப்பத்திரங்களைப் பெற்று (*collateral security)* வங்கிகள் கடன் கொடுத்துதவுகிறது. கடன் வாங்குபவரின் கணக்கில் கடன் தொகை செலுத்தப்படுவதால் கடன் வாங்குபவர் தனக்குத் தேவைப்படும்போது அதனைப் பெற்றுக் கொள்ளலாம். கடன்தொகையின் உச்ச அளவு கடன் வாங்குபவரின் செலுத்து நிலையைப் பொருத்து வங்கி தீர்மானிக்கிறது. கடன் வாங்குவோர் தனது கடனை அதன் அளவுக்குள்ளோ அல்லது அதற்குள்ளடங்கியோ பெற்றுக்கொள்ளலாம். கடன் பெறுபவர் பெற்ற கடனுக்கு மட்டுமே வட்டியளித்தல் போதுமானது.

### ஆ) மிகைப்பற்று வசதி (Overdraft)

நம்பிக்கைக்கும், மரியாதைக்குரிய வாடிக்கையாளர் இச்சலுகையைப் பெறுகின்றனர். வாடிக்கையாளர் தமது வங்கிக் கணக்கில் பணம் இல்லையென்றாலும் தனது தேவைக்கு ஏற்ப காசோலையை வழங்கி மிகைப்பற்றாக பணத்தைப் பெறலாம்.

### இ) மாற்றுச் சீட்டுக்களை கழிவு செய்தல்

சாதாரண மூன்று மாதங்களுக்கு, வணிகப் பத்திரங்களையோ, உறுதிப்

பத்திரத்தையோ (*Promisory Notes)* மற்றும் மாற்றுச் சீட்டுகளை மறுகழிவு செய்தோ இச்செயல்பாடு வணிக வங்கிகளால் மேற்கொள்ளப்படுகிறது. உண்டியல்களின் முகமதிப்பிற்கேற்ப வட்டி மற்றும் சேகரிப்புக் கட்டணத்தை *(collection charges)* விதித்தது போக மீதம் உள்ள தொகையை வாடிக்கையாளரிடமே அளித்துவிடுகிறது. மாற்றுச்சீட்டு உண்டியல் முதிர்வுறும்போது வாடிக்கையாளரிடமிருந்து பணம் பெறப்படுகிறது.

### 3. கடன் உருவாக்கம் (Creation of credit)

வங்கியாளரால் வழங்கப்படும் கடன் ஒரு வைப்புத்தொகையை உருவாக்குகிறது. ஏனெனில் வங்கி கடனை வழங்கும்போது வாடிக்கையாளர் பெயரில் ஒரு கணக்கு தொடங்கப் பெறுகிறது, கடன்தொகை அவர் கணக்கில் செலுத்தப்படுகிறது. கடன் வாங்கியவர் தனது தேவைக்கேற்ப அதனை வங்கியிலிருந்து எடுத்துக்கொள்ளலாம். இவ்வகை வைப்புத்தொகை பணஇருப்பை அதிகரித்து அதன்மூலம் பண சுழற்சியானது புதிய பணப்புழக்கத்தை ஏற்படுத்தும்.

### 4. இதரப் பணிகள்

வணிக வங்கிகள் ஆற்றும் இதர முக்கியப் பணிகளைப் பார்ப்போம்.

#### அ) நிதியை மாற்றுதல்

நவீன காலத்தில் வர்த்தகம் மற்றும் வாணிபத்தால் நிதியை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றுவது கடினமாகிறது. வங்கிகள் காசோலை, (*Cheque)* வரைவோலை (*Draft),* வங்கி ஆணை *(Pay Order)* பயணியர் காசோலை (*Travellers Cheque)* போன்ற சாதனங்களால் இவ்விடர்ப்பாட்டை போக்குகிறது. இதனை சரிசெய்தல் (*clearing)* என்கிறோம். இப்பணி வங்கிகளினால் செம்மையாக நிறைவேற்றப்படுகிறது.

#### ஆ) முகமைப் பணிகள்

தனது வாடிக்கையாளருக்கு நிதி முகர்வர்களாக வணிக வங்கிகள் செயல்படுகின்றன. ஆயுள்காப்பீட்டுத் தொகை, ஓய்வூதியம், பங்குத்தொகை மூலதனத்தேவை போன்ற அனைத்துத் தேவைகளையும் வணிக வங்கிகள் வாடிக்கையாளர்களுக்காக செய்து தருகிறது. இதுபோல, அவை தங்கம், வெள்ளி மற்றும் பாதுகாப்புப் பத்திரம் (*Securities)* போன்றவற்றை வாங்கவும், விற்கவும் செய்கின்றன.

**இ) பொது பயன்பாட்டுச் சேவைகள்**

*i)* பொது பயன்பாட்டுச் சேவைகளான, வாடிக்கையாளர்களின் மதிப்புமிக்க பொருள்களை பாதுகாக்க பாதுகாப்புப் பெட்டக வசதி ஏற்படுத்தித் தருகிறது.

*ii)* கடன் கடிதம் வாடிக்கையாளருக்கு வழங்குகிறது.

*iii)* பொது நிறுவனங்கள் மற்றும் கூட்டாண்மை நிறுவனங்கள் *(Corporations)* பங்குகளை வாங்கி காப்பீட்டு செய்து நற்பணியாற்றுகிறது.

*iv)* வர்த்தகம், வணிகம் தொழில் சார்ந்த தகவல் மற்றும் புள்ளியியல் ஆதாரங்களைத் தொகுத்தளிக்கிறது.

இவ்வாறு வணிக வங்கிகள் சமுதாயத்திற்கு பல மதிப்புமிக்க சேவைகளைப் புரிகின்றன. வளர்ந்த வங்கியியல் முறை தொழில் மற்றும் பொருளாதார வளர்ச்சியை ஊக்குவிக்கும். சிறந்த பொருளாதார சமுதாயத்தை உருவாக்க வங்கிகள் உயிரோட்டமாக உள்ளன. இந்தியா போன்ற வளர்ந்து வரும் நாடுகளில் வணிக வங்கிகளை ‘‘வளர்ச்சி வங்கியியல்’’ என்றும் அழைக்கலாம். இவ்வங்கிகள் தங்களின் நிதி ஆதாரம் மூலம் முன்னுரிமைத் துறைக்கும், வலிமை குன்றிய துறைகளுக்கும் மற்றும் வேலை வாய்ப்புச் சார்ந்த திட்டங்களுக்கும் முதலீடு செய்து நாட்டின் வளர்ச்சியில் முக்கியப் பங்கேற்கிறது.

**மைய வங்கி (Central Bank)**

நாட்டில் ஒரு தலைமை நிறுவனம் (*Apex Institution)* இருந்தால் மட்டுமே அது அந்நாட்டின் வங்கியமைப்பு முறையையும் அதன் செயல்பாடுகளையும் முறையாகவும், ஒருங்கிணைந்த முறையிலும் வழி நடத்திச் செல்லமுடியும். அவ்வாறான ஒரு தலைமை நிறுவனமே ‘மைய வங்கி’ எனப்படுகிறது. நாட்டின் மைய வங்கியானது **‘தன்னாட்சி நிறுவனமாகும்’.** மைய வங்கி வணிக வங்கிகளை தனது கட்டுப்பாட்டிற்குள் செயல்படவும், மேற்பார்வை செய்யவும் அதிகாரம் பெற்றுள்ளது. மைய வங்கி அந்நாட்டின் பணம் மற்றும் வங்கியியல் முறையை கட்டுப் படுத்துகிறது. முதல் உலகப் போருக்குப்பின் 1929 ஆம் ஆண்டு புருசெல்சில் நடைபெற்ற மாநாட்டில் சர்வதேச பணம் பற்றிய மாநாட்டில் (*International Monetary conference)* ஒவ்வொரு நாட்டிலும் ‘மைய வங்கி’ அமைக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியது. அதன்

அடிப்படையில் நமது நாட்டின் மைய வங்கியான 'இந்திய ரிசர்வ் வங்கி' **1935** ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. இங்கிலாந்து நாட்டின் மைய வங்கியான 'இங்கிலாந்து வங்கி' (*Bank of England) 1694* ஆம் ஆண்டு நிறுவப்பட்டது.

மைய வங்கிகளின் செயல்பாடுகள் மற்றும் அடிப்படைக் கோட்பாடுகளை 'இங்கிலாந்து வங்கி' விளக்குவதால் இது 'வங்கிகளின் வங்கி' (*Mother of Central Banks)* என்றழைக்கப்படுகிறது.

பிரான்சு நாட்டின் மைய வங்கி 'பாங்க் ஆப் பிரான்சு' கி.பி. **1800**ல் நிறுவப்பட்டது. ஐக்கிய அமெரிக்க நாடுகள் தனது மைய வங்கியான "கூட்டு ரிசர்வ்முறை" (*Federal Reserve System) 1914* ஆம் ஆண்டு துவங்கப்பட்டது.

**மைய வங்கியின் இலக்கணம்**

மைய வங்கியை அதன் பணிகளைப் பொறுத்து வரையறுக்கப்பட்டுள்ளது. பொருளியலாளர்கள் அளித்துள்ள இலக்கணங்களுள் ஒரு சில பின்வருமாறு.

பொருளியல் வல்லுனர் ஸ்மித் கூற்றுப்படி "மைய வங்கியானது ஒரு தனித்த வங்கியின் வங்கியியல் முறையைக் குறிக்கிறது. இதுதான் பணத்தை வெளியிடுதலில் முழுமையான கட்டுப்பாட்டைப் பெற்றதாகவோ, *(Monoply)* மிஞ்சிய ஏகபோக தனிஉரிமை பெற்றதாகவோ *(Residual Monoply)* உள்ளது" ஆகும்.

*H.A.* ஷா "மைய வங்கி நாட்டின் கடனைக் கட்டுப்படுத்தும் ஒரு அமைப்பாகும்" என இலக்கணம் வகுத்துள்ளார். பொருளியலாளர் ஹாட்ரே "மைய வங்கி என்பது கடன் வழங்கும் கடைசி புகலிடம்" என்கிறார். பி.ஏ. சாமுவேல்சன் "மைய வங்கியானது வங்கிகளின் வங்கி ஆகும். மேலும் நாட்டின் பண அளிப்பினைக் கட்டுப்படுத்துவதும் *(High-Powered Money)* மீப்பெரு மதிப்புப் பணத்தைக் கொண்ட அமைப்பு" என்று இலக்கணம் வகுத்துள்ளார்.

**மைய வங்கிக்கும் வணிக வங்கிகளுக்கும் உள்ள வேறுபாடுகள்**

கீழ்க்காணும் வகைகளில் மைய வங்கி வணிக வங்கிகளிலிருந்து வேறுபடுகிறது.

1. நாட்டின் பணம் மற்றும் வங்கியியல் முறைக்கு 'மைய வங்கி' தலைமை வங்கியாகும். வணிக வங்கியானது வங்கியமைப்பு முறை சட்டரீதியான ஒரு அலகு மட்டுமன்றி மைய வங்கிக்கு இது கட்டுப்பட்டதாகும்.

2. 'மைய வங்கி' 'பணம்' அச்சடிச்சு வழங்க முற்றுரிமைப் பெற்றுள்ளது. வணிக வங்கிகளுக்கு இவ்வுரிமை இல்லை.

3. 'மைய வங்கி' இலாப நோக்கில் செயல்படாது. இதன் நோக்கம் நாட்டின் பொருளாதாரக் கொள்கைகளை வளப்படுத்துவதாகும். ஆனால், வணிக வங்கிகளின் முக்கியமான நோக்கம் தனது பங்குதாரர்களுக்கு இலாபத்தை ஈட்டித் தருவதேயாகும்.

4. 'மைய வங்கி' நாட்டின் அயல்நாட்டு செலாவணி இருப்பை நிர்வகித்து வருகிறது. மைய வங்கியின் நெறிப்படுத்துதலுக்கேற்ப வணிக வங்கிகள் 'அயல்நாட்டுச் செலாவணியை' மேற்கொள்கிறது.

5. 'மைய வங்கி' அரசின் உறுப்பாகவும், வங்கியாகவும், நிதி ஆலோசகராகவும் செயல்படுகிறது. அதே நேரத்தில், வணிக வங்கிகள் பொது மக்களுக்கு ஆலோசகராகவும், வங்கியாளராகவும் செயல்படுகிறது.

**"மைய வங்கியின்" பணிகள்**

'மைய வங்கிகள்' பணிகள் அனைத்து நாடுகளுக்கு பொதுவானது. ஆனால் மைய வங்கியின் எல்லை மற்றும் கொள்கை நோக்கங்களின் கருத்து ஒரு நாட்டிற்கும் பிற நாட்டிற்கும், காலா காலத்திற்கும், நாட்டின் பொருளாதாரச் சூழ்நிலையைப் பொருத்து மாறுபடுகின்றது. பொதுவாக, 'அனைத்து மைய வங்கிகளும்' தனது பண மேலாண்மை மூலம் அதிக வளர்ச்சி வீதம், உகந்த வெளிநாட்டு செலுத்துநிலை ஆகியவற்றின் மூலம் நாட்டில் பொருளாதார நிலைத் தன்மையை ஏற்படுத்த முயற்சிக்கிறது. 'மைய வங்கியின்' பொதுவான பணிகளாவன.

**1. பணத்தை ஒழுங்குபடுத்துதல் (Regulator of Currency)**

காகிதப் பணத்தை (*Paper Currency)* வெளியிடுதல் மைய வங்கியின் மிக முக்கியப் பணியாகும். சட்டப்பூர்வமான பணத்தை புழக்கத்திற்கு அளித்தல் மைய வங்கியின் மற்றுமொரு பணியாகும். மைய வங்கியின் (ரிசர்வ் வங்கியின்)

வெளியீட்டுத்துறை (*Issue Dept.)* பணம் மற்றும் காசுகளை வணிக வங்கிகளுக்கு அளிக்கிறது. நாட்டின் பொருளாதார நிலைக்கேற்ப 'மைய வங்கி' கடன் மற்றும் பணப்புழக்கத்தை ஒழுங்குபடுத்துகிறது. 'பணம் அளிக்கும் முறையில்' மைய வங்கியானது தன்னிடத்தே குறிப்பிட்ட அளவு தங்கத்தையும் அயல்நாட்டு செலாவணி இருப்பு மற்றும் வைப்பு (*Securities)* ஆகியவற்றை வைத்துக்கொண்டு பணத்தை அச்சிட்டு வெளியிடுகிறது. இந்திய ரிசர்வ் வங்கி தன்னிடத்தே ரூ.115 கோடி தங்கத்தையும் மற்றும் 85 கோடி அயல்நாட்டு வைப்புகளையும் வைத்திருக்க வேண்டும். ஆனால் பணம் அச்சிட்டு வெளியிட எந்த வரையறையும் இல்லை. மைய வங்கி பணம் வெளியிடுவதற்கு முற்றுறிமை பெற்றுள்ளதால் பின் வரும் நன்மைகளைப் பெறுகிறது. அவையாவன

*i.* பண அளிப்பை வழங்குவதில் 'மைய வங்கி' சீரான நடவடிக்கை மேற்கொள்வதால் பணக்கட்டுப்பாட்டை நிர்வகிக்க இயலுகிறது.

*ii.* பண அமைப்பு முறையில் நிலைத் தன்மையைக் கொண்டு வருகிறது. எனவே பொதுமக்களிடையே தன்னம்பிக்கையை ஏற்படுத்துகிறது.

*iii.* பணம் அச்சிட்டு வெளியிடுவதால் அரசுக்கு இலாபம் கிடைக்கிறது.

### 2. வங்கி, முகவர் மற்றும் அரசுக்கு ஆலோசகர்

மைய வங்கி (இந்திய ரிசர்வ் வங்கி) அரசுக்கு வங்கியாகவும், முகவராகவும், ஆலோசகராகவும் செயல்படுகிறது. ஒரு வங்கியாக மைய, மாநில அரசின் கணக்குகளை தன்னிடத்தே கொண்டு, அரசின் சார்பாக அவற்றை செலவு செய்கிறது (*Payments).* அரசின் சார்பாக அந்நியப் பணங்களை வாங்கவும், விற்கவும் செய்கிறது. நாட்டின் தங்கத்தின் இருப்பை வைத்துக் கொள்கிறது. நிதி முகவராக (*fiscal agent)* 'மைய வங்கி' அரசுக்கு 90 நாட்களுக்கு மிகாமல் குறுகிய கால கடனளித்து உதவுகிறது.

'மைய வங்கி' மாநில அரசுகளுக்கும், உள்ளாட்சி அமைப்புகளுக்கும் கடனும், முன்பணமும் வழங்குகிறது. அரசின் சார்பாக அனைத்துப் 'பொதுக்கடன்'களையும் 'மைய வங்கி' மேலாண்மை செய்கிறது. ஒரு ஆலோசகராக (*advisor)*, அரசுக்கு, பணமதிப்புக் குறைப்பு *(devaluation)* அந்நிய செலாவணிக் கொள்கை, நிதிநிலை அறிக்கை, திட்டம் போன்ற பொருளாதார பிரச்சினைகளை சமாளிக்க பயனுள்ள ஆலோசனை 'மைய வங்கி' வழங்குகிறது.

### 3. வணிக வங்கிகளின் ரொக்க இருப்புகளின் பாதுகாவலர் (Cash Reserve)

வணிக வங்கிகள் தங்களிடமிருக்கும் பணத்தில், குறிப்பிட்ட விழுக்காடு 'ரொக்க இருப்பு' (*Cash Reserve)*க்களை 'மைய வங்கி'யிடம் வைத்திருக்க வேண்டும். இந்த இருப்புக்களிலிருந்து 'மைய வங்கி' நிதியை ஒரு வங்கியிலிருந்து மற்றொரு வங்கிக்கு காசோலை மூலம் பரிமாற்றம் (*Transfer)* செய்கிறது.

### 4. அந்நியச் செலாவணி இருப்பின் பாதுகாவலர் மற்றும் மேலாளர்

நாட்டின் அந்நியச் செலாவணி இருப்பை மேலாண்மை செய்கிறது. அயல்நாட்டு பணமாற்று வீதத்தை (*Exchange Rate)* உள்நாட்டு பணமதிப்போடு 'மைய வங்கி' நிர்ணயிக்கிறது. அந்நியச் செலாவணி மாற்று விகிதத்தில் ஏதாவது ஏற்றத்தாழ்வு இருந்தால், மைய வங்கி அதற்கேற்ப அந்நிய நாட்டுப் பணத்தை வாங்கவும் விற்கவும் செய்து மாற்றுவிதத்தில் (*Exchange rate)* இருக்கும் 'நிலையற்றத் தன்மையை' குறைக்க 'மைய வங்கி' நடவடிக்கை எடுக்கிறது.

### 5. கடைசி புகலிடம் 'மைய வங்கி' (Lender of Last Resort)

வணிக வங்கிகள், உண்டியல் இடைத் தரகர்களுக்கும், நிதி நிறுவனங்களுக்கும் மறு கழிவு செய்தும், பிணைப்பாதுகாப்பு அடிப்படையிலும் கடன் வழங்கி மைய வங்கி, வணிக வங்கிகளுக்கு கடைசி புகலிடமாக செயல்படுகிறது.

இவ்வகை வணிக வங்கிகளுக்கும் நிறுவனங்களுக்கும், இடர்ப்பாடான நிதி நிலையிலிருந்து மீண்டுவர, நாட்டின் நிதிக்கட்டமைப்பு சீர்குலையாமல் இருப்பதற்காக, மேற்கூறிய நிறுவனங்களின் இடர்ப்பாடான சூழ்நிலையில் அவர்களுக்கு கடனுதவி செய்து காப்பாற்றுகிறது.

### 6. பரிமாற்ற பணி (Clearing Function)

பரிமாற்ற முறைமூலம் 'மைய வங்கி' இதர வணிக வங்கிகளுக்கு 'பரிமாற்ற வீடு' ஆக (*Clearing House)* செயல்படுவதால் ஒருவருக்கொருவரின் தேவைகள் நிறைவேற்றப்படுகிறது. வணிக வங்கிகளின் பண இருப்பை (*Cash Reserve)* மைய வங்கி தன்னகத்தே பெற்றிருப்பதால், தான் ஒரு 'பரிமாற்றவீடாக' மைய வங்கி செயல்பட எளிதாகிறது.

## 7. கடன் கட்டுப்பாட்டாளர் (Controller of Credit)

நாட்டின் பொருளாதாரத்தில் வணிக வங்கிகளின் கடன் உண்டு பண்ணும் ஆற்றலை கட்டுப்படுத்தி அதன்மூலம் பணவீக்கம் மற்றும் பணவாட்டத்தை கண்காணிக்கும் மிகப் பெரும் பணியை 'மைய வங்கி' மேற்கொள்கிறது. இதற்கு மைய வங்கி கடன் அளவுக்கட்டுப்பாடுகள் (*Quantative methods)* கடன் தன்மை (*Qualitative methods)* கட்டுப்பாட்டு முறைகளை மைய வங்கி மேற்கொள்கிறது.

கடன் அளவுக் கட்டுப்பாட்டு முறை என்பது கடன் செலவு மற்றும் கடன் அளவைக் கட்டுப்படுத்துவதை நோக்கமாகக் கொண்டது. கடன் அளவுக் கட்டுபாடு முறைகள் (*Quantative Method)* மூவகைப்படும் *.* அவையாவன.

*1.* வங்கி வீதம் (*Bank Rate Policy)*

*2.* வெளி அங்காடி நடவடிக்கை (*Open Market Operations)*

*3.* வணிக வங்கிகளின் ரொக்க இருப்பு வீதத்தை மாற்றுதல் *(Variation in Reserve Ratio)*

**கடன் தன்மைக் கட்டுப்பாட்டுமுறைகள் (Qualitative Methods)**

கடனின் பயனையும், நெறிப்பாட்டினையும் கட்டுப்படுத்துகிறது. இம்முறை ஐந்து வகையாக செயல்படுகிறது.

*i)* இறுதி வரம்புத் தேவைகள்

*ii)* நுகர்வோர் கடன்களை ஒழுங்குபடுத்துதல்

*iii)* கடனை தேவைக்கேற்ப அளித்தல் (*rationing of credit)*

*iv)* 'மைய வங்கியின்' நேரடிச் செயல்பாடு

*v)* அறிவுரைகள் (*Moralsuasion)*

மேற்காணும் பணிகள் மட்டுமன்றி கூடுதலாக சில பணிகளையும் 'மைய வங்கி' புரிகிறது. கீழ்காணும் பிரச்சினைகளான. (*i)* கடன் *(Credit) (ii)* விலை நிலையில் ஏற்றத்தாழ்வு *(iii)* அந்நியச் செலாவணி மதிப்பில் ஏற்றத்தாழ்வு,

மேலும் மைய வங்கி பணம் மற்றும் நிதிப் புள்ளி விவரங்களை திரட்டுவதும், ஆராய்ச்சி மேற்கொள்வதும், தகவல் தருவதும் போன்ற பணிகளையும் மேற்கொள்கிறது. உலக வங்கி (*World Bank)* மற்றும் பன்னாட்டு நிதி நிறுவனம் (*IMF)* தொடர்பான பணிகளையும் கவனிக்க வேண்டும். மொத்தத்தில் ஒரு நாட்டின் 'மைய வங்கி' "நிதி மற்றும் பணத்தின்" பாதுகாவலனாக விளங்குகிறது.

**'மைய வங்கி' மேற்கொள்ளும் கடன் கட்டுப்பாட்டு முறை**

'கடன் கட்டுப்பாடு' மைய வங்கியின் ஒரு முக்கிய பணியாகும். வணிக வங்கிகள் எழுப்பும் கடன் பெருக்கத்தை கட்டுப்படுத்த 'மைய வங்கி' பல முறைகளைக் கையாளுகிறது. அதில் இரு முக்கிய முறைகளாவன.

1. கடன் அளவுக்கட்டுப்பாட்டு முறைகள் (*Quantiative Methods)*

2. கடன் தன்மைக் கட்டுப்பாட்டு முறைகள் (*Qualitative Methods)*

கடன் அளவுக் கட்டுப்பாட்டுமுறைகள் கடன் அளவை விரிவாக்கவோ, சுருக்கவோ பயன்படுகிறது. எடுத்துக்காட்டாக 'மைய வங்கி' வங்கிக் கடனின் பாதுகாப்பான உச்ச அளவு ரூ.50,000 கோடி எனக் கொள்வோம். ஆனால் குறிப்பிட்ட நேரத்தில் உண்மையான வங்கிக்கடன் ரூ.75,000 கோடி எனக் கொள்வோம். எனவே, இந்திய ரிசர்வ் வங்கி வங்கி வீதத்தை ஆயுதமாகப் பயன்படுத்தி கடன் அளவை ரூ.25,000/– கோடிக்கு குறைத்தது. எனவே, கடன் அளவு நாட்டில் குறைந்தது.

மற்றொரு புறம் கடன் தன்மை கட்டுப்பாட்டு முறைகள் (*Qualitative Methods of Credit Control)* தொழில் அல்லது வணிகத்தில், அரசின் பொருளாதார முன்னுரிமை அடிப்படையில் கடன் கட்டுப்பாட்டு அளவை ஒழுங்குபடுத்துகிறது. எடுத்துக்காட்டாக அத்தியாவசியப் பண்டங்களை வாங்கி விற்கும் ஊக வணிகர்களுக்கும், பதுக்கல்காரர்களுக்கும் வணிக வங்கிகள் கடன் கொடுத்ததன் காரணமாக நாட்டில் பணவீக்கம் நிலவுகிறது, விலைவாசி உயர்ந்தது என இந்திய ரிசர்வ் வங்கி மதிப்பீடு செய்ததாகக் கொள்வோம். இப்போது இந்திய ரிசர்வ் வங்கி 'வணிக வங்கிகளை' "ஊக வணிகங்களுக்கும் பதுக்கல் காரர்களுக்கும் பணம் கடன் அளிக்க வேண்டாம்" என அறிவுறுத்துகிறது. மேற்காண் பகுப்பாய்வு மூலம் நாம் அறிவது என்னவெனில் கடன் அளவுக் கட்டுப்பாட்டு முறையை **'மறைமுகமான முறை'** எனவும் தன்மைக் கட்டுப்பாட்டு முறையை **'நேரடி முறை'**யாகவும் கொள்ளலாம்.

## கடனளவு அல்லது பொதுத்தன்மை கடன் கட்டுப்பாட்டு முறைகள் (Quantitative or General Credit Control Methods)

### 1. வங்கி வீதம் (அ) மறுகழிவு வீதக் கொள்கை (Bank rate or Discount rate policy)

'மைய வங்கி' விதிக்கும் வட்டி வீதமே 'வங்கி வீதம்' எனப்படும். இதனை **'மறுகழிவு வீதம்'** என்றும் அழைக்கலாம். இந்த வீதத்திலேயே மைய வங்கியானது வணிக வங்கிகள் வைத்திருக்கும் அரசுப் பத்திரங்கள், உண்டியல்கள் ஆகியவற்றை மறுகழிவு செய்கிறது. வணிக வங்கிகளின் 'ரொக்க வைப்பு' (*Cash Reserves)* குறைந்தபட்ச சட்டப்பூர்வமான இருப்பைவிட குறைவாக இருக்கும்போது இவ்வங்கிகள் கூடுதல் பணம் பெறுவதற்கு, தங்களிடமுள்ள தகுதியுள்ள பத்திரங்களை மைய வங்கியில் வைத்து கடன் பெறலாம் அல்லது உண்டியல்களை மைய வங்கியின் மூலம் மறுகழிவு செய்து கூடுதல் பணம் பெறலாம். இப்பணிக்கு 'மைய வங்கி' வட்டியை வசூலித்துக் கொள்ளும்.

'வங்கி வீதம்' உயர்த்தப்படும் போது மைய வங்கியிடம் கடன்பெறுவது அதிக செலவை ஏற்படுத்தும். எனவே வணிக வங்கிகள் குறைவாக கடன்பெறும் (மைய வங்கியிடமிருந்து) மாறாக, வணிக வங்கிகள் வாடிக்கையாளருக்கு கடன் அளிக்கும் வட்டி வீதத்தை உயர்த்தி விடும். இதனால் வணிகச் செயல்பாடுகள் ஊக்கமிழக்கும். எனவே, பண்டங்களின் தேவைக்குறையும், விலை வீழ்ச்சியடையும். ஆகவே "பண வீக்கத்தைக்" கட்டுப்படுத்துவதற்காக வங்கி வீதம் உயர்த்தப்படுகிறது. மாறாக "பணவாட்டத்தை" போக்க 'வங்கி வீதம்' குறைக்கப்படுகிறது.

### 2. வெளிச்சந்தை நடவடிக்கைகள் (Open Market Operations)

அரசுப் பத்திரங்கள், மற்றும் தனியார் நிதி நிறுவனங்களின் பாதுகாப்புப் பத்திரங்கள் (*Securities)* உண்டியல்கள் (*Bill)* ஆகியவற்றை மையவங்கி, வாங்கி, விற்கும் நடவடிக்கையே வெளிச்சந்தை நடவடிக்கை என்றழைக்கப்படுகிறது.

பண வீக்கத்தின்போது மைய வங்கி முதல்தர உண்டியல்களை (*First Class Bills)* பணச் சந்தையில் விற்கிறது. இவ்வுண்டியல்களை வாங்கும் வணிக வங்கிகள் 'மைய வங்கிக்கு' உரிய பணத்தை செலுத்துவார்கள். வணிக வங்கிகள், 'மைய வங்கி'யிடம் வைத்திருக்கும் "ரொக்க இருப்பைக்

குறைத்துவிடும். சில வங்கிகள் 'கடன் கொடுப்பதை' தடைசெய்தும் வருகிறது. இவ்வாறு, பணவீக்கத்தைத் தூண்டும் செயல்பாடுகள் வங்கி கடனை கட்டுப்படுத்துவதனால் வணிகச் செயல்பாடுகள் குறைந்து பணவீக்கம் கட்டுப்படுத்தப்படுகிறது.

பொருளாதார மந்த காலங்களில் 'மைய வங்கி' உண்டியல்கள் மற்றும் பாதுகாப்புப் பத்திரங்களை, வணிக வங்கியிலிருந்து வாங்கும். இதற்கு வணிக வங்கிக்கு மைய வங்கி பணம் கொடுத்துவிடும். எனவே, வணிக வங்கிகளின் 'ரொக்க இருப்பு' அதிகரிக்கும். இதன்மூலம் வங்கிகள் தங்களின் கடனை அதிகரிப்பதால், மூலதனம், வேலைவாய்ப்பு மற்றும் விலைகள் அதிகரிக்கும். இவ்வாறு, நாட்டில் 'மைய வங்கி'யானது தனது வணிகச் செயல்பாடுகள் மற்றும் பொருளாதார நிலையை தூண்டிவிடுகிறது.

### 3. மாறும் இருப்பு வீதம் (Variable Reserve Ratio)

ஒவ்வொரு வணிக வங்கியும் சட்டப்படி 'மைய வங்கியிடம்' ஒரு குறிப்பிட்ட அளவு விழுக்காடு பணத்தை 'வைப்பு நிதியாக' வைத்திருக்க வேண்டும்.

வணிக வங்கிகளிடம் குறைந்த அளவு இருப்பு பணத்தைவிட கூடுதலாக உள்ள இருப்பு, கூடுதல் இருப்பு *(Excess Reserve)* எனப்படும். வணிக வங்கிகள் இந்த கூடுதல் இருப்பின் அடிப்படையிலேயே கடன் வழங்குகிறது.

மைய வங்கி இருப்புத் தேவையில் மாற்றத்தைக் கொண்டுவரலாம். இதனால் வணிக வங்கிகளின் இருப்புத் தொகையில் பாதிப்பு ஏற்படுவதுடன் வணிக வங்கிகள் மைய வங்கியிடம் செலுத்தியுள்ள வைப்புநிதி, முதலீடு மற்றும் கடன் கொடுப்பதற்கென வைத்துள்ள நிதியிலும் பாதிப்பு ஏற்படும்.

எடுத்துக்காட்டாக, மைய வங்கியிடம் *10%* இருப்புநிதி *(Reserve requirement)* யை வணிக வங்கிகள் நிர்வகிக்க வேண்டும் என்றால், வணிக வங்கிகள் ஒவ்வொரு 1000 ரூபாய் வைப்புத் தொகைக்கும் ரூ 100 ஐ மையவங்கியிடம் ரொக்க இருப்பு *(Cash Reserve)* வைத்தது போக மீதம் உள்ள ரூ.900/– கடனாக அளிக்கலாம். பணவிகிதத்தைக் கட்டுப்படுத்த ரொக்க இருப்பை *(Cash Reserve) 10%* லிருந்து *15%* ஆக மைய வங்கி உயர்த்தலாம். இதனால் வணிக வங்கிகள் தாங்கள் கடனளிக்க வைத்துள்ள கூடுதலான *5%* தொகையை மைய வங்கியிடம் செலுத்த வேண்டிய கட்டாயம் ஏற்படும். மாறாக பண வாட்டத்தை போக்க மைய வங்கி ரொக்க இருப்பை

*(Cash Reserve) 10%* லிருந்து *7%* ஆக குறைக்கலாம். இதனால் வணிக வங்கிகளின் ரொக்க இருப்பு கூடுதலாக, அது அளிக்கும் கடன் வசதி *3%* அதிகரிக்கும்.

**கடன் தன்மைக் கட்டுப்பாட்டு முறைகள்**
**(Qualitative or Selective Credit Control)**

கடன் தன்மைக் கட்டுப்பாட்டு முறைகள் என்பது கடனைப் பயன்படுத்துபவர்களுக்கு அளிக்கப்படும் தொகையை கட்டுப்படுத்துவதும், ஒழுங்குபடுத்துவதும் ஆகும். இதன் நோக்கம் ஊக வாணிகம் போன்ற விரும்பத்தகாத செயல்களுக்கு வங்கி கடனுதவி அளிக்காமல் சமுதாயத்திற்கு பயனுள்ளவைகளுக்கு கடனுதவி செய்வதாகும்.

**முக்கியமான கடன் தன்மைக்கட்டுப்பாட்டு முறைகள் பின்வருமாறு**

**(அ) இறுதித்தேவை (Margin Requirements)**

இதன் முக்கிய நோக்கம் ஊக வாணிகத்தில் ஈடுபடுபவர்கள் பங்குப்பத்திரத்தை *(Securites)* வாங்குவதைத் தடுப்பதாகும். மையவங்கி பங்குப் பத்திரத்தை *(Securities)* வாங்க கடன் வழங்குவதற்கு சில குறைந்த அளவு கட்டுப்பாடு (வணிக வங்கிகளுக்கு) விதிக்கிறது. எ.கா. மையவங்கியானது *30%* இறுதித்தேவை விதிக்கிறது எனில், ரூ.1000த்திற்கு பங்குபத்திரம் *(Security)* வாங்குவதற்கு ரூ.*300/-*ஐ இறுதிப்பணமாக வைத்துக் கொண்டும் ரூ. 700 ஐ கடன் வழங்குவதற்கு வைத்துக் கொள்ளலாம். மையவங்கியானது ஊகவாணிக செயல்பாடுகளை தடுக்க நினைத்தால் இறுதித் தேவையை அதிகரிக்கும். மாறாக, கடனை விரிவாக்க நினைத்தல் இறுதித் தேவையைக் குறைக்கிறது.

**ஆ) நுகர்வோர் கடனை ஒழுங்கு படுத்துதல்**
**(Regulation of Consumer Credit)**

நுகர்வோர் அழியாப்பண்டங்களை தவணை முறையில் வாங்க கடன் பெறுவதை மைய வங்கி கட்டுப்படுத்துகிறது. இதனை அடைய மைய வங்கி இருவழிகளைக் கையாளுகிறது.

1. குறைவான ரொக்கம் செலுத்துதல் (*minimum down payment)*
2. திருப்பிச் செலுத்துவதில் அதிக காலம் (எ.கா. 36/48/60 தவணைகள்)

### இ) கடனைத் தேவைக்கேற்ப பங்கீடு செய்தல் (Rationing of Credit)

வணிக வங்கிகள் எதற்காகக் கடன் அளிக்கிறதோ; அதனை கட்டுப்படுத்தி கண்காணித்து கொடுப்பதே ‘‘கடன் பங்கீடு செய்தல்’’ ஆகும். இது இருவகைகளாகும் 1. வணிக வங்கிகள் ஒவ்வொரு துறைக்கும் அளிக்கும் கடனளவை ‘‘மைய வங்கி’’ கடன் வரம்பினை நிர்ணயிக்கிறது. இந்த வரம்பிற்கு அதிகமாக அவை கடன் கொடுக்க இயலாது. 2. மாற்று மூலதன சொத்து வீதம் *(Variable Capital assets ratio)* இதன் பொருள் ‘மைய வங்கி’ வணிக வங்கிகளின் மொத்த சொத்துக்களில் மூலதன வீதத்திற்கு ஏற்ப சரிசெய்கிறது.

### ஈ) நேரடிச் செயல்பாடு (Direct Action)

நேரடிச் செயல்பாடு என்பது மைய வங்கி ‘வணிக வங்கிகள் ஒரு குறிப்பிட்ட கொள்கையை கடை பிடிக்க வேண்டும்’ என அறிவுறுத்துகிறது. மைய வங்கி வணிக வங்கிகளுக்கு கீழ்கண்ட அறிவுரைகளை பகிர்கிறது.

1. கடன் கொடுக்கும் கொள்கைகள்
2. முன்பணங்கள் எந்தெந்த காரணங்களுக்காக கொடுக்கபடலாம்.
3. பெற்ற கடன்களுக்கு ‘இறுதிப் பணம்’ நிர்வகிக்கப்படுதல் வேண்டும்.

### உ) அறிவுரைகூறுதல் (Moral Suasion)

நடப்புப் பொருளாதார நிலையில் ‘மைய வங்கி’யானது வணிக வங்கிகளை பொதுப் பணக்கொள்கையை கடைபிடிக்க வேண்டி கேட்டுக் கொள்வதும், தொடர்ந்து அவ்வாறே தூண்டுதலை செய்வதும் மைய வங்கியின் பணி ஆகும்.

### ஊ) விளம்பரப்படுத்துதல் (Publicity)

‘மைய வங்கியானது’ பொதுமக்களுக்காக வணிக வங்கிகளின் சொத்துக்கள் மற்றும் செலவினங்கள் சார்ந்த விவரங்களை வாரமொரு முறை அல்லது மாதமொரு முறை அல்லது காலாண்டுக்கு ஒருமுறை தான் வெளியிடும் அறிக்கையில் தெரிவிக்கிறது. மேலும் ‘மைய வங்கியானது பண அளிப்பு விலைகள், உற்பத்தி, வேலை வாய்ப்பு போன்றவை சார்ந்த புள்ளி விவரங்களை வெளியிடுகிறது.

### வங்கிகள் நாட்டுடமையாக்கப்படுதல்

இந்திய வங்கியியல் முறை தொடர்ச்சியான நெருக்கடிகளை சந்தித்ததன் விளைவாக 20ம் நூற்றாண்டின் முதல் பாதியில் வங்கிகளின் வளர்ச்சி மெதுவாக இருந்தது. ஆனால், விடுதலைக்குப் பிறகு, இந்திய வங்கி முறையில் மிகப்பெரிய வளர்ச்சி காணப்பட்டது. இதன் காரணமாக திட்டமிடப்பட்ட பொருளாதார முன்னேற்றம், பண அளிப்பு அதிகரித்தல், வங்கியியல் முறையில் வளர்ச்சி, 1950ல் பாரத் ஸ்டேட் வங்கிகளும் அதன் இணை வங்கிகளும் அமைக்கப்பட்டது, இந்திய ரிசர்வ் வங்கியின் கட்டுப்பாடு மற்றும் வழிகாட்டு முறைகள், இவை அனைத்தையும்விட வணிக வங்கிகள் ஜூலை 1969ல் 14 வங்கிகளும் மற்றும் 1980ல் 6 வங்கிகளும் அரசுடைமை ஆக்கப்பட்டதன் காரணமாக வங்கி வளர்ச்சி முறையில் மிகப்பெரிய மாற்றம் ஏற்பட்டது.

நாட்டுடமையாதலுக்கு முன்னர் இந்திய வணிக வங்கியியல் முறை, நாட்டின் திட்டமிடப்பட்ட பொருளாதார வளர்ச்சிக்கு போதுமான பங்கு பணி ஆற்றவில்லையென சில பொருளியலறிஞர்கள் கருதினார்கள். 'வங்கிகள்' முன்னணித் தொழிலதிபர்கள் மற்றும் வர்த்தகத்திலுள்ள பெரும்புள்ளிகளால் மட்டுமே நிர்வகிக்கப்பட்டது. அவர்கள் பொதுப்பணத்தை பயன்படுத்தி தனித் தொழில் சாம்ராஜ்யத்தை உருவாக்கினர். சிறிய தொழில்கள், வர்த்தக அலகுகள் தொடர்ந்து புறக்கணிக்கப்பட்டன. வேளாண்மைக் கடன் ஒருபோதும் வழங்கப்படவில்லை. பொது சேமிப்பு, சமூக விரோத சட்டப்பூர்வமற்ற செயல்களுக்குப் பயன்படுத்தப்பட்டது. எனவே, இந்திய அரசு 14 வணிக வங்கிகளை ஜூலை 1969 ஆம் ஆண்டும், மற்றும் 6 வணிக வங்கிகளை ஏப்ரல் 1980 ஆம் ஆண்டும் எடுத்துக்கொண்டது. (நாட்டுடமையாக்கியது) இந்த வணிக வங்கி பிரிவுகள் கீழ்க்காணும் வகைகளில் செயல்படுகிறது.

அ) பாரத ஸ்டேட் வங்கி

ஆ) பாரத ஸ்டேட் வங்கியின் 7 இணைவங்கிகள்

இ) இருபதுநாட்டுடைமையாக்கப்பட்டவங்கிகள்

ஈ) இந்திய கூட்டாண்மை வணிக வங்கிகள் (*Indian Joint-Stock Commercial Banks)*

உ) இந்தியாவில் செயல்படும் அயல்நாட்டு வங்கிகள்

ஊ) வட்டார ஊரக வங்கிகள்

**நாட்டுடமையாக்கப்பட்ட வங்கிகளின் செயல்பாடுகள்**

நாட்டுடமையாக்கப்பட்ட வணிக வங்கிகளால் ஏற்பட்ட பயன்களாவன. இந்திய வங்கியமைப்புமுறையில் ஒரே சீரான நிலையும் அரசின் வங்கியியல் கொள்கையிலும், பணக் கொள்கையிலும் தகுந்ததொரு சூழ்நிலையை ஏற்படுத்திக்கொடுத்தது.

நாட்டுடமையாக்கப்பட்ட பிறகு வணிக வங்கிகள், தங்களின் பழமை வாய்ந்த செயல்பாடுகளிலிருந்து மாறி, தனது நோக்கங்களை பல்வேறு களங்களில் நிறைவேற்றி பீடு நடைபோட்டன. வணிக வங்கி, வங்கிக் கிளைகளை அதிகமாக்குதல், வைப்புக்களைத் திரட்டுதல், உற்பத்திச் செயல்களுக்கு நிதி உதவி செய்தல், புறக்கணிக்கப்பட்ட துறைகளுக்கு அதிகக் கடன் வழங்குதல், வங்கியியலில் ஒரு பெரிய செயற்கரிய செயல்பாடுகள் செய்தல் போன்ற மாபெறும் சாதனைகளை வணிக வங்கிகள் படைத்துள்ளன.

**பயிற்சி**

**பகுதி – அ**

**I. சரியான விடையைத் தேர்ந்தெடுக்கவும்.**

*1.* இந்தியாவில் முதன் முதல் வங்கி தொடங்கப்பெற்ற ஆண்டு

அ. 1770 ஆ. 1806

இ. 1801 ஈ. 1782

*2.* குறைந்த அளவு வைப்பு நிதி முறை (*Minimum Reserve System)* குறிப்பது.

அ. புழக்கப் பணம் வெளியிடும் முறை

ஆ. வணிக வங்கிகளின் தங்கள் நிதியியல்புப் பங்கின் ஒரு தொகையை *RBI*யிடம் வைத்திருத்தல்.

இ. வணிக வங்கிகள் தங்கள் வைப்புநிதியின் ஒரு பங்கினை ரொக்கப் பணமாக வைத்திருப்பது.

ஈ. வாடிக்கையாளர்கள் தங்கள் வைப்புத்தொகையின் ஒரு பகுதியினை குறைந்தபட்ச இருப்பாக வைத்திருப்பது.

3. இலாப நோக்கத்திற்காக செயல்படாத வங்கியினை குறிப்பிடுக.

அ. ஆந்திரா வங்கி ஆ. கனரா வங்கி

இ. இந்தியன் ஓவர்சிஸ் வங்கி ஈ. இந்திய ரிசர்வ் வங்கி

4. பதினான்கு வணிக வங்கிகள் நாட்டுடமை ஆக்கப்பட்ட ஆண்டு

அ. 1969 ஆ. 1951

இ. 1949 ஈ. 1980

5. வணிக வங்கிகளின் மிக முக்கியமான பணி

அ. கடனும் முன்பணமும் வழங்குவது ஆ. உண்டியல்களை மறுகழிவு செய்தல்

இ. வைப்புத் தொகையைப் பெறுவது ஈ. வங்கிகளிடையே கடன் பெறுதல்

## II. கோடிட்ட இடங்களை நிரப்புக.

6. ஏற்றுமதி இறக்குமதி வங்கி .......... வாணிபத்திற்கு கடன் வழங்குகிறது.

7. *RBI* கடன் அளிப்பை, வங்கி வீதத்தை மாற்றுவது அல்லது .......... மூலம் கட்டுப்படுத்துகிறது.

8. நபார்டு (*NABARD*) வங்கி ........... கடனை மத்தியகால மற்றும் நீண்ட காலத்திற்கு வழங்கி உதவுகிறது.

9. இந்திய ரிசர்வ் வங்கி (*RBI*) ஏப்ரல் .......... ஆண்டு அமைக்கப்பட்டது.

10. அன்றாட பரிமாற்றத்திற்காக வணிக வங்கிகள் தங்கள் வசம் வைத்திருப்பது .......... பணம் ஆகும்.

## III. பொருத்துக.

11. பணம் அச்சிடுவதில் முற்றுறிமை அ. வணிக வங்கிகள்

12. ரொக்க இருப்பு வீதம் (*C.R.R.*) ஆ.சட்டப்பூர்வ குறைந்தபட்ச வட்டிவீதம்

13. வங்கிவீதம் இ.வணிகர்களுக்கு வழங்கப்பட்டுள்ள வசதி

14. மிகைப் பற்று (*Overdraft*) — ஈ. மொத்த வைப்புத் தொகையில் 3 முதல் 15 சதவீதம்

15. நாட்டுடமையாக்கப்படுதல் — உ. இந்திய ரிசர்வ் வங்கி

**IV. ஓரிரு வார்த்தைகளில் விடையளிக்கவும்.**

16. இந்தியாவில் முதன்முதலில் நாட்டுடமையாக்கப்பட்ட வங்கி எது?

17. நடப்புக் கணக்கை வங்கியில் வைத்திருப்பவர்கள் யார்?

18. ஏற்றுமதி – இறக்குமதி (*Exim-Bank)* வங்கியை தொடங்கிய நிறுவனம் எது?

19. வங்கிகளின் கடைசி புகலிடம் எது?

20. வணிக வங்கிகள் புழக்கப் பணத்தை அச்சிட்டு வெளியிடலாமா?

## பகுதி–ஆ

**V. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடையளிக்கவும்.**

21. வங்கி என்பதன் பொருள் யாது?

22. வணிக வங்கிகளைப் பற்றி சிறு குறிப்பு வரைக.

23. மைய வங்கி என்றால் என்ன? உதாரணம் தருக.

24. வெளிச்சந்தை நடவடிக்கைகள் என்றால் என்ன?

25. அறிவுரைகள் கூறுதல் (*Moral Suation)* என்பதன் பொருள் என்ன?

## பகுதி–இ

**VI. பின்வரும் வினாக்களுக்கு ஒரு பக்க அளவில் விடையளிக்கவும்.**

26. பொருளாதார வளர்ச்சியில் வங்கிகளின் பணிகளை விளக்குக.

27. மைய வங்கிக்கும் வணிக வங்கிகளுக்கும் உள்ள வேறுபாடுகள் யாது?

28. மைய வங்கியைப் பற்றி பல்வேறு பொருளியலறிஞர்களின் கருத்துக்களை தொகுத்துக் கூறுக.

29. இந்திய ரிசர்வ் வங்கியின் கடன் அளவுக்கட்டுப்பாட்டு முறைகளை விவரி.

30. வணிக வங்கிகள் வழங்கும் பல்வேறு கடன்களையும் முன்பணங்களையும் விளக்கியுரைக்கவும்.

### பகுதி–ஈ

**VII. பின்வரும் வினாக்களுக்கு மூன்று பக்க அளவில் விடையளிக்கவும்.**

31. வணிக வங்கிகளின் பணிகளை விளக்குக.

32. மைய வங்கியின் பணிகளை விளக்கியுரைக்கவும்.

# பாடம் – 9
# பன்னாட்டு வாணிகம்
# (International Trade)

**உலகமயமாதல்**

உலகமயமாதல் என்பது ஒவ்வொரு நாடுகளின் பொருளாதாரத்தை, உலக நாடுகளின் பொருளாதாரத்தோடு இணைத்தல், பன்னாட்டு வாணிகம், பன்னாட்டு முதலீடு, பன்னாட்டு நிதி ஆகியவற்றின் அதிக அளவு வெளிப்படைத் தன்மையோடு செயல்படுவது உலகமயமாதலின் சாராம்சமாகும். உலக நாடுகள் அனைத்தையும் ஒருங்கிணைந்த ஒரே பொருளாதார அமைப்பாக மாற்றியமைப்பதற்கு உலகமயமாதல் என்று பெயர். அனைத்து நாடுகளின் பண்டங்கள் மற்றும் பணிகளின் வாணிபம், முதலீடு செய்வதற்குரிய அனைத்து தடைகளும் நீக்கப்படுகிறது.

கை பிரெய்ன்பாண்ட் *(Guy Brainbant)* என்பவரின் கூற்றுப்படி உலகமயமாக்கல் என்பது உலக வாணிகத்தை துவக்குவதோடு மட்டுமன்றி தொலை தொடர்பு வழிமுறைகளை முன்னேற்றமடையச் செய்தல், நிதி அங்காடியை பன்னாட்டு மயமாக்குதல், பன்னாட்டு நிறுவனங்களின் வளர்ச்சிக்கு முக்கியத்துவம் கொடுத்தல், மக்கள்தொகை பெயர்ச்சி, பொதுவாக தனிநபர்களின் இடப்பெயர்ச்சி அதிகமாதலின் காரணமாகவும், பண்டங்கள், முதலீடு, புள்ளிவிவரங்கள் மற்றும் கருத்துக்களோடு அன்றி தொற்றுநோய்கள், மாசு அடைதல் போன்றவை பற்றியும் ஆகும்.

உலகமயமாதல் என்பது கீழ்க்கண்ட அளவீடுகளைக் குறிக்கிறது.

1. உலக நாடுகளின் வாணிபம் விரிவடைதல்.
2. மக்கள் இடம் பெயர்தலை ஊக்குவித்தல்.
3. பணம் அல்லது எதிர்காலச் செலுத்துகைகள் அதிக அளவில் பரிமாற்றம் நடைபெறுதல்.
4. முதலீடு அதிக அளவில் இடம் பெயர்தல்.
5. நிதி முதலீட்டின் இடப்பெயர்ச்சியை அதிகரித்தல்.

6. மேற்கூறிய அனைத்து நடவடிக்கைகளிலும் ஈடுபட வெளிநாட்டு நிறுவனங்கள் தோன்றுதல்.

7. பல நாடுகளிடையே தொழில் நுட்பத்தை பரிவர்த்தனை செய்தல்.

8. செய்தி மற்றும் மின் அணுச்சாதனங்களின் வளர்ச்சியை அதிகரிக்கச் செய்தல்.

9. கல்வி உட்பட வாணிபம் மற்றும் அனைத்து பணிகளின் உற்பத்தியை வளர்ச்சியடையச் செய்தல்.

### தாராளமயமாக்கல் (Liberalization)

*1991*, ஜூன் மாதத்தில் அந்நியச் செலவாணி இருப்பானது உள்ளீடுகளுக்கான நிதி ஆதாரம் அளிக்க இரண்டு வாரங்களுக்கு மட்டுமே போதுமானதாக இருந்ததொரு இக்கட்டான சூழ்நிலையில் இந்தியா, தாராளமயமாக்கல் பொருளாதாரத்தை கடைப்பிடித்து இச் சீர்கேட்டினால் கடனை குறித்த காலத்தில் திரும்பச் செலுத்த முடியாத நிலை ஏற்பட்டது. இந்தியாவின் கடன்தரம் தாழ்ந்து விட்ட நிலையில் வெளிநாட்டு வாழ் இந்தியர்கள் தங்களது இருப்பை வெளிநாட்டு நாணயமாக திரும்பப் பெற்றுக்கொள்ள ஆரம்பித்ததனால் குறுகிய காலக்கடன்களை வழங்கிய வெளி நாட்டு நிறுவனங்களுக்கு செலுத்தவேண்டிய கடனை குறித்த காலத்தில் செலுத்த முடியாத நிலை இந்திய அரசுக்கு ஏற்பட்டது.

எனவே, இப்பிரச்சனைகளை சமாளிக்கவும், நாட்டின் பொருளாதாரத்தை மீட்கவும், உள்நாட்டு வெளிநாட்டு துறைகளில் கடுமையான கொள்கை நடவடிக்கைகள் அறிமுகம் ஆகியது. இக்கொள்கை நடவடிக்கை அனைத்தும் ஒரு பகுதியில் உடனடித்தேவை கருதியும், மறுபகுதியில் உலக வங்கி மற்றும் பன்னாட்டு நிதி நிறுவனத்தின் அறிவுரையின்படியும் மேற்கொள்ளப்பட்டது. இந்த தாராளமயமாக்கல் கொள்கையினால் வெளிச்சந்தை மையப் பொருளாதாரம் இந்தியாவில் வெகுவிரைவாக முன்னேறியது.

### தாராளமயமாக்கலின் கொள்கை நடவடிக்கைகள்

தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல், உலகமயமாக்கல் திட்டத்தின்படி மிகப்பெரிய கொள்கை முடிவுகள் மேற்கொள்ளப்பட்டன. அதன்படி அரசு ஜீலை 1991ல் *20%* அளவிற்கு பணமதிப்பு செய்தது. புதிய தொழிற்கொள்கை, புதிய வாணிபக் கொள்கை, புதிய ஏற்றுமதி இறக்குமதி

கொள்கைகளை **1991**ல் அறிவித்தது. இதன்படி மேற்கெள்ளப்பட்ட நடவடிகைகளாவன தொழில் தொடங்குவதற்கான உரிமம் பெறுதலை ரத்து செய்தல், பொதுத்துறை நிறுவனங்களுக்கான தடை செய்யப்பட்ட வாணிக நடைமுறைச் சட்டத்தை *(MRTP-Act)* திருத்தியமைத்தல், அரசின் பல்வேறு கட்டுப்பாடுகளை திரும்பப் பெருதல், தனியார் மயமாக்கலை ஊக்குவித்தல் சுங்கவரிகளை வெகுவாகக் குறைத்தல், அங்காடி தீர்மாணிக்கும் அந்நிய செலவாணிக்கு மாற்றிக்கொள்ளல், பல்வேறு நிதியியல் மற்றும் பணவியல் துறை சீர்திருத்தங்கள் போன்ற அனைத்து நடவடிக்கைகளும் புதியப் பொருளாதாரக் கொள்கைகளில் *(NEP)* அடங்குவதாகும்.

ஆண்டுகள் செல்ல நடப்புக்கணக்கில் நிலையான வளர்ச்சி இருந்தது. மேன்மேலும் அந்நிய நேரடி முதலீட்டிற்கு பல்வேறு துறைகள் திறந்துவிடப்பட்டன. இதனால் தொலைத் தொடர்பு, சாலைப்போக்குவரத்து, துறைமுகம், விமானப்போக்குவரத்து, காப்பீடு மற்றும் நிகர பெருந்துறைகளில் அந்நிய நேரடி முதலீடு அதிகரித்தது.

**1990**களில் அமலாக்கப்பட்ட தாராளமயமாக்கல், தனியார்மயமாக்கல், உலகமயமாக்கல் காரணமாக ஒருங்கிணைந்த இந்தியாவில் கொண்டுவரப்பட்ட உலகலாவிய வாணிகம் மற்றும் முதலீட்டினால் சமீப ஆண்டுகளில் மிகப்பெரிய பொருளாதார வளர்ச்சியை இந்தியா கண்டது. இப்பெரும் வளர்ச்சி இருந்தும், வேலையிண்மை, வறுமை, ஏற்றத்தாழ்வு, குறைவான அளவிளான மனித வளர்ச்சி ஆகியவை நம்நாட்டிற்கு மிகப்பெரிய சவாலாகவே உள்ளது.

### அயல்நாட்டு முதலீடு

**1990**களில் இந்தியாவில் ஏற்பட்ட பொருளாதார இடர்ப்பாட்டினை சரிசெய்ய மேற்கொள்ளபட்ட புதிய பொருளாதர கொள்கையின்படி அயல்நாட்டு முதலீடு மிக முக்கிய பங்கினை வகிக்கிறது. புதிய பொருளாதார கொள்கையின் மிக முக்கிய நோக்கம் அதிக அளவிலான பொருளாதார வளர்ச்சியை அடைவதாகும். நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தை அடைய, நாணய மதிப்பு குறைப்பு, பண இலக்கை குறைத்தல், பருப்பொருள் பற்றாக்குறையை குறைத்தல், வாணிபத்தை தாராளமயமாக்குதல், தொழில் துறையை தனியார் மயமாக்குதல், அயல்நாட்டு முதலீடுகள் மற்றும் போட்டிகளை வரவேற்றல் போன்ற வழிமுறைகள் பயன்படுத்தப்பட்டன. தொழில்துறையில் உள்ள முதலீட்டு இடைவெளியை நிரப்ப அயல்நாட்டு முதலீடு ஊக்குவிக்கப்பட்டது.

அயல்நாட்டு முதலீடானது தொழில்நுட்பம், அங்காடித் தொழில் முனைவு, நிர்வாகத் தொழில் நுணுக்கங்கள், இறக்குமதியை அதிகரிக்கச் செய்யும் புதிய வழிமுறைகள் ஆகியவற்றிற்கு வழி வகுக்கும். முன்னுரிமை தொழில்களிலும், உயர்தர தொழில்நுட்பங்களிலும் அயல்நாட்டு முதலீட்டை அதிகரிக்க நேரடி அயல்நாட்டு முதலீடு அதன் பங்குத் தொகையில் *40%* இலிருந்து **51%** உயர்த்தி அனுமதியளித்தது. இவை பொதுவாக, 'பிற சேர்க்கை தொழில்கள் எனப்படும். இது அயல்நாட்டு முதலீட்டில் இந்தியாவின் கொள்கையை தெளிவாக்குகிறது. மேலே வகுத்த வழிமுறைகள் அயல்நாட்டு நிறுவனங்கள் இந்தியாவில் முதலீடு செய்வதற்கு வழி வகுக்கிறது.

அயல்நாட்டு முதலீடு மற்றும் அயல்நாட்டு தொழில்நுட்ப ஒப்பந்தங்கள் தொடர்புடைய முடிவுகள் **1991**ல் புதிய பொருளாதார கொள்கையில் ஏற்பட்ட மிகச்சிறிய மாற்றமாகும்.

புதிய பொருளாதாரக் கொள்கையில் ஏற்பட்ட மாற்றங்களை நான்கு வகையாக வகைப்படுத்தலாம்.

### 1. பண்டங்களை தேர்ந்தெடுத்தல்

அயல் நாட்டு முதலீடு தாரளமாக அனுமதிக்கப்பட்டதால், உற்பத்தி பண்டங்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே செல்லுகிறது.

### 2. அங்காடியைத் தெரிவு செய்தல்

இந்தியச் சந்தையில், அயல்நாட்டு முதலீட்டாளர்கள் மிக சுலபமாக உள் நாட்டு முதலீட்டாளர்களோடு போட்டியிட முடிகிறது.

### 3. சொந்த அமைப்பைத் தேர்வு செய்தல்

பெரும்பாலும் அயல்நாட்டு முதலீட்டாளர்கள் அதிக அளவு பங்கினை வைத்துக் கொள்ளலாம்.

### 4. வழிமுறைகளை எளிமையாக்குதல்

நேரடி வெளிநாட்டு முதலீடு மூன்று வழிகளில் நுழைகிறது.

**(1)** இந்திய ரிசர்வ் வங்கியில் நேரடி வழிமுறைகளில் அனுமதிக்கப்பட்ட முதலீடு.

**(2)** முன்னுரிமை பெற்ற '**35**' தொழிற்சாலைகளுள் ஒன்றிற்கு *RBI 51%* வரை நேரடி அயல்நாட்டு முதலீட்டிற்கு அனுமதியளிக்கிறது. *35* முன்னுரிமைத் தொழில்கள் தவிர பிறதொழில்களில் முதலீடு செய்ய பன்னாட்டுத் தொழிலின் இந்திய பங்குதாரர்கள், **51%** மேல் முதலீடு செய்ய விரும்பினால், தொழிற்சாலைகளுக்கு அங்கீகாரம் அளிக்கும் செயலகம் (*SIA*) அல்லது அந்நிய முதலீட்டை ஊக்குவிக்கும் வாரியத் (*FIPB*) திடம் அனுமதி பெறவேண்டும்.

மூன்றாவதாக வெளிநாட்டு வாழ் இந்தியர்கள் மூலம் கிடைக்கும் முதலீடு.

**தொழில்நுட்ப மாற்றம்**

நாட்டின் முன்னேற்றத்திற்கு தொழில்நுட்பம் ஒரு முக்கிய காரணியாகும். தொழில்நுட்பத்தில் பின் தங்கிய நிலையும், தொழில்நுட்ப வளர்ச்சியில் மிகக்குறைந்த வேகத்தையும் உடையது வளரும் நாடுகளின் இயல்பு ஆகும். நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தை வேகப்படுத்தவும், நவீன முறைகளைப் பயன்படுத்தி பொருளாதார முன்னேற்றத்தை விரைவாக்க வளர்ச்சியடைந்த நாடுகளிலிருந்து வளரும் நாடுகளுக்கு கொண்டு வருதல் அவசியமாகும். தாராளமயமாக்கல், உலக மயமாக்கல் மூலம் தொழில்நுட்ப மாறுதல்களை எளிதாக கொண்டு வர புதிய பொருளாதாரக் கொள்கை வித்திட்டது.

உரிம ஒப்பந்தமூலமும், கூட்டு முயற்சி மூலமும் தொழில்நுட்ப மாற்றம் பேரளவில் நடைபெற்று வருகிறது. தொழில்நுட்ப மாற்றம் கீழ்க்கண்ட முறைகளில் நடைபெறுகிறது.

*1.* தொழில்நுட்ப வல்லுனர்களை அமர்த்துதலும், பயிற்சி கொடுத்தலும்.

*2.* எந்திரங்களையும் தளவாடங்களையும் அளிப்பதில் ஒப்பந்தங்களை ஏற்படுத்துதல்.

*3.* உரிம ஒப்பந்தங்களை ஏற்படுத்துதல்.

வளரும் நாடுகளின் இயற்கை பொருளாதார சமூக நிலைகளுக்கு ஏற்ற அயல்நாட்டு தொழில்நுட்பமே தொழில்நுட்ப மாற்றத்திற்கு முக்கிய கூறுகளாக அமைகிறது.

**வாணிகமும் பொருளாதார வளர்ச்சியும்**

வாணிகத்தின் தோற்றம் பண்டமாற்று முறையிலிருந்து பணப் பொருளாதாரத்திற்கு மாறுதல் பொருளாதார வளர்ச்சிக்கு வாணிகம் ஒரு பெரும் திறவுகோள் ஆகும். வெவ்வேறு நிலைகளில் வர்த்தகம் (அ) வாணிகம் என்பது பண்டங்களின் பரிமாற்றமே ஆகும். தொன்மை வாய்ந்த வாணிப முறை பண்டமாற்று *(Barter)* முறையாகும். இதில் ஒரு வகைப் பண்டமானது மற்றொரு வகைப் பண்டங்களுடன் மாற்றிக்கொள்ளப்பட்டது. மனித இனத்தின் துவக்கக் காலக்கட்டத்தில், மனித தேவைகள் எளிமையானதாக இருந்தது. ஒவ்வொரு தனிநபரும் தனக்குத் தேவையானதைத் தானே உற்பத்தி செய்துகொண்டார். நாளடைவில் மனிதர்கள் வெவ்வேறு பணியில் வேலைக்கு அமர்ந்தார்கள். அதில் சிறப்புத் தேர்ச்சி அடைந்தவுடன் வாணிகம் நடைமுறைக்கு வந்தது. ஆரம்பத்தில், பொருட்களை பொருட்களோடு நேரிடையாக மாற்றிக் கொள்ளும் முறையான பண்டமாற்றுமுறை நிலவி வந்தது. எடுத்துக்காட்டாக, பண்டமாற்று முறையில் உணவை அதிகமாகக் கொண்டிருந்த ஒருநபர் தன்னிடம் உடை இல்லாமையால், தனது ஒரு பகுதி உணவை அதிகமாக உடை உள்ளவரிடம் மாற்றிக் கொள்கிறார். இந்த பண்டமாற்று முறையில் பல இடர்பாடுகளும், பல தடைகளும் காணப்பட்டன.

இம்முறையில் உள்ள இடர்பாடுகளில் குறிப்பிடத்தக்கது இருமுகத்தேவை பொருத்த மின்மையாகும். (*double coincidence of want)* எடுத்துக்காட்டாக, ஒருவனிடம் பசுமாடு ஒன்று இருக்கிறது அவன் அதை அரிசியுடன் மாற்றிக்கொள்ள விரும்புகிறான். அரிசியை உடைய மற்றொருவனுக்கு, ஒரு குதிரைதான் தேவைப்படுகிறதே அன்றி ஒரு பசுமாடு அல்ல, இப்படிப்பட்ட நிலையில் பரிமாற்றம் ஏற்பட இயலாது. ஏனெனில் இருமுகத் தேவை பொருத்தமின்மை அங்கே நிலவுகிறது. இந்த எளிய பண்டமாற்று முறையானது, பரிமாற்ற முறையானது எண்ணிக்கையில் குறைந்ததாகவும், எளிமையானதாகவும் இருந்தால் நல்லமுறையில் செயல்பட்டிருக்கும் பரிமாற்ற அமைப்பு வளர, வளர தொழில் மயமாகுதலினாலும், வீட்டு உற்பத்தி முறை தொழிற்சாலை அமைப்பிற்கு வழி வகுத்தது. இச்சந்தர்பத்தில் இருமுகத் தேவை பொருத்தமின்மை, பொருட்களின் பரிமாற்றத்தில் ஒரு பெரிய பிரச்சனையாக உருவெடுத்தது.

இத்துடன் வேறு சில குறைபாடுகளும், பண்டமாற்று முறையில் காணப்பட்டதால், வாணிபம் பாதிக்கப்பட்டது. இவ் இடர்பாடுகள் சேமிப்பின் மதிப்பளவு, மதிப்பின் அளவுகோல், மற்றும் நிலை மதிப்பு பற்றியதே! எனவே இப்பண்டமாற்று முறையை கைவிட்டு விட்டு ஒரு புதிய இடைப்பட்டப் பண்டத்தை

கண்டுபிடித்து அதன் மூலம் எளிதான முறையில் பொருள் விற்றுவாங்க அவசியம் ஏற்பட்டது. இவ் இடைப்பட்ட பண்டம் எல்லோரும் அறிந்த ஒன்றாகவும், எளிதாக பங்களிக்க கூடியதாகவும், பொதுவாக ஏற்றுக்கொள்ளக் கூடியதாகவும் இருத்தல் வேண்டும். ஏனெனில், அது பரிமாற்ற கருவியாக செயல்படவேண்டும். இதுவே பணம் என அழைக்கப்பட்டது.

மனித கண்டுபிடிப்புகளில் அடிப்படையானது பணமாகும். மனிதனின் மொத்த சமுதாய வாழ்க்கையில் பணமே இன்றியமையாததாகும். ஆகவே பணம், பண்டங்களின் பரிவர்தனைக்கு, இடையீட்டு கருவியாகவும் பொது மதிப்பளவையாகவும், சேமிக்கும் கருவியாகவும், பிற்கால செலுத்துகைகளுக்கான நிலை மதிப்பாகவும் செயல்படுகிறது. இவ்வாறு பண்டமாற்று முறை பணப் பொருளாதாரத்திற்கு வழிவிட்டது.

பணம் அறிமுகமானதிலிருந்து பொருளுக்கு, பொருள் நேரடிப் பரிமாற்றமுறை கைவிடப்பட்டது. புதிய முறை கொண்டுவரப்பட்டது. இப்புதிய முறையில் ஒருவரிடமுள்ள ஒரு பொருளை பணத்திற்கு விற்று அப்பணத்தைக் கொண்டு தன் விருப்பத்திற்கு ஏற்ப பிரிதொருப் பொருளை வாங்கிக் கொள்ள முடியும். ஒவ்வொரு பொருளின் மதிப்பையும் வேறொருப் பொருளைக் கொண்டு மதிப்பீடு செய்யும்போது ஏற்படும் பிரச்சினை கைவிடப்பட்டு, அப்பொருளின் மதிப்பை பணம் என்ற ஒரேப் பொருளின் வாயிலாக வெளியிடுவது எளிதானதாகும். மேலும் இருமுகத்தேவை பொருத்தமின்மை என்ற பிரச்சனையும் தீர்க்கப்படுகிறது. தனது பொருளுக்கான ஒரு நுகர்வோனை மட்டும் கண்டறிந்தால் போதுமானதாகும். அந்நுகர்வோன், விற்பனையாளனுக்கு தேவையான பொருளை வைத்திருக்க வேண்டிய அவசியமில்லை.

பணத்தை எளிதாக சேமித்து வைக்கலாம். தனது வருமானத்தில் ஒரு பங்கை எதிர்கால நுகர்விற்காக எடுத்து வைக்கலாம். இவ்வாறாக பணம் பண்டமாற்று முறையில் உள்ள அனைத்து இடர்பாடுகளையும் முழுமையாக நீக்குகின்றது. காகித பணம் அறிமுகமாவதற்கு முன் எப்பொருள் அனைவராலும் பொதுவான தேவையாக அமைகின்றதோ! அப்பொருளே பொதுவான அனுமதியுடன் பரிமாற்றுக் கருவியாக தெரிந்தெடுக்கப்பட்டது.

(எ.கா.) கரையோரப் பகுதியில் வாழ்ந்த மக்கள் சிப்பிக் கூடுகளையும், குளிர் நாடுகளில் வாழ்ந்த மக்கள் மிருகத் தோலையும், உரோமத்தையும் வெப்ப நாடுகளில் யானை தந்தம், பறவையின் இறகு மற்றும் புலிநகம் போன்றவை

பணமாக பயன்படுத்தப்பட்டது. நாகரிகமும், பொருளாதார வளர்ச்சியும் முன்னேற்றம் அடையும்போது பொன், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்கள் பணமாக பயன்படுத்தினர். இவ் உலோகப் பணம் எடுத்துச் செய்வதற்கு பல சிரமம் நிறைந்ததாகவும், ஆபத்தானதாகவும் இருந்தது. **15** மற்றும் **16**ம் நூற்றாண்டுகளில், ஐரோப்பிய வணிகர்கள் தாங்கள் பெற்றுக்கொண்ட உலோக பணத்திற்கு நிகரான 'ரசீது'களை எடுத்து செல்வது வழக்கத்தில் இருந்தது.

இவ்வாறாக உலோக பணத்திற்கு பதிலாக காகிதப் பணம் கண்டுபிடிக்கப்பட்டது. அதன்பிறகு, அந்தந்த நாட்டின் மைய வங்கி யானது பணத்தை அச்சடிப்பதில் முற்றுரிமை பெற்றது. தற்போது "சட்டப் பூர்வ பணம்" (*Legal Tender Money*) என்பது மைய வங்கியால் வெளியிடப்படும் காகிதப் பணத்தையே குறிக்கும். இவ்வாறாக வங்கியியல் வாணிப வளர்ச்சியை உள்நாட்டிலும், பிறநாடுகளோடும் பணவியல் கருவிகளாகிய மாற்றுவீதம் போன்றவற்றை பயன்படுத்தி வாணிபத்தை வளரச் செய்கிறது. வர்த்தக துறையில் இன்றைய நாட்களில் காணப்படுகிறதான பலவித வாணிப பெருக்கமானது, பணம் இன்றி நடைபெறுவது சாத்தியமல்ல என்பது குறிப்பிடத்தக்கது.

### அயல்நாட்டு வாணிபத்தின் அவசியம்

பொது மக்களுக்கு அறிமுகமான வாணிப வகை சில்லரை வியாபாரமாகும். இங்கு, கடைக்காரன், தனிநபர்களுக்கு பணத்திற்காக பொருட்களை விற்பனை செய்வான். இந்த வியாபாரம் பெருமளவில் நடத்தப்பட்டால் அது மொத்த வியாபாரம் அல்லது வாணிபம் எனப்படும். இதில், தொழிற்சாலைகள் அல்லது உற்பத்தியாளர்கள் மொத்த வியாபாரிகளுக்கு பொருட்களை விற்று, அவர்கள் அப்பொருட்களை சில்லரை வியாபாரிகளுக்கு அல்லது கடைக்காரர்களுக்கு சிறிய அளவுகளில் விற்பனை செய்வார்கள். இவ்வாறாக, பண்டங்களும் பணிகளும் ஒரு நாட்டிற்குள் வெவ்வேறு வட்டாரங்களிடையே பரிவர்தனை செய்யப்படுவதை உள்நாட்டு வாணிபம் (*Internal trade*) என்று குறிக்கப்படும். பண்டங்களும் பணிகளும் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நாடுகளோடு பரிவர்த்தனை செய்யப்பட்டு வாணிபத் தொடர்பு நிலவினால் அதனை அயல்நாட்டு வாணிபம் என்று குறிப்பிடலாம். எந்த நாடும், முழுமையாக தன்னிறைவு அடைந்ததாக இருக்க இயலாது. எனவே ஒரு நாட்டின் தேவையை சந்திக்க அயல்நாட்டு வாணிபம் மிக மிக அவசியம். எந்த ஒருப் பொருள் உற்பத்தி செய்ய இயலாமை, உற்பத்தி

செய்தாலும், உற்பத்தி செலவு அதிகரிக்கும் நிலையில் அந்நாட்டு மக்கள் அவ்வகை பொருள்களை வெளிநாடுகளிலிருந்து வாங்கி இன்பம் அடைய அயல்நாட்டு வாணிபம் உதவுகிறது. பூமி இயற்கையிலேயே, உற்பத்தி வளங்களை சமனற்ற நிலையில் பெற்றுள்ளது. நாடுகள், சீதோஷன நிலையிலும், கிடைக்கின்ற சாகுபடி செய்யும் நிலங்களும், காடுகள், சுரங்கங்கள், தாதுப்பொருள்கள், உழைப்பு, மூலதனம், தொழில்நுட்பம் மற்றும் தொழில் முனைவோரின் திறமைகள் போன்றவற்றினால் ஒன்றுக்கொன்று வேறுபட்டுள்ளது. இவ்வாறு பலவகையான வேற்றுமைகளினால் எந்த நாடும் அனைத்து பொருள்களையும் குறைந்த செலவில் தானே உற்பத்தி செய்துக் கொள்ள திறமை பெற்றதாக இல்லை.

தனிநபர்களுக்குள் வேலைவகுப்பு முறை காணப்படுவது போல, உலக நாடுகளுக்கிடையிலும் இம்முறையே பின்பற்றப்படுகின்றது. ஒவ்வொரு நாடும் எந்தெந்த பொருள்களை மிக குறைந்த உற்பத்தி செலவில், உற்பத்தி செய்ய சிறப்பு தேர்ச்சி பெற்றுள்ளதோ அப்பொருளையே, அந்நாடு உற்பத்தி செய்யும். இவ்வித பொருள்களை மற்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்துவிட்டு மற்ற நாடுகளோடு ஒப்பிடும்போது, உற்பத்தி செலவில் குறைபாடு உடைய தனக்கு தேவையான பொருள்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்து கொள்ளும். இவ்வகையான உற்பத்தி செலவில் காணப்படுகிறதான வேறுபாடுகள், பல்வேறு நாடுகளிடையே விலை பேதத்தை உண்டு பண்ணுகின்றன.

### ஒப்பீட்டு நன்மைக் கோட்பாடு
### (Theory of Comparative Advantage)

'ஒப்பீட்டு நன்மைக் கோட்பாடு' தடையில்லா வாணிபத்தின் நன்மைகளை விளக்குகிறது. தடையில்லா வாணிபத்தில், இரு நாடுகளிடையே வர்த்தகம் நடைபெறும்போது ஒரு நாடு மிகக் குறைந்த உற்பத்திச் செலவில், உற்பத்தி செய்ய சிறப்புத் தேர்ச்சி பெற்றுள்ளதோ அப்பொருளையே அந்நாடு உற்பத்தி செய்யும். மற்றொரு நாடு தன் தேவைக்கு அதனைப் பயன்படுத்திக் கொள்ள இயலும் என 'டேவிட்ரிக்கார்டோ' (அரசியல் பொளாதார கொள்கைகள் மற்றும் வரிவிதிப்பு 1817) கூறுகிறார். இங்கு, உற்பத்திச்செலவு என்பதைவிட, எவ்வளவு எளிதாக நாடுகள் பல பண்டங்களை உற்பத்திச்செய்ய இயலும் என்பதை 'விகித அளவில்' ஒப்பிடுதல் அவசியம். இவ்வாறு, நாடுகள் தாங்கள் திறமை பெற்ற பண்டங்கள் உற்பத்தியில் சிறப்பு கவனம் செலுத்தும்போது, இப்பண்டங்களை ஏற்றுமதி செய்துவிட்டு

பிறநாடுகளிலிருந்து உற்பத்திச் செலவு குறைவாக உள்ள பண்டங்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்து கொள்ளலாம். என ஒப்பீட்டு நன்மைக் கோட்பாடு விளக்குகிறது.

*ஒப்பீட்டு நன்மைக் கோட்பாட்டினை பின்வருமாறு விளக்கலாம்.* *A* மற்றும் *B* எனும் இருநாடுகள் தங்கள் பற்றாற்குரை வளங்களைக்கொண்டு 'உணவு' மற்றும் 'உடை' ஆகிய இரு பண்டங்களை உற்பத்திச் செய்வதாகக் கொள்வோம். `*A*' நாட்டில் 0.50 அலகுகள் துணி விலை '2' அலகுகள் உணவு விலைக்கு சமமாகும் எனக் கொள்வோம். `*B*' நாட்டில் உணவின் விலையானது **1.67** அலகு துணிக்கு சமமாகும். மேலும் துணியின் விலையானது **0.60** அலகு உணவாகும். இங்கு `*A*' நாடானது 'உணவு உற்பத்தியில்' ஒப்பீட்டு நம்மையும் `*B*' நாடானது துணி உற்பத்தியில் ஒப்பீட்டு நன்மையையும் பெற்றுள்ளதைக் காணலாம். எனவே, வர்த்தக உறவு முறையில் '*A*' நாடு, உணவு உற்பத்திக்கு தனது வளங்களைப் பயன்படுத்துவதன் மூலமூம் '*B*' நாடு துணி உற்பத்திக்கு தனது வளங்கைப் பயன்படுத்துவதன் மூலமும் உணவு மற்றும் 'துணி' விலைகள் மிகக் குறைந்த அளவில் இருப்பதைக் கண்கூடாகக் காணமுடியும்.

எனவே, இவ் ஒப்பீட்டு நன்மைக் கோட்பாடு, தடையில்லாவாணிபம் அனைத்து நாடுகளுக்கும் நலன் பயக்கும் எனக்கூறுகிறது.

**பொருளாதார வளர்ச்சியில் அயல்நாட்டு வாணிபத்தின் பங்கு**

கடந்த காலங்களில் அயல்நாட்டு வாணிபம், "வளர்ச்சியின் இயந்திரம்" ஆக செயல்பட்டது. இன்றைய காலங்களில் வெளிப்புற வளர்ச்சியையே அடிப்படையாக கொண்ட யுக்தியை பின்பற்றும் ஆசியாவின் புதிய தொழில்மயமாக்கும் பொருளாதார நாடுகள் பின்பற்றியதால் குறைந்த வளங்களுடனும் வளர்ச்சி குன்றியும் ஏழை நாடுகளாக உள்ள அந்நாடுகள், தமது இடர்பாடுகளை மேற்கொள்ள அயல்நாட்டு வாணிபம் துணைபுரிகிறது. அயல்நாட்டு வாணிபம் பொருளாதார வளர்ச்சிக்கு கீழ்க் காணுமாறு பல வழிகளில் துணை புரிகிறது.

1. வளர்ச்சிக்கு அடிக்கோலும், மூலதன பண்டங்களின் இறக்குமதியை பெறுவதற்குரிய வழிமுறைகளைக் கண்டறிகிறது.

2. தொழில்நுட்ப பரிமாற்றத்திற்கு உதவுவதுடன், நாடுகளுக்கிடையே பரவலாக்கப்படவும் உற்பத்திக் காரணிகளின், உற்பத்தி திறன் அதிகரிக்க அனுமதிக்கிறது.

*3.* இயக்க மாற்றத்தை *(Dynamic Changes)* ஏற்படுத்தும் அழுத்தத்தை உருவாக்குவதன் வாயிலாக *i)* இறக்குமதியிலிருந்து ஏற்படும் போட்டி அழுத்தம். *ii)* ஏற்றுமதி சந்தைக்காக ஏற்படும் போட்டி அழுத்தம் மேலும் *iii)* உற்பத்தி வளங்களை மிக நன்றாக பங்கீடு செய்துக்கொள்ளுதல்.

*4.* நாட்டின் திறமையை முழுமையாக உபயோகிக்க, சிக்கன அளவுகளை (*Economics of Scale)* அதிக அளவில் பயன்படுத்த, உள்நாட்டுத் தேவையினின்று உற்பத்தி முறை அமைப்பை வேறு வகையாக்க புதிய தொழில்நுட்பத்தை ஏற்றுக் கொள்ள அவற்றை பெருமளவில் அனைவரும் அறியச்செய்ய ஏற்றுமதிகள் அனுமதிக்கின்றன. இதன் வாயிலாக உள்நாட்டு தொழிலில் விலை ஏற்றத்தினை ஏற்படுத்தாமல், இலாபநிலையை அதிகரிக்க உதவுகிறது.

*5.* அயல் நாட்டு வாணிபம் உழைப்பாளரின் நலனை நான்கு வழிகளில் உயர்த்துகிறது.

*1.* ஏற்றுமதியின் அதிகரிப்பால், உழைப்பாளர்களின் கூலி உயர்கிறது

*2.* மலிவான இறக்குமதியால், உழைப்பாளிகள் நுகர்வோராகவும் இருப்பதால் வாணிபம் அவர்களுக்கு உடனடி இலாபத்தை தருகிறது.

*3.* உழைப்பாளிகள், உற்பத்தி செய்யும் பண்டங்களின் மதிப்பு அதிகரிப்பால், அதிக உழைப்பாளர்கள் கூடுதலான உற்பத்திதிறனை பெற இயலுகிறது.

*4.* வாணிபத்தின் மூலமாக தொழில்நிறைந்த நாடுகளில் இருந்து தொழில் நுட்பமானது குறைந்த வளர்ச்சியடைந்த நாடுகளுக்கு பரிமாற்றப்படுகிறது. இத் தொழில்நுட்பமாற்றம் திறமையான தொழிலாளிகளுக்கு பேருதவியாக உள்ளது.

*6.* அநேக வளர்ந்து வரும் நாடுகளின் வெளிப்படையான வாணிபம் ஏழ்மைநிலையைக் குறைக்கிறது.

*21*-ம் நூற்றாண்டில் வளர்ந்துவரும் நாடுகள் பொருளாதார வளர்ச்சியடைய, அயல்நாட்டு வாணிபம் கீழ்கண்டவாறு சாதகமான நிலைமைகளை ஏற்படுத்துகிறது. அவைகள் பின்வருமாறு

*1.* உலகமயமாதல் மூலம் பெரும்வாரியான பண்டங்களும், பணிகளும் நாடுகளுக்கிடையே பகிர்ந்தளிக்கப்படுகிறது.

*2.* உற்பத்தி நடவடிக்கைகள் தொழில்சார்ந்த நாடுகளிலிருந்து வளரும் நாடுகளுக்கு தொடர்ச்சியான மறுபகிர்வு செய்வதனால் பண்டங்களின் வர்தகத்திற்கு மட்டுமின்றி, வர்த்தகம் செய்யகூடும் பணிகளுக்கும் வாய்ப்பளிக்கிறது.

*3.* வாணிபம், உலக மயமாதலின் மற்றொரு அடிப்படைக் கூறாகிய அதாவது பன்னாட்டு உற்பத்தி வலையமைப்புடன் பின்னிப் பிணைந்துள்ளது.

*4.* வாணிப வளர்ச்சியானது நீண்டகாலம் நிலைக்கக்கூடிய பன்னாட்டு நிறுவனங்களுக்கு ஊன்றுக்கோலாய் இருக்கிறது. உலக வர்த்தக நிறுவனம் (*WTO*) ஆனது சுங்கவரி, வாணிபம் குறித்த பொது உடன்பாடு (*GATT*) ஆகியவற்றின் அடிப்படையில் அமைக்கப்பட்டு சாதகமான வர்த்தக சூழ்நிலையை உருவாக்குவதன் மூலம் பலதரப்பட்ட பண்டங்களையும், பணிகளையும் பரிவர்தனை செய்துக் கொள்ள ஊன்றுக்கோலாய் உள்ளது.

*5.* சமீப காலங்களில் வளர்ந்துவரும் நாடுகளுக்கான உலக வர்தகத்தில் பங்கேற்காமல் இருக்க விதிக்கப்பட்ட தடைகள் தளர்த்தப்பட்டன. குறைவான தடைகள் வளர்ந்துவரும் நாடுகளில் ஒரு கிளர்ச்சியூட்டும் மாற்றங்களை ஏற்படுத்தியது. அவைகள் ஏற்றுமதி பண்டங்களை சார்ந்திருப்பதை விடுத்து உற்பத்தி மற்றும் பணிகள் மீது அதிகமாக சார்ந்திருக்க செய்தது. இத்துடன், வளர்ந்துவரும் நாடுகளுக்கு ஏற்றுமதிச் செய்தல் அதிக முக்கியத்துவம் பெற்றது.

**பன்னாட்டு நிதி நிறுவனம் (International Monetary Fund)**

பன்னாட்டு நிதி நிறுவனத்தின் தோற்றம் உலக பொருளாதார ஒற்றுமை வரலாற்றில் ஒரு முக்கிய திருப்பம் எனலாம். இந்நிதி நிறுவனத்தை தோற்றுவிக்க பிரிட்டன் உட்ஸ் மாநாட்டில் முடிவு எடுக்கப்பட்டு, 1947 மார்ச் மாதம் தொடங்கப்பட்டது.

பன்னாட்டு நிதி நிறுவனத்தின் ஒப்பந்த பிரிவின் நோக்கங்களாவன.

*1.* உலக நாடுகளிடையே நிதி தொடர்பான ஒற்றுமையை மேம்படுத்துதல்.

*2.* அயல்நாட்டு நாணய மாற்று விகிதத்தை (*Foreign Exchange rate)* நிலைப்படுத்துதல்.

*3.* நாணய மாற்று கட்டுப்பாடுகளை நீக்குதல்.

*4.* பன்முக வணிகம் (*multilateral trade)* மற்றும் செலுத்துகைகளுக்கு ஒரு அமைப்பை ஏற்படுத்துதல்.

*5.* அயல்நாட்டு வாணிப செலுத்து நிலையில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளை சமன்செய்தல்.

**பன்னாட்டு நிதி நிறுவனத்தின் முக்கியப் பணிகளாவன**

*1.* குறுகிய கால கடன் வழங்கும் நிறுவனமாக செயல்படுகிறது.

*2.* நாணய மாற்று விகிதத்தை முறைப்படுத்த போதுமான வழி முறைகளை கண்டறிகிறது.

*3.* அனைத்து உறுப்பு நாடுகளின் நாணயங்களையும் இது பெற்றிருப்பதால், எந்த ஒரு நாடும் தேவையான நாட்டின் நாணயத்தைக் கடனாக பெறலாம்.

*4.* இது அந்நியச் செலவாணிய கடனாக அளிக்கும் ஒரு நிறுவனமாகும். இது நடப்புப் பரிவர்த்தனைக்கு கடன் அளிக்குமே தவிர மூலதனப் பரிவர்த்தனைக்கு கடன் அளிக்காது.

*5.* உறுப்பு நாடுகளின் நாணயத்தின் முகமதிப்பை மாற்றுவதற்கான வழிமுறைகளை அளிக்கும்.

*6.* உலக நாடுகளுக்குத் தேவையான ஆலோசனை இது வழங்கும்.

*7.* அயல்நாட்டு வாணிப செலுத்து நிலையில் உள்ள பிரச்சனைகளையும் மற்றும் இதரபிரச்சணைகளையும் தீர்க்க உறுப்பு நாடுகளுக்கு பொருளியல் வல்லுனர்களை அனுப்பி உதவி செய்கிறது.

*8.* பன்னாட்டு நிதி நிறுவனம், நிதி நிர்வாகம் தொடர்பான ஆராய்ச்சிகளை மேற்கொண்டு, கட்டுரைகளையும் நிதிநிலை மற்றும் இதர வளர்ச்சிகளையும் அச்சிட்டு வெளியிடுகிறது.

## பன்னாட்டு நிதி நிறுவனத்தின் அமைப்புமுறை

பன்னாட்டு நிதி நிறுவனத்தில் அதிக அதிகாரம் பெற்றது ஆளுநர்கள் குழுவாகும். இதில் நிர்வாகக் குழுவும், ஒரு மேலாண்மை இயக்குநரும் மற்றும் அலுவலர்களும் இருப்பார்கள். இந்நிறுவனத்தின் தலைநகரம் அமெரிக்காவில் வாஷிங்டனில் செயல்படுகிறது. ஆளுநர் குழு மற்றும் நிர்வாகக் குழுவால் தற்காலிக மற்றும் நிலைக்குழுக்கள் நியமிக்கப்பட்டு செயல்படுகின்றன. நிதி சம்பந்தம்பட்ட முடிவுகளை ஆளுநர் குழுவும், நிர்வாகக்குழுவும் மேற்கொள்ளும். இதன்முடிவுகளை பன்னாட்டு நிறுவனமும் மற்றும் உறுப்புநாடுகளும் ஏற்றுச் செயல்பட வேண்டும்.

## பன்னாட்டு நிதி நிறுவனத்தின் செயல்பாடுகள்

உறுப்பு நாடுகளிடமிருந்து பெறும் பங்குத் தொகை, தங்கத்தை விற்பதன் மூலம் பெறும் தொகை உறுப்பு நாடுகளிடமிருந்து பெறும் கடன்கள் ஆகியவை இந்நிறுவனத்தின் மூலதனமாகும். உறுப்பு நாடுகள் நிதி நிறுவனத்தில் சேரும் பொழுது அவை செலுத்த வேண்டிய பங்குத் தொகை, வாக்குரிமை, பெறக்கூடிய கடன்தொகை, ஆகியவை வரையறுக்கப் படுகின்றன. நிறுவனம் உருவாக்கப்பட்டபோது ஒவ்வொரு உறுப்பு நாடும் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட பங்கில் 25% தங்கமாகவும் மீதி 75% சதவிகிதத்தை நாடுகளின் சொந்த நாணயமாகவும் செலுத்தலாம்.

## நிறுவனத்தில் கடன் பெறும் வசதி

இதன் நிதி ஆதாரம், உறுப்புநாடுகளின் சந்தாத்தொகையிலிருந்தும், இந் நிறுவனத்தின் தங்கத்தை விற்பதன் மூலமும், தொழில் மயமாக்கப்பட்ட நாடுகளின் மையவங்கிகள் மற்றும் தனியார் நிறுவனங்களிடமிருந்து பெற்ற கடனிலிருந்தும் கிடைக்கிறது.

## நிறுவனத்தின் கடன் வழங்கும் வசதி

உறுப்பு நாடுகளின் அயல்நாட்டு செலுத்து நிலையில் நடப்புக் கணக்கில் பாதக நிலை ஏற்படுமாயின் அதை சரி செய்யத் தேவையான கடன் உதவியை இந்நிறுவனம் வழங்குகிறது. ஒரு உறுப்பு நாடு தனக்கு நிர்ணயிக்கப்பட்ட பங்களவைவிட குறைவான பணத்தை இருப்பில் வைத்திருந்தால் அந்த வேறுபாடு ரிசர்வ் டிரென்ச் (*Trench*) `சமன் செய்யும்' இருப்புத் தொகை என்று பெயர். இதிலிருந்து 25 சதவிகிதத்தை வட்டியில்லா கடனாகப் பெறலாம்.

ஆனால் அக்கடனை 3 அல்லது 5 வருடங்களுக்குள் திரும்ப செலுத்தவேண்டும் மீதமுள்ள தொகையை நான்கு முறையாக 100 சதவிகிதம்வரை சமன் செய்யும் இருப்புத் தொகையிலிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

**மற்ற கடன் வசதிகள்**

1. மொத்த இருப்பு நிதியாக்க வசதி (*Buffer Stock Financing)*
2. விரிவாக்கப்பட்ட நிதி வசதி (*EFF)*
3. கூடுதல் நிதியாக்க வசதி (*SFF)*
4. அமைப்பு மாற்ற நிதியாக்க வசதி (*SAF)*
5. உயர்த்தப்பட்ட அமைப்பு மாற்ற சரிசெய் வசதி (*ESAF)*
6. ஈடுகட்டும் மற்றும் எதிர்பாரா சிக்கல் தவிர்ப்பு நிதியாக்க வசதி (*CCFF)*
7. திட்டமிட்ட அல்லது முறையான மாறுதலுக்கான நிதி வசதி (*STF)*
8. அமைப்பு மாற்ற சரிசெய்ய அவசரக் கடன் (*ESAL)*
9. எதிர்பாராக் கடன் (*CCL)*

மாறும் உலகப் பொருளாதார நிலைகளுக்கு ஏற்ப இந்நிதி நிறுவனம் நெகிழ்வுத் தன்மை கொண்டதாக இருக்கும். இதன் பயனும், வெற்றியும் உலக உறுப்பு நாடுகளைப் பொறுத்து அமையும். உறுப்பு நாடுகளின் எண்ணிக்கை 1947–ல் 44 ஆக இருந்தது. *2000*ல் 182 ஆக உயர்ந்தது.

**அயல்நாட்டு வாணிப நிலை**

உலகச் சந்தையில் வலிமையுள்ளவனே நிலைக்கமுடியும் என்பதாலும், பொருளாதார முன்னேற்றம் அடையவேண்டும் என்பதற்காகவும் உலக வாணிபம் முக்கியமானதாகக் கருதப்படுகிறது. வளர்ந்து வரும் நாடுகளுக்கு அயல்நாட்டு வாணிபம் மிக மிக முக்கியமானதாகும். அயல்நாட்டு வாணிபத்தின் போக்கு, நாட்டின் முன்னேற்ற விகிதத்தை குறிக்கும். அயல்நாட்டு வாணிபத்தின் போக்கை கீழ்க்கண்ட பகுப்பாய்வின் மூலம் அறியலாம்.

1. வாணிபத்தின் அளவு

2. வாணிபத்தின் பகுதிகள்

3. வாணிபத்தை நெறிப்படுத்துதல்

**வாணிபத்தின் அளவு**

இது உலக நாடுகளின் பரிவர்த்தனையின் அளவைக் குறிக்கும். அதிக எண்ணிக்கையிலான பண்டங்கள் இப்பரிவர்த்தனையில் அடங்கும். அனைத்து பண்டங்களின் பணமதிப்பை தொகுப்பதன் மூலம் வாணிபத்தின் அளவை அளக்க முடியும். எனவே இதனை வாணிப மதிப்பு என்கிறோம். வாணிப மதிப்பின் நிலை, நாட்டை இயக்கும் அடிப்படைச் சக்திகளைக் காட்டும். இருப்பினும் வாணிப மதிப்பின் மாற்றங்களை அளவிடுதல் அவசியமாகும். அதோடு தொடர்புடைய மொத்த உள்நாட்டு உற்பத்தியில் ஏற்றுமதி இறக்குமதியின் அளவு 1) உலக வாணிபத்தில் ஏற்றுமதி இறக்குமதியின் பங்குகளைப் பொறுத்து வாணிபத்தின் மதிப்பு அமையும். 2) மொத்த உள்நாட்டு உற்பத்தியில் ஏற்றுமதி, இறக்குமதியின் பங்கு, வாணிபத்தின் தன்மை, அணுகுமுறையைக் காட்டும். மொத்த உள்நாட்டு உற்பத்தியில் ஏற்றுமதியின் விகிதம், அந்நாட்டின் ஏற்றுமதியில் அதன் அளிப்பின் சக்தியைக் காட்டும். இதற்கு 'சராசரி ஏற்றுமதி நாட்டம்' என்று பெயர். மொத்த உள்நாட்டு உற்பத்தியில் இறக்குமதியின் விகிதம் அந்நாட்டின் சராசரி இறக்குமதி நாட்டத்தைக் குறிக்கும்.

உலக வர்த்தகத்தில் ஒரு நாட்டின் ஏற்றுமதியின் பங்கு அந்நாட்டின் முக்கியத்துவத்தைக் குறிக்கும். உலகச் சந்தையில் போட்டியாளர்களிடையே சந்தையின் வலிமையை ஏற்றுமதியின் அளவு காட்டுகிறது. ஏற்றுமதியின் மதிப்பில் ஏற்படும் மாற்றங்களை இறக்குமதியின் மதிப்பை ஏற்படும் மாற்றங்களோடு ஒப்பிடலாம். இவ்விரண்டு மாறிகளுக்கிடையேயான தொடர்பை வாணிப உறவுமுறை (*Terms of Trade)* அதாவது எந்த விகிதத்தில் ஏற்றுமதியும் இறக்குமதியும் பரிவர்த்தனை செய்யப்படுகிறது என்பதாகும். இறக்குமதியைவிட ஏற்றுமதி மதிப்பு அதிகமாக இருந்தால் வாணிப நிலை, சாதகமானதாகும். ஏற்றுமதியின் மதிப்பிற்கு ஏற்ப அதிகம் இறக்குமதி செய்யலாம். மாறாக ஏற்றுமதி இறக்குமதியில் சாதகமற்ற நிலை இருந்தால் அதிகமாக ஏற்றுமதி செய்தல் வேண்டும்.

## இந்தியாவின் வெளிநாட்டு வாணிப நிலை

இந்திய வாணிபம் விரிவடைந்துள்ளது. 1980ல் மொத்த உள்நாட்டு உற்பத்தியில் வாணிபத்தின் விகிதம் 13%. ஆகும். தற்போது இது 20 சத விகிததிற்கு உயர்ந்துள்ளது. இந்த உயர்வானது ஏற்றுமதி மற்றும் இறக்குமதி ஆகியவற்றின் பங்களிப்பினால் ஏற்பட்டது.

## ஏற்றுமதியின் போக்கு

கடந்த 50 ஆண்டுகளில் இந்தியாவின் மொத்த ஏற்றுமதியானது 300 மடங்கு அதிகரித்துள்ளது. 1950–51ல் 606 கோடியாக இருந்தது. 2003–04ல் 2,91,582 ஆக உயர்ந்துள்ளது. இருப்பினும் இவ்வதிகரிப்பு ஆண்டு முழுவதும் சீராக உயரவில்லை. *1965-66*க்கு முன்பு, இந்தியாவின் எற்றுமதியின் வேகம் குறைவு. *1950-51*ல் நிகர நாட்டு உற்பத்தியில் 6.8% சதவிகிதமே ஏற்றுமதியாகும். இது 1965–66ல் 3.9 சதவிகிதமாக குறைந்தது இதிலிருந்து மற்ற துறைகளைவிட ஏற்றுமதி துறை மிகவும் பின்தங்கிவிட்டது என்பது தெளிவாகிறது. மொத்த உலக ஏற்றுமதியில் இந்தியாவின் பங்கு 1950–51ல் 2.2 சதவிகிதமாக இருந்தது 1965ல் 1.1 சதவிகிதமாக குறைந்தது 1965–66க்கு பிறகு உள்நாட்டு விலை நிலவரத்திற்கும் வெளிநாட்டு விலை நிலவரத்தையும் ஒருங்கிணைக்க நாணய மதிப்புக்குறைப்பு செய்யப்பட்டது. இதற்குப்பிறகு ஏற்றுமதியானது மெதுவாக உயர ஆரம்பித்தது. 1972–73ல் சர்க்கரை, இரும்பு, எஃகு, பழங்கள், காய்கறிகள் மற்றும் உணவுப் பொருட்கள் இவற்றில் ஏற்றுமதியில் ஏற்பட்ட உயர்வு காரணமாக மொத்த ஏற்றுமதியில் ஒரு திருப்பம் காணப்பட்டது.

தளர்த்தப்பட்ட இறக்குமதிக் கொள்கையினால் 1986–87ல் நாட்டின் வாணிபத்தில் ஒரு நல்ல திருப்பம் ஏற்பட்டது. இதனால் ஏற்றுமதியின் மதிப்பு ரூபாய் மதிப்பில் ஆண்டு சராசரி உயர்வு 25 சதவிகிதத்தை விட அதிகமாக உள்ளது.

*1996-97*ல் ஏற்றுமதியின் மதிப்பு குறையத் தொடங்கியது. 1999–2000ல் ஏற்றுமதியின் மதிப்பு விரைவாக உயரத் தொடங்கியது. 2000–01ல் ஏற்றுமதி 21% வளர்ச்சியடைந்தது. ஆனால் உலக உற்பத்தி குறைவு, உலகத் தேவைக்குறைவும் ஏற்றுமதியின் வளர்ச்சி விகிதத்தை குறைத்தது. உலக பண்டங்களின் விலை உயர்வும், உள்நாட்டு உற்பத்தித் துறையின் மீட்சியும், பணமதிப்புக் குறைப்பும், பிற ஏற்றுமதியை ஊக்குவிக்கும் முறைகளும்,

ஏற்றுமதியின் அளவானது *2002-03*ல் 20.34 சதவிகிதத்திற்கு உயர்ந்தது. இவ்வுயர்வு 2003–04வரை நிலையாக காணப்பட்டது.

சுருக்கமாக கூறினால் இந்தியாவின் ஏற்றுமதி கடந்த 35 வருடங்களில் ஏற்ற இறக்கங்களுடன் காணப்பட்டது. நாட்டு வருமானத்தில் ஏற்றுமதியின் பங்கு பாராட்டப்படத்தக்க அளவில் உயர்ந்து காணப்பட்டது. ஆனால் உலக வர்த்தகத்தில் இதன் பங்கு குறைவாகக் காணப்பட்டது.

## வாணிபத்தின் பகுதிகள் மற்றும் வாணிபத்தை நெறிப்படுத்துதல்

பண்டங்கள், பணிகள் ஏற்றுமதி, இறக்குமதி பற்றியது வாணிப பகுதிகள் எனப்படும். அல்லது ஒரு நாட்டின் பண்டங்களின் ஏற்றுமதி, இறக்குமதியைப் பற்றியதாகும். ஆகவே இது நாட்டின் அமைப்பு நாட்டு முன்னேற்றத்தின் அளவு பற்றியது. வளரும் நாடுகள் கச்சாப்பொருட்கள், வேளாண்மைப் பொருட்கள், இடைநிலைப் பண்டங்கள் ஆகியவற்றை ஏற்றுமதி செய்கின்றன. வளர்ச்சியடைந்த நாடுகள் முடிவடைந்த பண்டங்கள், இயந்திரங்கள், தளவாடங்களையும், தொழில் நுணுக்கங்களையும் ஏற்றுமதி செய்கின்றன.

`வாணிபத்தை நெறிப்படுத்துதல்' என்பது யாரிடமிருந்து இறக்குமதி செய்யப்பட்டது, யாருக்கு ஏற்றுமதி செய்யப்படுகிறது என்பதைப் பற்றி பயிலுவதாகும்.

## இந்தியாவின் இறக்குமதி

இந்தியாவில் இறக்குமதி மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. அவையாவன. 1. மூலதனப் பண்டங்கள், 2. கச்சாப் பொருட்கள் 3. நுகர்வுப் பண்டங்கள்

### 1. மூலதனப் பண்டங்களின் இறக்குமதி

உலோகங்கள், இயந்திரங்களும் தளவாடங்களும், இதர சாதனங்கள், போக்குவரத்து சாதனங்கள், மற்றும் தொலைத் தொடர்பு சாதனங்கள் முதலியன மூலதனப் பண்டங்களாகும். இப்பண்டங்கள் தொழிற்துறை வளர்ச்சிக்கு மிக முக்கியமானதாகும். 1960–61ல் ரூ.356 கோடியாக இருந்த இறக்குமதிப் பண்டங்களின் அளவு 1997–98ல் ரூ.26,532 கோடியாக அதிகரித்துள்ளது.

### கச்சாப் பொருட்கள் மற்றும் இடைநிலைப் பண்டங்களின் இறக்குமதி

பருத்தி, சணல், உரம், இரசாயனப் பொருட்கள், கச்சா எண்ணெய் முதலியன இதில் அடங்கும். நாட்டின் பொருளாதார முன்னேற்ற செயல்பாடுகளுக்கு அதிக எண்ணிக்கையிலான கச்சாப் பொருட்கள் மற்றும் இடைநிலைப் பண்டங்களை இறக்குமதி செய்ய வேண்டி உள்ளது. இது 1960–61ல் ரூ.527 கோடியாக இருந்தது. *1985-86*ல் ரூ.13,966 கோடியாக அதிகரித்துள்ளது. கச்சா எண்ணெய், பெட்ரோல், உராய்வு எண்ணெய் (மசகு எண்ணெய்) ஆகியன பெட்ரோலியப் பண்டங்களில் அடங்கும். இப்பண்டங்களின் இறக்குமதி அதிகரித்துக் கொண்டே செல்கிறது. 1960–61ல் இறக்குமதிப் பண்டங்களின் அளவு ரூ.69 கோடியிலிருந்து 1997–98ல் ரூ.30,538க்கு உயர்ந்துள்ளது. மொத்த இறக்குமதியில் பெட்ரோலியப் பண்டங்களின் அளவு மட்டும் 23%ஆக உள்ளது. உரங்கள் வேளாண்மைத் தொழிலுக்கு முக்கியமான உள்ளீடு ஆகும். இரசாயனப் பொருட்கள் தொழில் வளர்ச்சிக்கு முக்கிய உள்ளீடு ஆகும். இந்தியாவில் இப்பண்டங்களின் இறக்குமதியும் தொடர்ந்து அதிகரித்து வருகிறது. 1960–61ல் இப்பண்டங்களின் இறக்குமதி ரூ.88 கோடியாக இருந்தது. 1997–98ல் ரூ.3755 கோடியாக அதிகரித்துள்ளது.

### நுகர்வுப் பண்டங்கள் இறக்குமதி

உணவுப் பொருட்கள், மின் சாதனங்கள், மருந்து வகைகள், காகிதம் ஆகியவற்றின் இறக்குமதியும் இதில் அடங்கும். 3வது ஐந்தாண்டு திட்டம் வரை இந்தியா உணவுப் பண்டங்கள் உற்பத்தியில் கடுமையான பற்றாக்குறையை எதிர்நோக்கியது. இதன் விளைவாக இந்தியா, அதிக அளவில் உணவுப் பண்டங்களை இறக்குமதி செய்ய வேண்டியிருந்தது. *1960-61*ல் உணவுப் பண்டங்களின் இறக்குமதி 3748 ஆயிரம் டன் (ரூ.181 கோடி) ஆகும். 1997–98ல் இது 1399 ஆயிரம் டன்னாக அதிகரித்தது. தற்போது உணவுப் பொருள் உற்பத்தியில் இந்தியா 'தற்சார்பு' அடைந்துள்ளது.

### இந்திய இறக்குமதியின் வழி முறைகள்

திட்ட காலத்தில், இந்தியாவின் இறக்குமதியில் பலவகையான மாற்றங்கள் ஏற்பட்டன. அதில் சில முக்கிய கருத்துக்கள் பின்வருமாறு :

பொருளாதார திட்டமிடுதலின் துவக்க காலத்தில், தேர்ந்தெடுத்த சில நாடுகளிலிருந்து மட்டுமே நாம் இறக்குமதி செய்தோம். ஆனால் தற்போது

இந்நிலை மாறியுள்ளது. உலகின் பல நாடுகளிலிருந்தும் பல்வேறுபட்ட பண்டங்கள் மற்றும் பணிகளை நாம் இறக்குமதி செய்கிறோம். இயந்திரங்கள் மற்றும் தளவாடங்களை வாங்குவதில் முக்கியமாக நாம் (*OECD)* பொருளாதார ஒற்றுமை மற்றும் முன்னேற்ற அமைப்பு நாடுகளையும் கிழக்கு ஐரோப்பிய நாடுகளையும் சார்ந்துள்ளோம். உணவுப் பொருள்கள் மற்றும் பெட்ரோலியப் பண்டங்கள் அளிப்பில் நாம் (*OPEC)* எண்ணெய் உற்பத்தி மற்றும் ஏற்றுமதி அமைப்பு நாடுகளைச் சார்ந்துள்ளோம். *OECD* நாடுகள் இறக்குமதியின் பெரும் பகுதியை நமக்கு அளிக்கின்றன. 1997–98ல் மொத்த இறக்குமதியான ரூ.1,51,553 கோடியில் ரூ.75,593 கோடி இந்நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டன. இது மொத்த இறக்குமதியில் 49.9% ஆகும். அமெரிக்கா, பெல்ஜியம், ஜெர்மனி, ஜப்பான் மற்றும் பிரிட்டன் முதலியன இறக்குமதிப் பண்டங்களை வழங்கும் முக்கிய நாடுகள் ஆகும்.

### இந்தியாவின் ஏற்றுமதியின் தன்மை

இந்திய ஏற்றுமதியானது இரு பகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. 1) பழமையான இனங்களின் ஏற்றுமதி. 2. பழமை சாராத இனங்களின் ஏற்றுமதி.

### பழமையான இனங்களின் ஏற்றுமதி

தேனீர், காப்பி, சணல், சணல் பொருட்கள், இரும்புத் தாது, வாசனைப் பொருட்கள், விலங்குகளின் தோல், பருத்தி, மீன், மீன் பண்டங்கள், கனி வளங்கள், முதலியன இவ்வினங்களில் அடங்கும். திட்ட துவக்க காலங்களில், மொத்த ஏற்றுமதியில், 80% இவ்வினங்களாகும். இவ்வினங்களின் பங்கு மெதுவாகக் குறைந்து வருகிறது. மாறாக, பழமை சாராத இனங்களின் பங்கு அதிகரித்துள்ளது. தற்போது பழமையான இனங்களின் பங்கு மொத்த ஏற்றுமதியில் 18.8% ஆகும்.

### பழமை சாராத இனங்கள்

சர்க்கரை, பொறியியல் பண்டங்கள், இரசாயனப் பண்டங்கள், இரும்பு, எஃகு, மின்சாதனப் பொருட்கள், தோல் பண்டங்கள், கற்கள் மற்றும் ஆபரணங்கள் இந்த இனங்களின் ஏற்றுமதியில் அடங்கும். சமீபகாலமாக ஏற்றுமதியின் தன்மையில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டுள்ளது. உலகிலுள்ள பல நாடுகளுக்கும், நாம் பழைமை சாராத இனங்களின் பொருட்களை ஏற்றுமதி செய்கிறோம். இந்தியாவின் மொத்த ஏற்றுமதியில் இவ்வினங்களின் பங்கு மெதுவாக அதிகரித்துள்ளது. அதே நேரத்தில் சில

வருடங்களாக கீழ்நோக்கிச் செல்லும் போக்கு காணப்படுகிறது. இம்மாற்றங்களில் சிலவற்றை காண்போம்.

*(i)* மொத்த ஏற்றுமதியில் 1996–97ல் 20.4% இருந்த வேளாண்மை மற்றும் அது சார்ந்த பொருட்களின் ஏற்றுமதி, 1999–2000ல் *18.8%*மாக குறைந்தது.

*(ii)* தாதுக்கள் மற்றும் கனி வளங்களின் பங்கு 1996–97ல் 3.5%மாக இருந்தது. 1999–2000ல் 3%மாக குறைந்துள்ளது.

*(iii)* உற்பத்திப் பண்டங்களின் பங்கு 1996–97ல் 73.4%மாக இருந்தது. *1999-2000*ல் 75.7%மாக உயர்ந்துள்ளது.

*(iv)* கச்சா மற்றும் பெட்ரோலியப் பண்டங்களின் அளவு 1996–97ல் *1.4%* இருந்தது. 1999–2000ல் 1.0%மாக குறைந்துள்ளது.

*(v)* மற்ற இனங்களின் ஏற்றுமதி 1996–97ல் 1.2%மாக இருந்தது. 1999–2000ல் *1.3%*மாக உயர்ந்துள்ளது.

**இந்திய ஏற்றுமதியின் போக்கு**

திட்ட காலத்தில், நாம் ஏற்றுமதி செய்யும் நாடுகளில் பல மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன.

தற்போது நாம் வளர்ச்சியடைந்த நாடுகள் உட்பட 180 நாடுகளுக்கு, ஏற்றுமதி செய்கிறோம். நமது ஏற்றுமதியின் பெரும் பங்கு கீழ்க்கண்ட நாடுகளுக்கு அனுப்பப்படுகிறது.

*(1) (OECD)* பொருளாதார ஒற்றுமை மற்றும் முன்னேற்ற அமைப்பு நாடுகள்: (பெல்ஜியம், பிரான்சு, ஜெர்மனி, இங்கிலாந்து, வட அமெரிக்கா, கனடா, அமெரிக்கா, ஆஸ்டிராலியா, மற்றும் ஜப்பான்) மொத்த ஏற்றுமதியில் 1990–91ல் 53.5%மாக இருந்தது *1999-2000*ல் 55.7%மாக அதிகரித்துள்ளது.

*(2) (OPEC)* எண்ணெய் உற்பத்தி மற்றும் ஏற்றுமதி செய்யும் நாடுகள்: (ஈரான், ஈராக், குவைத், சவுதி அரேபியா) 1990–91ல் மொத்த ஏற்றுமதியில் 5.6%மாக இருந்த நமது ஏற்றுமதியின் பங்கு 1999–2000ல் *10%* ஆக அதிகரித்துள்ளது.

*(3)* கிழக்கு ஐரோப்பிய நாடுகள் : (*GDR)* ஜெர்மனி, ருமேனியா, ரஷ்யா) **1990–91ல் 17.9%** ஆக இருந்த நமது ஏற்றுமதியின் பங்கு *3.1%*மாக **1999–2000ல்** குறைந்துவிட்டது.

*(4)* மற்ற குறைந்த வளர்ச்சியடைந்த நாடுகள் : (ஆப்பிரிக்கா, ஆசியா, இலத்தீன் அமெரிக்கா) நமது ஏற்றுமதியின் பங்கு **16.8%** ஆக *1990-91*ல் இருந்து **1999–2000ல் 28.2%** ஆக உயர்ந்துள்ளது.

கடந்த **50** ஆண்டுகாலத்தில், ஏற்றுமதியின் பங்கு, அளவு, தன்மை முதலியவற்றில் பல குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டுள்ளது. இவற்றில் பல மாற்றங்கள் நமது நாட்டின் முன்னேற்றத்திற்கு தேவையான மாற்றங்கள் ஆகும்.

## அயல்நாட்டு வாணிபச் செலுத்து சமநிலை (Balance of Payments)

## அயல்நாட்டு வாணிபச் செலுத்துசம நிலை என்பதன் பொருள் மற்றும் இலக்கணம்

அயல்நாட்டு வாணிப செலுத்து நிலை என்பது "ஒரு குறிப்பிட்ட ஆண்டு (1 ஆண்டு) ஒரு நாடு உலகின் இதர நாடுகளோடு கொண்டிருந்த அனைத்து பொருளாதார நடவடிக்கைகளையும் குறிப்பதாகும்" ஒரு நாட்டின் சர்வதேச பொருளாதார நிலையை விளக்குகிறது. ஒரு நாட்டின் சர்வதேச பொருளாதார வளர்ச்சி அந்நாட்டின் வாணிபச் செலுத்து சமநிலையின் மூலம் அறிந்து கொள்ளலாம். ஒவ்வொரு நாடும் உலகின் பிற நாடுகளோடு தங்களின் பொருளாதார நடவடிக்கைகளை மேற்கொள்கிறது. இவ்வாறான நடவடிக்கைகளால் ஒரு நாடு தான் செலுத்துகைகளைப் (*Payments)* பெறுவதோடு தானும் பிற நாடுகளுக்கு கொடுக்க வேண்டியுள்ளது (*Makes Payments)* எனவே `அயல்நாட்டு வாணிபச் செலுத்து சமநிலை என்பது இவ்வாறான `வரவு மற்றும் செலவு அறிக்கைக் கணக்கின்' தொகுப்பே ஆகும்.

ஒரு நாட்டின் அயல்நாட்டு வாணிபச் செலுத்துச் சமநிலை என்பது அந்நாடு உலகின் பிற நாடுகளோடு ஒரு குறிப்பிட்ட காலத்தில் கொண்டுள்ள அனைத்து வகையான பணவியல் நடவடிக்கைகளின் பதிவு" எனப்பொருளியல் அறிஞர் பென்ஹாம் (*Benham)* வரையறுத்துள்ளார்.

பொருளியல் அறிஞர் கின்டில் பர்கரின் கூற்றுப்படி அயல்நாட்டு வாணிபச் செலுத்துச் சமநிலை என்பது "ஒரு நாட்டில் குடியிருப்பவர் அனைவருக்கும் மற்றும் அயல்நாடுகளில் குடியிருப்பவருக்கும் இடையே உள்ள அனைத்து பொருளாதார நடவடிக்கைகளின் பதிவே" ஆகும் என்கிறார்.

## அயல்நாட்டு வாணிபச் செலுத்து சமநிலையின் தொகுப்பு

"ஒரு நாட்டின் அனைத்து வகையான அயல்நாட்டு வரவு செலவுகளின் பதிவுகள் அனைத்தையும் காண்பிக்கும் அறிக்கை அல்லது கணக்கே" அயல்நாட்டு வாணிபச் செலுத்துச் சமநிலையாகும். இது புலனாகும் மற்றும் புலனாகப் பொருள்களின் பதிவு அனைத்தையும் குறிப்பதாகும். புலனாகும் பொருள்கள் என்பது பண்டங்கள் ஏற்றுமதி மற்றும் இறக்குமதியைக் குறிப்பதாகும். புலனாகாப் பொருள்கள் என்பது பணிகள் (*Service)* அயல்நாட்டுப் பரிவர்தனை *(foreign transfer)* மற்றும் அயல்நாட்டு நடவடிக்கைகள் (*foreign transactions)* இவையனைத்தின் ஏற்றுமதி மற்றும் இறக்குமதியைக் குறிப்பதாகும். அயல்நாட்டு வாணிபச் செலுத்துச் சமநிலையென்பது "நடப்புக் கணக்கில் உள்ள வாணிபச் செலுத்து சமநிலை மற்றும் முதலீட்டுக் கணக்கில் உள்ள வாணிபச் செலுத்து சமநிலை எனவும் வகைப்படுத்தப்படுகிறது. நடப்புக் கணக்கில் உள்ள வாணிபச் செலுத்து சமநிலை என்பது நாட்டின் பண்டங்கள், பணிகளின் மாற்றம் மற்றும் வாணிகத்தை குறிப்பதோடு புலனாகாத பொருள்களான நன்கொடை, ஒருபடித்தான மாற்றம் (*Unilateral Transfer)* போன்றவற்றைக் குறிப்பதாகும்.

மூலதனக் கணக்கில் உள்ள வாணிபச் செலுத்துச் சமநிலை என்பது 'நாட்டின் சர்வதேச அளவில் காணப்படும் நிதி நிலைமை, (*Financial Position in the international scenario)* அயல்நாட்டு பரிவர்த்தனையின் கூட்டுத்தொகை, அயல் நாட்டின் சொத்து மற்றும் கடன்கள் *(liabilities)*, சர்வதேச நிதிலைமையில் நடப்பு நடவடிக்கைகளின் தாக்கம் போன்றவையாகும்'.

## அயல்நாட்டு வாணிபச் சமநிலை (Balance of Trade)

அயல்நாட்டு வாணிபச் சமநிலை என்பது "புலனாகும் பொருள்களி ன் வாணிபத்தை மட்டுமே" குறிப்பதாகும். புலனாகும் பொருள்கள் என்பது ஏற்றுமதி மற்றும் இறக்குமதியின் அளவு, வாணிபம், தங்கம், வெள்ளி மற்றும் இதரப் பண்டங்கள் ஆகியவற்றைக் குறிப்பதாகும். புலனாகாத பொருள்கள் என்பது பணிகள்

பரஸ்பரம் செலுத்தப்படுதல், அதாவது கடல் வாணிகம், காப்பீடு மற்றும் வங்கியியல் நிறுவனங்கள், வட்டி செலுத்துதல், பங்கு, (*Dividend)* சுற்றுலாப் பயணிகளின் செலவு மற்றும் இதை போன்ற பிறவற்றைக் குறிப்பதாகும். அயல்நாட்டு வாணிபச் சமநிலை என்பது ஒரு குறிப்பிட்ட ஆண்டின் (1 ஆண்டு) ஏற்றுமதி மற்றும் இறக்குமதியின் புலனாகும் பொருள்களின் மதிப்பளவே ஆகும்.

ஒரு குறிப்பிட்ட ஆண்டில் ஏற்றுமதியும், இறக்குமதியும் மிகச் சரிசமமாக இருப்பின் அயல்நாட்டு வாணிபச் சமநிலை சரிசமமாகும். ஏற்றுமதியின் மதிப்பு இறக்குமதியின் மதிப்பைவிட அதிகமாக இருந்தால் அது "சாதக வாணிபச் சமநிலை" என்றழைக்கப்படுகிறது. இறக்குமதியின் மதிப்பு ஏற்றுமதியின் மதிப்பைவிட அதிகமாக இருந்தால் அது 'பாதக வாணிபச் சமநிலை' என்றழைக்கப்படுகிறது.

### கடன்கொடுத்துதவும் மற்றும் தன்னிச்சை மூலதனம்

### (Accommodating and Autonomous Capital)

நடப்புக் கணக்குச் சமநிலையில் ஒரு நாட்டிற்கு பற்றாக்குறை இருந்தால் அத்தகைய பற்றாக்குறையை போக்க மூலதனக் கணக்கில் சரிசெய்து வாணிபச் செலுத்து சமநிலையை சமநிலைக்கு (*equilibrium)* கொண்டுவரும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும். இதற்கான சாத்தியக் கூறுகள் – தன்னிச்சை மூலதன நடவடிக்கையின்மூலமோ அல்லது கடன் கொடுத்துதவும் மூலதன ஒட்டத்தின் மூலமோ ஏற்படலாம்.

### சுங்க வரி, வாணிபம் குறித்த பொது உடன்பாடு

### (GATT) (காட்) (General agreement on Tariff and Trade)

சுங்க வரி, வாணிபம் குறித்த பொது உடன்பாடு (*GATT)* என்பது 'நாடுகள் தங்களுக்கிடையே குறிப்பிட்ட சட்டதிட்டங்களின்படி, நெறியுரைகள், நடத்தை விதிகளின்படி சர்வதேச சுங்கவரி மற்றும் வாணிபத்தை ஒழுங்குமுறைப்படுத்தி வணிக ஒப்பந்தத்தை மேற்கொள்ளுதல் ஆகும். அனைத்துலக நாடுகளின் வளர்ச்சியை ஊக்குவிக்கும் பொருட்டும் நாடுகளிடையே தடையில்லா வாணிகச் சூழலை உருவாக்கும் பொருட்டும் 1948–ஆம் ஆண்டு ஜெனிவாவில் சுங்கவரி வாணிபம் குறித்த பொது உடன்பாடு (*GATT)* ஏற்படுத்தப்பட்டது. தற்போது 'காட்டில் (*GATT) 117* உறுப்பு நாடுகள் உள்ளன. இதன் முக்கிய நோக்கம் வாணிபத் தடையை நீக்கி சந்தையில் போட்டியிடும் திறனை உருவாக்குதல் ஆகும். 'சுங்க வரியில்

ஒப்பந்தத்தை ஏற்படுத்தி சர்வதேச அளவில் ஒரு முக்கிய அங்கமாக காட் அமைப்பு செயல்படுகிறது. ஒவ்வொரு குறிப்பிட்ட கால அளவிலும் இதன் உறுப்பு நாடுகள் பன்னாட்டு வாணிபம் பொருட்டு ஒன்று கூடி தங்களுக்குள் ஏற்றுமதி அளவு, சுங்க வரி, மற்றும் இதர இடர்ப்பாடுகள் குறித்து உடன்பாடு செய்து கொள்ளும். பலதரப்பட்ட வாணிப விரிவாக்கத்திற்கு 'காட்' அமைப்பு ஒரு நிரந்தர பன்னாட்டு வாணிப அமைப்பாக செயல்படுகிறது. காட் அமைப்பு *WTO* ஆக **1995**ஆம் ஆண்டு உருவாகியது.

### 'காட்' (GATT) அமைப்பின் நோக்கங்கள்

*1.* பன்னாட்டு வாணிகத்தை விரிவுபடுத்துதல்

*2.* பங்கேற்பு நாடுகளின் முழு வேலை வாய்ப்பு உத்தரவாதத்துடன் உலக உற்பத்தியைப் பெருக்குதல்

*3.* உலக வளங்களை முழுமையாகப் பயன்படுத்தி வளர்ச்சியை ஏற்படுத்துதல் மற்றும்

*4.* ஒட்டு மொத்த உலக சமுதாயத்தின் வாழ்க்கைத் தரத்தை திருத்தியமைத்தல்

### "காட்டின்" விதிமுறைகள் பின்வரும் கோட்பாடுகளை அடிப்படையாக கொண்டுள்ளது

*1.* வர்த்தகம் பேதமின்றி நடைபெறவேண்டும்.

*2.*ஏற்றுமதி அளவு நிர்ணயத் தடை பயன்பாடு இடித்துரைக்கப்பட வேண்டும்

*3.* கருத்து வேறுபாடுகள் கலந்தாலோசித்தல் மூலம் தீர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

### இந்நோக்கங்களை அடையும் வழிமுறைகள்

'காட்' அமைப்பு பின்வரும் முறைகள்மூலம் அதன் நோக்கங்களை அடையலாம் என்கிறது.

### 1. மிகச் சாதகமான தேசிய பிரிவு
### (Most Favoured Nation clause)

இங்கு பிரிவு என்பது நீக்குதல் (*elimination)* அல்லது பேதங்காட்டுதல் (*discrimination)* தன்மையைக் குறிக்கும். இப்பிரிவை இங்கு கொடுக்க வேண்டியதன் காரணம் பன்னாட்டு வாணிபத்தில் பேதங்காட்டும் தன்மையைத் தவிர்க்கவே ஆகும். இப்பிரிவு குறிப்பிடுவது என்னவெனில், ஒவ்வொரு நாடுமே மிகச் சாதகமான நாடு என கருதப்படுதல் வேண்டும்.

ஏதேனும் ஒரு உறுப்பு நாடு தனது வாணிப பங்குதாரருக்கு (*Trading Partner)* வாணிபச் சலுகை அளிப்பதானால் 'காட்' அமைப்பின் அனைத்து உறுப்பு நாடுகளுக்கும் அச்சலுகை கிடைக்கக்கூடியதாய் இருக்கவேண்டும்.

### 2. இறக்குமதியில் அளவுக்கட்டுப்பாடு

'காட்' விதிகள் 'இறக்குமதியில்' அளவுக்கட்டுப்பாட்டினை தடைசெய்கிறது. ஆனால் இதில் மூன்று முக்கிய விதி விலக்குகள் அளிக்கப்பட்டுள்ளன.

அ. அயல்நாட்டு வாணிபச் சொத்து சமநிலையில் இடர்ப்பாடுகளை *(Difficulties)* சந்திக்கின்ற நாடுகள் 'இறக்குமதியில்' அளவுக் கட்டுப்பாட்டினை மேற்கொள்ளலாம்.

ஆ. 'காட்' அமைப்பு ஏற்றுக் கொண்டுள்ள விதிமுறைகளின்படி வளரும் நாடுகள்' அளவுக் கட்டுப்பாட்டினை விதிக்கலாம்.

இ. உள்நாட்டு உற்பத்தி வரையறுக்கப்பட்ட கட்டுப்பாட்டிற்குள் இருக்குமேயானால் வேளாண்மை மற்றும் மீன்பிடித் தொழில் உற்பத்திகளில் அளவுக் கட்டுப்பாட்டினை விதிக்கலாம்.

### 3. 'சுங்க வரி' உடன்பாடு மற்றும் சுங்கவரிக் குறைப்பும்
### (Tariff Negotiation & Reduction of Tariff)

பன்னாட்டு வாணிபத்திற்கு 'சுங்கவரி' மாபெரும் தடையாக உள்ளது என்பதை 'காட்' அமைப்பு உணர்ந்துள்ளது. எனவே, நாடுகள் தங்களின் மாறுபடும் தேவைகளுக்கு ஏற்ப ஒப்பந்தங்களை மேற்கொண்டு 'சுங்கவரி' குறைப்பு பற்றி ஒருவருக்கொருவர் சாதகமான ஒப்பந்தம் மேற்கொள்வதற்கு 'காட்' அமைப்பு ஊக்கம் தருகிறது.

*1993* ஆம் ஆண்டின் “ உருகுவே” சுற்றுப்பேச்சுக்கள் இதற்கு ஆர்வமூட்டியது. வழக்கமான ‘சுங்க வரி’ மற்றும் ‘சுங்க வரியற்ற’ நடவடிக்கை மட்டுமல்லாமல் வாணிகத் தொடர்புடைய அறிவுசார் பண்டங்களின் உரிமை (*TRIPS)*, வாணிகம் சார்ந்த முதலீடு (*TRIMS)* மற்றும் பணிகளின் வாணிக உறவுகள் (*Trade in Services)* போன்ற விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன.

உறுப்பு நாடுகளுக்கிடையே வேளாண்மை, பருத்தி நெசவுத் தொழில் *(Textiles)*, அறிவு சார் பண்டங்களின் உரிமைகள் (*TRIPS)* மற்றும் பொருள் குவிப்புத் தடுப்பு (*anti dumping)* போன்ற துறைகளின் *(areas)* கருத்து வேறுபாடு நிலவியது.

‘உருகுவே’ சுற்றுப்பேச்சுகள் பணிகள் மற்றும் வேளாண்மைத் துறையில் ‘காட்’டின் எல்லையை விரிவாக்கியது. ‘உருகுவே’ நடவடிக்கைகள் அனைத்து வர்த்தகத் தடைகளையும் போக்க விரும்பியது.

**உலகவர்த்தக அமைப்பு**

**(World Trade organisation - WTO)**

‘காட்’ சமரசப் பேச்சுவார்த்தைகள் ஏழு சுற்றுக்கள் நடைபெற்று ‘உருகுவே சுற்று’ என்றழைக்கப்படும். எட்டவது சுற்று சமரசப் பேச்சு வார்த்தைகள் **1989**ல் தொடங்கி **1995**ஆம் ஆண்டு ‘உலக வர்த்தக’ அமைப்பு *(WTO)* உருவாக்கப்பட்டதோடு, பேச்சுவார்த்தைகள் நிறைவடைந்தன. ‘காட்’ அமைப்பின் கோட்பாடுகளும் உடன்பாடுகளும் இவ்வமைப்பில் *(WTO)*ல் பின்பற்றப்பட்டன. **150** உறுப்பு நாடுகளைக் கொண்ட உலக வர்த்தக அமைப்பானது, உறுப்பு நாடுகளுக்குள் எழும் வர்த்தகப் பிரச்சினைகளை நிர்வகித்து தீர்த்து வைக்கும். ‘காட்’ அமைப்பைப்போல் அல்லாமல் *(WTO)* அமைப்பு உறுதியான, திறமையான நிர்வாக அமைப்பைக் கொண்டதாகும். *WTO* வின் ‘தலைமை இயக்குனராக’ பாஸ்கல் லாமி *(Pascal Lamy)* என்பவர் **2005** ஆம் ஆண்டு தொடங்கி **4** ஆண்டுகளுக்கு இப்பதவியை வகித்து வருகிறார்.

*WTO* வின் முக்கிய நோக்கம் பேதமற்ற, சுதந்திரமான வர்த்தகமே ஆகும். அதாவது ஒரு வர்த்தகத் தடைகளே (சுங்கவரிகள் மற்றும் சுங்கவரியில்லாதவை) இங்கு காண இயலும். இதுமேலும், குறைந்த வளர்ச்சியடைந்த நாடுகளுக்கு, போட்டியுடன் கூடிய வர்த்தக அமைப்பு

நிலையை உருவாக்கி, அவகைள் சரிசெய்யக்கூடிய அளவுக்கு நேரம் ஒதுக்கி நெகிழ்ச்சியுள்ள வர்த்தகத்துடன் கூடிய சலுகைகளைத் தந்துள்ளது.

**WTO வின் முக்கிய பணிகளாவன**

1. *WTO* உறுப்புநாடுகளின் வர்த்தக உடன்பாடுகளை நிர்வகித்தல்.

2. வர்த்தக சமரசப்பேச்சுக்கு ஒரு அமைப்பு.

3. வர்த்தக தகராறுகளைக் கையாளுதல்.

4. தேச அளவிலான வர்த்தகக் கொள்கைகளைக் கண்காணித்தல்.

5. வளர்ந்துவரும் நாடுகளுக்கு தொழில் நுட்ப உதவியும் பயிற்சியும் கொடுத்துதவுதல்.

6. இதர சர்வதேச அமைப்புகளோடு கூட்டுறவுடன் செயல்படுதல்.

*WTO* வின் அனைத்து உறுப்பு நாடுகளின் அமைச்சர்கள் அளவிலான மாநாடு இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கூட்டப்பட்டு, இம்மாநாட்டில் பலவகையான வர்த்தக உடன்பாட்டு முடிவுகள் எட்டப்படும். *WTO* உறுப்புநாடுகளின் அமைச்சர்கள் அளவிலான 4வது மாநாடு தோகா *(DOHA)* விலும், 5வது மாநாடு 'கேன்கம்' மிலும் *(Cancum in Mexico)* 6வது மாநாடு ஹாங்–காங்கிலும் நடைபெற்றன. 'தோகா' நடவடிக்கைகளைப்பற்றி விவாதிக்கக்கூடிய 7வது சுற்று மாநாடு, வளர்ந்த மற்றும் வளரும் நாடுகளிடையே தொடர்ந்து காணப்பட்ட வேறுபாடுகள் காரணமாக தற்காலிகமாக நிறுத்தி வைக்கப்பட்டது.

**மறுசீரமைப்பு மற்றும் வளர்ச்சிக்கான பன்னாட்டு வங்கி** *(IBRD)*

'உலக வங்கி' (*World Bank)* என்றழைக்கப்படும் 'மறுச் சீரமைப்பு மற்றும் வளர்ச்சிக்கான பன்னாட்டு வங்கி' 1944 ஆம் ஆண்டு செயல்படத் தொடங்கியது. பன்னாட்டு நிதி நிறுவனம் (*IMF)* பாதகமான செலுத்து நிலையை சரிகட்ட தற்காலிக உதவியை வழங்கியது. ஆனால், நீண்டகால முதலீட்டிற்கு தேவையான உதவிகளை வழங்க ஒரு நிறுவனம் தேவைப்பட்டது. இதனால் 'மறுச்சீரமைப்பு மற்றும் வளர்ச்சிக்கான பன்னாட்டு வங்கி' (உலக வங்கி) நிறுவப் பெற்றது. இவ்வங்கி தேவையான நீண்டகால முதலீடுகளை ஊக்குவிக்க சலுகை முறையில் கடன்களை வழங்கி வருகிறது.

## உலக வங்கியின் பணிகள்
## (Functions of World Bank)

*1.* உறுப்பு நாடுகளுக்குத் தேவையான நீண்டகால ஆக்கப்பூர்வமான முதலீடுகளை வழங்க முன்வருகிறது.

*2.* தனி மனிதன் முதலீடுகளுக்கும் அயல்நாட்டு முதலீடுகளுக்கும் உறுதியளிக்க முன்வருகிறது.

*3.* அயல்நாட்டுச் செலுத்துச் சமநிலையைக் காக்கவும் உறுப்பு நாடுகளின் சமச்சீரான வளர்ச்சிக்கு உதவுதலும் சிறப்புப் பணிகளாகும்.

*4.* அவசரப் பயனுள்ள சிறிய பெரிய திட்டங்களுக்கு தேவையான கடனுதவி செய்யத் தயாராக உள்ளது.

## உறுப்பினர் மற்றும் அமைப்பு
## (Membership and Organisation)

பன்னாட்டு நிதி நிறுவனத்தில் உள்ள உறுப்பு நாடுகள் அனைத்தும் உலக வங்கியின் உறுப்பு நாடுகள் ஆகும். 2000–ஆவது ஆண்டில் இதில் *182* உறுப்பு நாடுகள் உள்ளன. பன்னாட்டு நிதி நிறுவனத்தில் (*IMF)* உள்ளது போலவே உலக வங்கியிலும் மூன்று அடுக்கு நிர்வாக முறை உள்ளது. தலைவர், நிர்வாக இயக்குநர்கள் மற்றும் ஆளுநர்கள் வாரியம் (*Board of Governors)* என்ற இவை 3 அடுக்குமுறை. ஒவ்வொரு உறுப்பு நாடுகளும், ஒரு ஆளுநர் மற்றும் மாற்று ஆளுநர்களை ஒவ்வொரு *5* ஆண்டுகளுக்கும் நியமிக்கும். அரசின் நிதி அளிப்பை பொறுத்து ஆளுநருக்கு வாக்களிக்கும் ஓட்டுநர்களின் மதிப்பு தீர்மானிக்கப்படும்.

## மூலதன அமைப்பு (Capital Structure)

*10* பில்லியன் டாலர் அங்கீகரிக்கப்பட்ட மூலதனத்துடன் இது தொடங்கப் பெற்றது. ஜூலை 1992ல் இது 184.1 பில்லியன் டாலராக உயர்ந்தது.

## நிதி ஆதாரம்

எந்த அங்காடிகளிலிருந்து இவ்வங்கி பணத்தை கடனாகப் பெறுகிறதோ அதில் பயன்படுத்தப்படாத நிதியை இருப்பாக வைத்துக் கொள்ளும். இதன்

நோக்கம், கடன் பெறுபவரின் உறுதிச் செலவை குறைப்பதாகும். உலக வங்கி பெறுகின்ற கடனின் காலக் கெடுவைவிட நீண்ட காலத்திற்கு கடன் வழங்க முன்வருகிறது.

**சிறப்பு செயல்திட்டம் (SAP)**

*1983*ல் தொடங்கப்பெற்ற இத்திட்டம், மாறிவரும் பொருளாதாரச் சூழ்நிலைக்கேற்ப உலக வங்கியின் உதவும் திறனை உயர்த்த உதவுகிறது.

**அடிப்படை மாற்றத்தை சரிசெய்யும் உதவி (SAF)**

*1985*ல் தொடங்கப்பெற்ற இவ்வுதவியின்மூலம் செலுத்துநிலை பற்றாக்குறையைச் சமன் செய்ய உதவுவதோடு வளர்ச்சிப் பணிகள் பாதிக்கப்படாமல் இருக்கவும் உலக வங்கி உதவுகிறது.

**கடன் வழங்குவதற்கான சில நிபந்தனைகள்**

*1.* திறமையான ஒழுங்கு நடவடிக்கைகள் பின்பற்றப்படுவதோடு நாட்டின் கொள்கைகள் ஒளிவு மறைவு இன்றியும் அரசியல் பாதிப்பு இல்லாமலும் இருத்தல் வேண்டும்.

*2.* இடர்ப்பாடுகளை தவிர்க்கக்கூடிய போதுமான மேலாண்மை.

*3.* நீண்டகால நிதி ஆதாரம் வழிவகை செய்தல்

*4.* மொத்த உள்நாட்டு உற்பத்தியை உயர்த்திட தனியார்த் துறையின் பங்கினைக் கூட்டுதல்.

**வங்கிக் கடனுதவி**

**(Bank Borrowing)**

'உலக வங்கி' அதன் உறுப்பு நாடுகள் சந்தாத் தொகையில் மூலதனம் பெற்று செயல்படும் ஒரு கூட்டு நிறுவனம். சர்வதேச மூலதன அங்காடி அடிப்படை மற்றும் செலவாணிப்பண பண்டமாற்று உடன்பாடு (*Currency Swap Agreement-CSA)* அடிப்படையில், இவ்வங்கியானது நீண்டகால, மத்தியகால நிதியிலிருந்து கடன் வழங்குகிறது.

**கடன் வழங்கும் செயல்பாடுகள்**

**(Lending Activities)**

பின்வரும் வழிகளில் இவ்வங்கி இதன் உறுப்பு நாடுகளுக்கு கடனுதவி வழங்குகிறது.

1. தனது சொந்த நிதியிலிருந்து சந்தைப்படுத்துதல் (அல்லது) பங்கேற்பு மூலம் வழங்கும் கடன்.

2. அங்காடியிலிருந்து பெறப்பட்ட கடனிலிருந்து அல்லது வங்கி பெற்ற கடனிலிருந்து வழங்கப்படும் கடன்கள்

3. முழுமையாகவோ, பகுதியாகவோ உறுப்பு நாடுகள் தனி முதலீட்டாளர்களிடமிருந்து பெறுகின்ற கடன்களுக்கு உறுதியளித்தல்.

4. இவ்வங்கியானது அதன் உறுப்பு நாடுகளுக்கு, அடிப்படை மாற்றத்தைச் சரிசெய்யும் உதவி (*SAF)* மற்றும் சிறப்பு செயல் திட்டம் (*SAP)* இவற்றின்மூலம் கடன் வசதி ஏற்படுத்தித் தருகிறது. இவ்வங்கி கல்வி, மக்கள் தொகை, உடல்நலம், சத்துணவு மற்றும் சுற்றுச்சூழல் போன்ற மனித வள மேம்பாடு சார்ந்தவற்றின் வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கிறது.

**பன்னாட்டு நிதிக் கழகம்**

**(International Finance Corporation)**

உலக வங்கியுடன் இணைந்த நிறுவனமான சர்வதேச நிதிக்கழகம் *1956* ஆம் ஆண்டு நிறுவப் பெற்றது. வளரும் நாடுகளிலுள்ள தனியார் நிறுவனங்களுக்கு உதவும் நோக்கத்துடன் அந்நிறுவனங்களுக்கு இடர்ப்பாடு மூலதனத்தை (*Risk Capital)* அளித்து இக்கழகம் உதவி செய்கிறது. வளரும் நாடுகளில் உள்ள தனியார் நிறுவனங்கள் மேற்கொள்ளும் செயல் திட்டங்களுக்கு சர்வதேச நிதிக்கழகம் கடன் மற்றும் சமச்சீர் நிதி மூலம் நிதி உதவி செய்கிறது.

பன்னாட்டு நிதிக்கழகம் (*IFC)* 'உலக வங்கியுடன்' இணைந்த நிறுவனமாக இருப்பினும், இது சட்டப்பூர்வ அங்கீகாரம் பெற்றிருப்பதோடு, தனக்கென்று தனிநிதி ஆதாரமும், பணிகளையும் பெற்றுள்ளது. 'உலக

வங்கி'யின் (*IBRD)* உறுப்பு நாடுகள் அனைத்தும் இதன் உறுப்பு நாடுகள் ஆக தகுதியானவையாகும்.

**நோக்கங்கள்**

*1.* தனியார்த் துறையின் ஆக்கப்பூர்வமான முயற்சிகளுக்கு, தனி முதலீட்டாளர்களின் உதவியுடன் திரும்பச் செலுத்துவதற்கு அரசின் உத்திரவாதம் நிதி உதவி வழங்குதல்.

*2.* தனியார் மூலதனம், முதலீட்டு வாய்ப்புகள், திறமை வாய்ந்த நிர்வாகத் திறன் ஆகியவற்றை ஒருங்கினைத்தல்.

*3.* உள்நாட்டிலும், அயல்நாட்டிலும் ஆக்கப்பூர்வமான முதலீடுகளைத் தூண்டுதல்.

தொழில்துறை, வேளாண்மை, நிதி மற்றும் வர்த்தகம் மற்றும் இதர தனியார் துறை நிறுவனங்களும் பன்னாட்டு நிதிக் கழகத்திலிருந்து நிதி உதவி பெற தகுதி உடையவர்கள். இத்துறைகளின் செயல்பாடுகள் உற்பத்திச் செயல் திறனோடு பொருளாதார வளர்ச்சிக்கு உதவி புரிகிறது. முதலீட்டிற்கான வட்டிவீதம் எல்லாத் துறைக்கும் ஒரே விதமாக இருக்காது. இது உடன்பாட்டிற்கு உட்பட்டது.

**பன்னாட்டு வளர்ச்சிக் கழகம் (IDA)**

உலக வங்கியின் துணை நிறுவனமான இக்கழகம் செப்டம்பர் 1960ல் அமைக்கப்பெற்றது. இக்கழகம் அமைக்கப் பெற்றதன் காரணம், உலகில் பன்னாட்டு நீர்மத்தன்மையை வளர்ச்சியுறச் செய்தல் ஆகும். வளர்ச்சி குறைந்த நாடுகளுக்கு குறைந்த வட்டியிலும், சலுகையிலும் நிதி உதவி வழங்குவது இதன் முக்கிய நோக்கமெனலாம்.

**நோக்கங்கள்**

*1.* பொருளாதார வளர்ச்சியை மேம்படச் செயதல்

*2.* உற்பத்தியைப் பெருக்குதல்

*3.* உறுப்புநாடுகளின் வாழ்க்கைத் தரத்தை மேம்படச் செய்தல்

*4.* உலக வங்கியின் வளர்ச்சி சார்ந்த நோக்கங்களுக்கும் அதன் துணைச் செயல்பாடுகளுக்கும் உறுதுணைபுரிதல்

*5.* உறுப்பு நாடுகளின் முக்கிய வளர்ச்சித் தேவைகளுக்கு நிதி உதவிபுரிதல். பன்னாட்டு வளர்ச்சிக் கழகத்தின் கடன் அளிப்பை அந்நியச் செலாவணிக்கும், தல பணச் செலவுகளுக்கும் (*local currency cost)* பயன்படுத்திக் கொள்ளலாம்.

**பன்முக முதலீட்டு உறுதித் திட்டமுகமை**
**(The Multinational Investment Guarantee Agency (MIGA)**

*1988* ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட இம்முகமை உலக வங்கியின் புதிய துணை நிறுவனம் ஆகும். இதன் அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் **1.08** பில்லியன் டாலராகும்.

**நோக்கங்கள்**

*1.* இதன் மிக முக்கிய நோக்கம் வளரும் நாடுகள் நேரடியாக அயல்நாட்டு முதலீட்டைப் பெற ஊக்குவிப்பது.

*2.* அரசியல் இடர்ப்பாடுகளிலிருந்து காப்பாற்ற காப்பீட்டுத் திட்டங்களைச் செயல்படுத்துதல்.

*3.* புதிய முதலீடுகளுக்கும், விரிவாக்க முதலீடுகளுக்கும், தனியார் மயமாக்கலுக்கும், நிதித்துறை சீர்திருத்தங்களுக்கு மட்டுமே இது காப்பீட்டுப் பாதுகாப்பளிக்கிறது.

*4.* முதலீட்டுச் சூழ்நிலையை ஈர்துக்கொள்ள, வளர்ச்சிப்பணி மற்றும் அறிவுரைகளை வழங்கி உதவுகிறது.

பன்முக முதலீட்டு உறுதித் திட்ட முகமை பல நாடுகளின் முதலீடுகளுக்கு ஒரு கிரியா ஊக்கியாகச் செயல்படுகிறது.

# பயிற்சி

## பகுதி – அ

**I. சரியான விடையைத் தேர்ந்தெடுக்கவும் :**

1. உலக மயமாதல் என்பது

அ. ஒவ்வொரு நாடுகளின் பொருளாதாரத்தை உலக நாடுகளின் பொருளாதாரத்துடன் இணைத்தல்

ஆ. பன்னாட்டு வாணிகத்தில் வெளிப்படைத் தன்மையை அதிகரித்தல்

இ. உலக நாடுகள் அனைத்தையும் ஒரே பொருளாதார அமைப்பாக மாற்றி அமைத்தல்

ஈ. மேற்கூறிய அனைத்தும்

2. தொழில்நுட்ப மாற்றம் பேரளவில் நடைபெறுவது

அ. உரிம ஒப்பந்தத்தின் மூலமும் மற்றும் கூட்டு முயற்சி மூலமாகவே.

ஆ. சொந்த அமைப்பை தேர்வு செய்தல் மூலமாகவே.

இ. வழிமுறைகளை சுலபமாக்குதல் மூலமாகவே.

ஈ. மேற்கண்ட எவையும் அல்ல.

3. பண்டமாற்று முறையில் உள்ள முக்கிய இடர்பாடு

அ. பரிமாற்ற முறையானது எண்ணற்றவையாகவும், கடினமானதாகவும் இருத்தல்

ஆ. இருமுகத் தேவை பொருத்தமின்மை

இ. இடைப்பட்ட பண்டம் எல்லோரும் அறிந்திருக்க வேண்டிய அவசியம் இல்லை

ஈ. வீட்டு உற்பத்தி முறை நடைமுறையில் இருத்தல்

4. பன்னாட்டு நிதி நிறுவனம் தோற்றுவிற்பதற்கான தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

அ. வட்டமேஜை மாநாடு ஆ. ஜெனிவா மாநாடு

இ. பிரிட்டன் உட்ஸ் மாநாடு ஈ. மேற்கண்ட எவையும் இல்லை

5. உலக வங்கி தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு

அ. 1983 ஆ. 1844

இ. 1948 ஈ. 1944

## II. கோடிட்ட இடங்களை நிரப்புக :

6. உலகப் பொருளாதாரத்தின் முக்கிய நோக்கம் .........
7. விரிவுபடுத்தப்பட்ட அமைப்பு சீராக்கத் திட்டம் ......... முயற்சிக்கு வித்திட்டன.
8. ........... மனித கண்டுபிடிப்புகளுள் மிகவும் அடிப்படையானதாகும்.
9. கடந்த காலங்களில் .......... வளர்ச்சியின் இயந்திரமாக கருதப்பட்டது.
10. பன்னாட்டு நிதி நிறுவனத்தின் உயர்மட்ட அதிகாரம் .......... யிடம் உள்ளது.

## III. பொருத்துக.

| | | |
|---|---|---|
| 11. | எண்ணெய் உற்பத்தி மற்றும் ஏற்றுமதி நாடுகள் | அ. வாஷிங்டன் |
| 12. | பன்னாட்டு நிதி நிறுவனம் | ஆ. இரான், இராக், குவைத் |
| 13. | உருகுவே சுற்று | இ. ஜெனிவா |
| 14. | *IBRD*ன் உறுப்பினர்கள் 182 | ஈ. 1993 |
| 15. | *GATT* | உ. 2000 வருடம் |

## IV. ஓரிரு வார்த்தைகளில் விடை தருக.

16. இந்தியாவின் ஏற்றுமதிப் பண்டங்களுக்கு நான்கு உதாரணம் தருக.
17. ஒரு நாட்டின் பணவியல் நடவடிக்கைகளின் பதிவேடு என்பது யாது?
18. சிறப்பு செயல் திட்டம் எப்பொழுது நிறுவப்பட்டது?
19. பல நாடுகளின் முதலீடுகளுக்கு கிரியா ஊக்கியாக செயல்படுவது எது?
20. *SAF* என்றால் என்ன?

## பகுதி – ஆ

**V. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடை தருக.**

21. புதிய பொருளாதாரக் கொள்கையில் இரு பகுதிகள் யாவை?

22. தொழில்நுட்ப மாற்றங்களின் மூன்று முறைகள் யாவை?

23. பணத்தின் பணிகள் யாவை?

24. அயல்நாட்டு வாணிப செலுத்து சமநிலை என்றால் என்ன?

25. அயல்நாட்டு வாணிபத்தின் உட்கூறுகள் யாவை?

## பகுதி – இ

**VI. பின்வரும் வினாக்களுக்கு ஒரு பக்க அளவில் விடையளிக்கவும்.**

26. உலக மயமாதலின் அளவீடுகள் யாவை?

27. பணம் வளர்ந்த விதத்தை விவரி.

28. பன்னாட்டு நிதி நிறுவனத்தின் பணிகளை விளக்குக?

29. அயல்நாட்டு வாணிபத்திற்கும், அயல்நாட்டு வாணிப செலுத்து சமநிலைக்கும் உள்ள வேறுபாடுகளைக் கூறுக.

30. *GATT*ன் நோக்கங்களையும், அவைகளை அடையும் வழிகளையும் விவரி.

## பகுதி – ஈ

**VII. பின்வரும் வினாக்களுக்கு மூன்று பக்க அளவில் விடையளிக்கவும்.**

31. பொருளாதார முன்னேற்றத்தில் அயல்நாட்டு வாணிபத்தின் பங்கினை விவரி.

32. இந்தியாவின் அயல்நாட்டு வாணிபத்தின் உட்கூறுகளை விளக்குக?

33. பன்னாட்டு நிதி நிறுவனம் என்பது யாது? அதன் பணிகளை விவரி.

34. உலக வங்கி என்பது யாது? அதன் செயல்பாட்டு முறைகளை விவரி.

# பாடம் – 10

# மனிதவள மேம்பாடு

# (Human Resources Development)

## முன்னுரை

இப்பாடத்தில் 'மனிதவள மேம்பாடு', என்ற கருத்தினைப் பற்றி நாம் கற்போம். 1951ம் ஆண்டு முதல் ஏற்பட்ட கல்வியின் முன்னேற்றம் பற்றியும் மேலும் 'மனித மூலதனம்' பற்றியும் நாம் காண்போம்.

## மனித வள மேம்பாடு

வெவ்வேறு சந்தர்ப்பங்களில், 'மனிதவள மேம்பாடு' என்ற சொல்லானது வெவ்வேறு பொருள்படுமாறு பயன்படுத்தப்படுகிறது. *F.H.* ஆர்பைசன் (*F.H. Harbison)* என்பவரின் கூற்றுப்படி, ''மனிதவளங்கள் என்பது மக்களிடமுள்ள ஆற்றல்கள், திறன்கள், அறிவு ஆகிய மறைந்துள்ள சக்திகளை பண்டங்களின் உற்பத்தியிலும் அல்லது பயனுள்ள பணிகளை ஆற்றுவதிலும் பயன்படுத்தப்பட வேண்டும் என்பதில் அடங்கியுள்ளது'' என்கிறார்.

மனிதவள மேலாண்மையில் (*Human Resource Management)* மனித வள மேம்பாடு என்பது ''கற்றலின் செயல்களை ஒழுங்குப்படுத்தி, ஒரு நிர்வாக அமைப்பில் அவற்றை வரிசைப்படுத்துவதன் மூலம், செயல்பாடுகளை முன்னேற்றமடையச் செய்து ஒரு நபரின் அல்லது ஒரு நிறுவனத்தின் பணிகளை முன்னேற்றுவதாகும்'' இவ்வரையறையின்படி மனிதவள மேம்பாடு என்பது பயிற்சி மற்றும் முன்னேற்றத்தையும், பணித்திறன் மேம்பாட்டையும் மற்றும் நிறுவன முன்னேற்றத்தையும் குறிக்கிறது. ஆனாலும், இந்த பாடப்பகுதியில், மனிதவள மேம்பாடு என்பது மனித மூலதன மேம்பாட்டை குறித்து விரிவாக ஆராய்கிறது.

மனிதவள மேம்பாட்டினை சுட்டிக்காட்டும் பொதுவான காரணிகள் இரு பிரிவுகளாகும். 1. ஒரு நாட்டின் மனித முதலீட்டின் இருப்பை அளவிடுதல் 2. இந்த இருப்போடு, இன்னும் அதிகரிக்கும் மனித மூலதன ஆக்கத்தின் அளவை அளவிடுதல். இதுவே ஒரு குறிப்பிட்ட காலத்தில் மனித மூலதன ஆக்கத்தின் அளவாகும். இந்த மனித மூலதன இருப்பானது, அந்நாட்டின் மனிதவள மேம்பாட்டு நிலையைக் காட்டுவதாகும். ஆனால், மனித மூலதன ஆக்கத்தின்

அளவானது அதன் வளர்ச்சி வீதத்தைக் காட்டுகிறது.

மனித மூலதனத்தைப் பற்றி குறிப்பிடும்போது ஒரு நபர் கீழ்கண்ட வகைகளில் தனது திறன்களை வளர்த்துக்கொள்ள முதலீடுச் செய்தலைக் குறிக்கின்றோம். அவையாவன **1.** சுகாதார வசதிகள் மற்றும் பணிகள் **2.** பணிக்கானப் பயிற்சி **3.** முறையான கல்வி **4.** முதியோர் கல்வி மற்றும் விவசாய விரிவாக்கத் (எ.கா. முறைசாரா கல்வி) திட்டங்கள் **5.** தனிநபர் மற்றும் குடும்பங்கள் வேலைவாய்ப்பைத் தேடி இடம் பெயர்தல்.

கடந்த காலத்தில், பொருளியல் வல்லுனர்கள் நாட்டின் பொருளாதார வளர்ச்சி வீதத்தை அதிகரிக்க 'மூலதனத்தை' கூடுதலாக பருப்பொருள் மீது அதிகரிக்க வேண்டும் என கருதினார்கள். ஆனால், **1960–**ம் ஆண்டுகளில் பருப்பொருள் மூலதனத்தைப் போன்றே, மனித மூலதனத்தில் அதிகமாக முதலீடு செய்தல் அவசியமானது என உணர்ந்தனர். மனித மூலதனத்தை அதிகரிக்கும் அனைத்து காரணிகளுக்குள்ளும் கல்வி மிக முக்கியமானது என கருதப்பட்டது. எனவே தற்போது ஒரு தனிப் பிரிவாக '*கல்விப் பற்றிய பொருளியல்*' உருவாகியது. *1960*-ம் ஆண்டு ஸ்கல்ட்ஸ் (*Schultz)* என்ற அறிஞர் தனது மனித மூலதன கோட்பாட்டில் இதை அறிவித்துள்ளார். ஆடம் ஸ்மித், ஆல்ப்ரட் மார்ஷல் ஆகிய தொன்மைப் பொருளாதார அறிஞர்கள் கல்விப்பற்றிய தங்களது கருத்துக்களை வெளியிட்டு இருந்தாலும், கடந்த **50** ஆண்டுகளில் பொருளியல் அறிஞர்கள், பொருளாதாரக் கருவிகளை பயன்படுத்தி, கல்வியில் பொருளாதார முக்கியத்துவத்தைப் பற்றி ஆராய முற்பட்டனர்.

சில நேரங்களில் கல்வி என்பது, நுகர்வா, மூலதனமா என்ற கேள்வி எழுகின்றது. ஆனால் இது ஒரு சர்ச்சைக்குரிய தலைப்பாக இருக்க முடியாது என்பது குறிப்பிடத்தக்கது. கல்வி என்பது '*நுகர்வும் முதலீடும்*' என எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இன்றைய நாட்களில் பொருளாதார நிபுணர்கள் அதிகபட்சம் அதை (மனிதவளம்) முதலீட்டாகவே கருதுகின்றனர்.

ஹர்பிசன் *(Harbison)* மற்றும் மேயர்சு *(Myers)* ஆகியோர் மனித வளங்களின் குறியீடுகளை பின்வருமாறு குறிப்பிடுகின்றனர்.

*1.* பத்தாயிரம் மக்களுக்கு உள்ள ஆசிரியர்களின் எண்ணிக்கை (முதல் மற்றும் இரண்டாம் நிலைகளில்)

*2.* பத்தாயிரம் மக்களுக்கு பொறியாளர் மற்றும் விஞ்ஞானிகளின் எண்ணிக்கை

3. பத்தாயிரம் மக்களுக்கு மருத்துவர்கள் மற்றும் பல் மருத்துவரின் எண்ணிக்கை

4. 5 முதல் 14வது வயது வரம்புக்குட்பட்ட தொடக்கக்கல்வி சேர்க்கப்பட்ட மாணவர்களின் சதவீதம்.

5. சமன் செய்யப்பட்ட தொடக்கக்கல்வி மற்றும் இடைநிலை கல்வி பள்ளியின் சேர்க்கையின் விகிதம்

6. இரண்டாம் நிலையாகிய பதினைந்து மற்றும் பத்தொன்பது வயதுக்குட்பட்ட மாணவர்களின் சேர்க்கை சதவீதம்

7. மூன்றாம் நிலையாகிய உயர் கல்வி 20 முதல் 24 வயதுக்குட்பட்ட மாணவர்களின் சேர்க்கை வீதம்.

முதல் 3 குறியீடுகளும் மனிதவள இருப்பினை கணக்கிடுபவைகளாகவும், கடைசி நான்கு குறியீடுகள் கூடுதல் இருப்பினை காட்டும் கருவிகள் என்றும் அழைக்கப்படும்.

கீழ்காணும் 2 குறியீடுகள் உயர் கல்விக்கு அளிக்கக் கூடிய அறிமுகப் பயிற்சியைக் குறிக்கிறது. அவை

1. ஒரு குறிப்பிட்ட ஆண்டில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பப் பிரிவில் சேர்க்கப்பட்ட மாணவர்களின் எண்ணிக்கை.

2. அதே ஆண்டில் சட்டம், நுண்கலை, கலைப்பிரிவு ஆகிய பாடங்களில் சேர்க்கப்பட்ட மாணவர்களின் சேர்க்கைவீதம்.

ஹர்பிசன் மற்றும் மேயர்சு அவர்கள் மனிதவள மேம்பாட்டின் எளிய, கூட்டு குறியீட்டு எண்ணை (*Composite Number*) வடிவமைத்தார்கள். இக்குறியீட்டெண்ணைக் கணக்கிட இரண்டாம் நிலையாகிய பதினைந்து மற்றும் பத்தொன்பதாவது வயதுக்குட்பட்ட மாணவர்களின் சேர்க்கை சதவீதத்தையும், மூன்றாம் நிலையாகிய உயர் கல்வி 20 முதல் 24 வயதுக்குட்பட்ட மாணவர்களின் சேர்க்கை சதவீதத்தையும் கூட்டி அதனை நிறை எண் ஐந்தால் பெருக்குவதில் கிடைக்கும் ஈவாகும்.

கூட்டுகுறியீட்டு எண்ணை அடிப்படையாகக் கொண்டு அப்பொருளியல்

அறிஞர்கள் நாடுகளை;

1. வளர்ச்சி குன்றிய நாடுகள்

2. பகுதி வளர்ச்சியடைந்த நாடுகள்

3. பாதி முன்னேறிய நாடுகள்

4. முன்னேறிய நாடுகள் என நான்கு வகையாகப் பிரித்துள்ளார்கள்.

## மனிதவள மேம்பாடும், பொருளாதார வளர்ச்சியும் (Human Resource Development and Economic Development)

மனிதவள மேம்பாட்டு குறியீடுகளுக்கும் பொருளாதார வளர்ச்சி குறியீடுகளுக்கும் இடையே நெருங்கியத் தொடர்பு உள்ளது.

பொருளாதார வளர்ச்சியை கணக்கிட கீழ்காணும் குறியீடுகள் உதவுகின்றன.

1. தலாவீத மொத்த நாட்டு உற்பத்தி அமெரிக்க டாலர்களில்

2. வேளாண்மைத் துறையைச் சார்ந்த தொழில்களில் பணிபுரியும் மக்களின் சதவீதம்

3. நாட்டு வருமானத்தில் கல்விக்காக செலவிடப்படும் பொதுச் செலவுகளின் சதவீதம்

4. மொத்த மக்கள்தொகையில் 5 முதல் 14 வயதுக்குட்பட்ட வயதினரின் சதவீதம்

ஹர்பிசன் மற்றும் மேயர்சு அவர்களின் ஆராய்ச்சியின் குறிப்பில் கீழ்காணும் முடிவுகள் வெளியிடப்படுகின்றன.

1. மனித வள மேம்பாட்டின் எளிய கூட்டுக் குறியீட்டெண்ணிற்கும், தலாவீத மொத்த அமெரிக்க நாட்டு உற்பத்திக்கும் இடையே (டாலருக்கும்) மிக நெருங்கிய நேரடியான தொடர்பு உள்ளது (*Positive Relation).* இந்த எளிய கூட்டு குறியீட்டெண்ணிற்கும், விவசாயத்தில் ஈடுபட்டுள்ள மக்கள் சதவீதத்திற்கும் அதிகமான எதிர்மறைத் தொடர்பு உள்ளது. (*Negative Relation)*

*2.* சரிசெய்யப்பட்ட இரண்டாம் நிலை சேர்க்கை சதவீதமும், மொத்த நாட்டு உற்பத்தியும் மேலும் வேளாண்மையில் ஈடுபட்ட மக்களின் சதவீதத்திற்குமிடையே அதிகமான தொடர்புள்ளது.

*3.* முதல்நிலை சேர்க்கை விகிதம், மொத்த நாட்டு உற்பத்தி மற்றும் விவசாயத்தை சார்ந்த சதவிகிதம் ஆகிய இம்மூன்றிற்கும் உள்ள தொடர்பானது. கூட்டு குறியீட்டெண் (அ) இரண்டாம் நிலை சேர்க்கை விகிதம், மொத்த நாட்டு உற்பத்தி மற்றும் விவசாயத்தை சார்ந்த சதவீதம் ஆகியவற்றைவிட குறைவானதாகவே இருக்கும்.

குறியீட்டு எண் கீழ்மட்டக் கல்வியோடு தொடர்புடையதாய் இருப்பதைவிட, குறியீட்டெண், உயர் கல்வியோடு தொடர்புள்ளதாய் இருந்தால் பொருளாதார வளர்ச்சியானது குறிப்பிடத்தக்க வளர்ச்சி நிலையை அடையும் என்பதைக் காட்டுகிறது.

ஒரு அரசு மனித வள மேம்பாட்டின் யுத்திகளை திட்டமிடும்போதும், சில அடிப்படை தெரிவுகளை செய்திட வேண்டும்.

*1.* முறையான கல்வியின் முக்கியத்துவம் தரத்திற்கா (அ) அளவிற்கா என முடிவெடுத்தல். *(Emphasis on Quantity or Quality)*

*2.* இடைநிலை மற்றும் உயர் கல்வியில் அறிவியல் மற்றும் தொழில்நுட்பத்திற்கா? (அ) சட்டம், கலை மற்றும் மானுடவியல் இவைகளுக்கா? எவற்றிற்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும் என்பதை தீர்மானித்தல்.

*3.* திறமை வளர்ச்சியில், வேலைக்கு முன் அளிக்கும் பயிற்சியா? (அ) பணியிடைப் பயிற்சியா? எதை சார்ந்திருக்க வேண்டும் என்பதை தீர்மானித்தல்.

*4.* ஊக்கஊதியம் கொடுக்க, கூலி மற்றும் சம்பளத்தை திருத்தி அமைப்பதா? (அ) அங்காடி சக்திகளிடம் விட்டுவிடுவதா? என்பதைத் தீர்மானித்தல்.

*5.* தனிநபரின் தேவைகள் மற்றும் விருப்பங்களையும் அரசின் தேவைகளையும் கருத்தில் கொள்ளுதல்.

*6.* தரத்திற்கும், அளவிற்கும் இடையே கல்வி வளர்ச்சியில் தெரிவு செய்யும்

போது, அது பல வடிவங்களை எடுக்கும். சில நாடுகள், அனைவருக்கும் கல்வி அளிப்பதா அல்லது தரமான இடைநிலை மற்றும் பல்கலைக்கழக கல்வியினை ஒரு குறிப்பிட்ட ஒரு சில ஆற்றல் நிறைந்தவர்களுக்கே அளிக்கப்பட வேண்டுமா என்பனவற்றுள் ஒன்றை தெரிவுச் செய்தல் வேண்டும். குறைந்த எண்ணிக்கையான மாணவர்களுக்கு நல்ல தகுதி வாய்ந்த ஆசிரியர்களை கொண்டு கல்வி புகட்டுவதா (அ) நிறைய மாணவர்களுக்கு தகுதி குறைந்த ஆசிரியர்களைக் கொண்டு கல்வி புகட்டுவதா என தெரிவுச் செய்யவேண்டும். பொதுவாக அரசியல் மற்றும் சமுதாய காரணங்கள் 'அளவிற்கு' *(Quantity)* மட்டுமே முக்கியத்துவப்படுத்துகின்றன; ஆனால், விரைவான பொருளாதார வளர்ச்சிக்கு தேவையானது 'உயர்தர மனித சக்தியே'. மேலும் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப கல்வி வளர்ச்சிக்கும் சட்டம், நுண்கலை, மானுடவியலுக்கும் இடையே, ஒரு சரியான சம வளர்ச்சியை இடைநிலை மற்றும் உயர்மட்ட கல்விநிலைகளுக் கிடையே ஏற்படுத்த வேண்டும்.

பொதுவாக மனிதவள மேம்பாட்டு கோட்பாடுகளை கல்வித் திட்டங்கள் என குறிப்பிடலாம். இதனை 3 வகையாக பிரிக்கலாம் அவை.

1. மனித சக்திகளின் அணுகுமுறைகள் *(Manpower approach)*

2. சமுதாய தேவைகளின் அணுகுமுறைகள் *(Social Demand approach)*

3. விளைவு விகிதங்களின் அணுகுமுறைகள் *(Rate of Returns approach)*

**1. மனித சக்திகளின் அணுகுமுறைகள்**

மனித சக்திகளின் அணுகுமுறை என்பது கல்வித் திட்டத்தில் மனித சக்தியானது வெவ்வேறு நிலை, மற்றும் வெவ்வேறு வகையான கல்வியை பெற்றிருந்தால், மொத்த நாட்டு உற்பத்தியில் எதிர்பார்க்கும் வளர்ச்சி வீதத்தை அடையமுடியும் என எதிர்பார்க்கிறது.

இறப்பு, ஓய்வு நிலை, மற்றும் இடப்பெயர்ச்சி ஆகியவற்றை கருத்தில் கொண்டு மனித சக்திகளை கணக்கிடவேண்டும். கூடுதல் மனித சக்தி தேவைகளை கணக்கிட சேர்க்கை எண்ணிக்கை பெறவேண்டும். இந்த அணுகுமுறை கல்வித் திட்டத்தில், இத்திட்டத்திற்கான பண ஒதுக்கீட்டு முறைகளைப் பற்றிய வழிகள் அளிக்கப்படவில்லை.

## 2. சமுதாய தேவைகளின் அணுகுமுறைகள்

இந்த அணுகுமுறையை, சமூக விளைவு வீதத்தின் பகுப்பாய்வை பயன்படுத்துவதன் மூலம் அறிந்துக் கொள்ளலாம்.

## 3. விளைவு விகிதங்களின் அணுகுமுறைகள்

கல்வியை 'முதலீடாக' கருதும்போது அதனை தனியார் முதலீடு என்றும், சமூக முதலீடு என்றும் உற்று நோக்கலாம்.

## 1951 ஆம் ஆண்டுமுதல் கல்வி வளர்ச்சி

ஆங்கிலேயஆட்சி காலத்தில் அனைவரும் கற்க வேண்டும் என்பதற்கு முக்கியத்துவம்தரப்படவில்லை. காலணி ஆதிக்கம் நடுத்தர கல்வியறிவு பெற்ற சமுதாயத்தை எழுத்தறிவில்லாத சமுதாயமாக மாற்றிவிட்டது.

சுதந்திரம் பெற்றது முதல், ஒரு கல்வி சம்பந்தமான வெடிப்பு இந்தியாவில் ஏற்பட்டது. *J.B.G.* திலக் அவர்களின் கூற்றுப்படி, ''இன்று இந்திய மாணவர்களின் எண்ணிக்கையானது, இங்கிலாந்து, பிரான்சு, கனடா மற்றும் நார்வே ஆகிய நாடுகளின் உள்ள மொத்த மக்கள் தொகையைவிட அதிகமாகவே உள்ளது. உலக அளவில், ஆரம்ப நிலையில் சேர்க்கப்பட்ட ஒவ்வொரு 6–வது மாணவனும், இடைநிலையில் சேர்க்கப்பட்ட ஒவ்வொரு 7–வது மாணவனும் பணிநிலையில் சேர்க்கப்பட்ட ஒவ்வொரு 8–வது மாணவனும் ஒரு இந்தியனே.'' ஐந்தாண்டு திட்டங்கள் துவங்கும் முன்னர், மொத்த நாட்டு உற்பத்தியின் 1.2 சதவீதம் மட்டுமே கல்விக்கு முதலீடு செய்யப்பட்டது. ஆனால் தற்போது, மொத்த நாட்டு உற்பத்தியில் 3.5 சதவீதம் பொது முதலீடாக அதிகரித்துள்ளது.

இந்தியாவில் கல்வி வளர்ச்சி குறிப்பிடத்தக்க அளவில் இருந்தாலும் (அட்டவணை 10.1 பாடத்தின் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது) அளவு, தரம் மற்றும் சமத்துவம் ஆகிய மூன்றும் இந்தியக் கல்வி முறையில் பிடிப்படாத முக்கோணமாக உள்ளது.

இந்தியக் கல்வி அமைப்பின் மிகப்பெரிய தோல்வி, அனைவருக்கும் தொடக்கக்கல்வி என்ற நோக்கத்தோடு தொடர்புடையது. இடைநிலை மட்டத்தில் தொழிற்கல்வி மயமாதல் எதிர்ப்பார்க்கப்பட்ட முடிவுகளை விளைவிக்கவில்லை. மேல்நிலை மட்டத்தில் தொழிற்கல்விப் பிரிவில் அறிமுகப்படுத்திய பாடப்பிரிவுகள் பெயரளவிலான தன்மை உடையதாக

இருக்கிறது. அவைகள் மாணவர்களுக்கு வேலை வாய்ப்பை கிடைக்கச் செய்ய உதவவில்லை. உயர்தர மக்களுக்கும், நடுத்தர மக்களுக்குமே இக்கல்வி முறை நன்மைப் பயக்கிறது. சுதந்திரம் பெற்று முப்பது ஆண்டுகளாகியும், 1978ம் ஆண்டில் கவனிக்கப்பட்டது என்னவெனில், 70 சதவீத இடங்கள் இடைநிலைப் பள்ளிகளிலும் 80 சதவீத இடங்கள் உயர் கல்வி மட்டங்களிலும் 30 சதவீதம் உயர் வருமானம் ஈட்டும் மக்களால் எடுத்துக்கொள்ளப்பட்டன. எக்காரணத்தைக் கொண்டும் நிலமை மாறியுள்ளது என நம்பமுடியாது. மனித சக்தியின் தேவைக்கும் அளிப்பிற்கும் பொறுத்தம் இன்றி மேலும் வேலை வாய்ப்பின்மை வளருவதோடு கல்வியின் தரமும் வீழ்ச்சியடைந்து வருகிறது.

இந்தியக் கல்வி அமைப்பில் ஏற்றத்தாழ்வுகள் நிறைந்துள்ளன. கிராமப்புற மற்றும் நகர்புற மக்களின் கல்வி நிலையில் வேறுபாடுகள் உள்ளன. ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே, பின்தங்கிய பிரிவினருக்கும் மற்றும் பின்தங்கிய வகுப்பைச் சாராத பிரிவினருக்கும்மிடையே, மாநிலங்களுக்கிடையே, மாவட்டங்களுக்கிடையே மேலும் மாநிலத்திற்குள்ளேயே பலப்பல வேறுபாடுகள், ஏற்றத்தாழ்வுகள் உள்ளன.

கல்வித் துறையின் அடிப்படையான பிரச்சனைகளுள் ஒன்று 'குறைவான முதலீடு', ஆகும். கடந்த ஐம்பது ஆண்டுகளில் பணவளங்களின் ஒதுக்கீட்டுப் புள்ளி விவரங்கள் இந்த நிலையை உறுதிப்படுத்துகிறது. முதலாம் ஐந்தாண்டு திட்டத்தில் தான், 'அனைவருக்கும் கல்வி' என்ற கருத்து முக்கியத்துவம் பெற்றது. தொடக்கக் கல்வியும் முதியோர் கல்வியும் கல்விக்காக ஒதுக்கீடு செய்த வளங்களுள் 5ல் 3 பங்கினைப் பெற்றது. அதன் பின் தீட்டப்பட்ட திட்டங்களில் இக் கல்விதிட்டங்களுக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவம் வீழ்ச்சி அடைந்தது.

1960ம் ஆண்டிற்குள்ளாகவே அனைவருக்கும் தொடக்கக்கல்வி என்ற நோக்கத்தை அடைந்திருக்க வேண்டும். (அதாவது அரசியல் சாசனம் துவங்கப்பட்ட 10 ஆண்டுகளுக்குள்ளாகவே) ஆனால் இன்று வரையிலும் நாம் இதனை அடைய இயலவில்லை.

ஜப்பான் நாட்டின் அதிவேகப் பொருளாதார வளர்ச்சிக்கான ஒரு இரகசியம் என்னவென்றால் அது தொடக்கக்கல்விக்கும், தொழிற்கல்விக்கும் அளித்த முக்கியத்துவமும், இத்துறைகளுக்கு ஒதுக்கீடு செய்த பெருமளவு நிதி ஆதாரமே ஆகும்.

அனைவருக்கும் தொடக்கக்கல்வி இலக்கை அடைய இயலாமைக்கு

மற்றொரு காரணம் குழந்தைதொழிலாளர்கள் (*Child labour)* இதன் காரணமாக சிறார் பள்ளிக்குச் செல்லாமல் பள்ளியிலிருந்து இடையேநின்று விடுகிறார்கள்.

### தமிழ்நாட்டின் கல்வி வளர்ச்சி
### (Educational Progrees in Tamil Nadu)

இந்தியாவில், தமிழ்நாடு நல்ல கல்வி வளர்ச்சி அடைந்துக் கொண்டிருக்கும் மாநிலமாகும். எழுத்தறிவில் கேரளா, மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களுக்கு பின் தமிழ்நாடானது மூன்றாம் நிலையில் உள்ளது. தமிழகத்தின் எழுத்தறிவு நிலைக் குறித்த புள்ளி விபரங்கள் அட்டவணை 10.2ல் கொடுக்கப்பட்டுள்ளது.

தமிழகத்தின் ஆண், பெண் இவர்களது கல்வியறிவு நிலை வளர்ச்சி, இந்தியாவின் சராசரி கல்வி அறிவு நிலையைக் காட்டிலும் மேலான நிலையில் உள்ளது. 2001–ம் ஆண்டின் கணக்கெடுப்பின்படி, தமிழகத்தின் ஒட்டுமொத்த எழுத்தறிவு நிலை 73.47 ஆகவும். நாட்டின் சராசரி எழுத்தறிவு நிலை 65.38 சதவீதமாகவே இருந்தது.

*1991-2001*, முதல் இடைநிலைப்பள்ளிகளின் சேர்க்கை அளவானது 13 சதவீதத்திலிருந்து 59 சதவீதமாக உயர்ந்துள்ளது.

*1962-1963* முதல், 2000–2001 வரை கல்விக்கான செலவானது சீராக வளர்ந்துள்ளது. இக்கால கட்டங்களில் கல்விக்கான செலவு 26 கோடியிலிருந்து 4949 கோடியாக அதிகரித்தது. இது ஒரு குறிப்பிடத்தக்க முன்னேற்றமாகும்.

*1986*-ம் ஆண்டு கல்விக் கொள்கையின் மூலம் இந்திய அரசு அனைவருக்கும் ஆரம்பக் கல்வி அளிப்பதற்கு முன்னுரிமை கொடுத்தது. இக்கொள்கை *1* முதல் 5 வகுப்பு வரையில் படிக்கும் அனைவருக்கும் கல்வியை கொடுக்க வேண்டும் *(UPE)* என்பதே ஆகும்.

தமிழகத்தில் 6 முதல் 11–வயதுக்குட்பட்ட மாணவர்களின் சேர்க்கையில் நிலையான வளர்ச்சியை தீர்மானிக்கும் முக்கிய காரணங்கள் பின்வருமாறு (1) மாணவர்கள் பள்ளிக்குச் செல்வதற்கு, அருகாமையில் பள்ளிகள் இருத்தல். (2) பெற்றோர்கள் கல்வியின் தரத்தைப் பற்றிய விழிப்புணர்வு பெற்றிருத்தல் (3) உண்மை தனிநபர் வருமானம் அதிகரித்தல் (4) முதல் அமைச்சரின் சத்துணவு திட்டத்தை சரியான முறையில் செயல்படுத்துதல் (5) மாணவர்கள்

பள்ளிக்குச் செல்ல ஊக்குவிக்கும் வண்ணம், அரசின் சலுகைகள் வழங்குதல் (உம்.) இலவச பாடபுத்தகங்கள் வழங்குதல், இலவச பேருந்து அட்டைகள் வழங்குதல், மேலும் பிற சலுகைகள்.

தமிழகமானது முதல் நிலைகளில் உள்ள மூன்று மாநிலங்களுள் ஒன்றாக இருப்பதற்கு முக்கிய காரணம் பள்ளிகள், மக்கள் வாழும் இடங்களுக்கு மிக அருகாமையில் இருப்பதே. தமிழகத்திலுள்ள ஆரம்பப்பள்ளிகளானது, மக்கள் வாழும் இடங்களுக்கு 1 கிலோ மீட்டர் தொலைவிற்குள் அமைந்துள்ளது, (99 சதவீத பள்ளிகள்) உயர்–தொடக்க பள்ளிகள் மக்கள் வாழும் இடங்களுக்கு 3 கிலோ மீட்டர் தொலைவிற்குள் அமைந்துள்ளது (81 சதவீதம் பள்ளிகள்) இடைநிலைப்பள்ளிகள், வாழும் இடங்களுக்கு 5 கிலோ மீட்டர் தொலைவிற்குள் அமைந்துள்ளது (78 சதவீதம் பள்ளிகள்) மேல்நிலைப்பள்ளிகள் வாழும் இடங்களுக்கு 8 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்திருத்தல் (76 சதவீதம் பள்ளிகள்). மற்ற மாநிலங்களோடு ஒப்பிடும்போது, தமிழகமானது ஒரு குறிப்பிடப்பட்ட சாதனையை நிகழ்த்தியுள்ளது.

சமீபகாலமாக பள்ளிக்குவராமல் தங்கிவிடும் (*dropouts)* குழந்தைகளின் எண்ணிக்கை குறைந்து வருகிறது. இதற்கு காரணம் முதல்அமைச்சரின் மதிய சத்துணவுத்திட்டம், இலவச சுகாதார பரிசோதனை இலவச கல்வி மற்றும் பிற சலுகைகளான இலவச பேருந்து அட்டை, பலகைகள், புத்தகங்கள் மற்றும் சீருடைகள்.

### மாவட்ட தொடக்க கல்வித் திட்டம்
### (District Primary Education Programme-DPEP)

அனைவரும் தொடக்க கல்வி என்ற இலக்கை நோக்கமாகக் கொண்டு இக்கொள்கை அறிமுகப்படுத்தப்பட்டது. இக்கொள்கை கல்வியறிவில், பாலின வேறுபாடுகளை குறைக்க முக்கியத்துவம் கொடுக்கிறது.

### பள்ளி சாரா மற்றும் வயது வந்தோர் கல்வி
### (Non-formal Education and Adult literary)

இத்திட்டத்தின் கீழ் தமிழக அரசானது கீழ்கண்ட நடவடிக்கைகளை எடுத்துள்ளது. அவைகள்

*1.* மொத்த கல்வி அறிவு நடவடிக்கைகள் *(TLC)*

2. கல்வி அறிவுப் பெற்றபின்னர் நடவடிக்கைகள்

3. தொடர் கல்வி

இந்நடவடிக்கைகள் அனைத்தும் "அறிவொளி இயக்கத்தின்" கீழ் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளாகும். இந்த இயக்கத்தில் வயது வந்தோர் எனப்படுபவர் **15** முதல் **35** வயதுக்குட்பட்டவர்கள் என வரையறுக்கப்பட்டனர்.

**இடைநிலை மற்றும் மேல்நிலைக் கல்வி**
**(Secondary and Higher Secondary Education)**

இந்நிலையில் பள்ளிகள், மாணவர்கள், ஆசிரியர்கள் எண்ணிக்கை கணிசமாக உயர்ந்துள்ளது. நிலையான கட்டிடங்கள், கூடுதலான ஆசிரியர்கள் அதிக அறிவியல் கருவிகள், வசதியான ஆய்வகங்கள், பட்டறைகள் தொழில்கல்வி பாடங்கள் வலுப்படுத்துதல் முதலியன இடைநிலைக் கல்வியின் அவசரத் தேவைகளாகும். தொழில் கல்வி பாடப் பிரிவின் செயல்பாடுகளில் தமிழகமே முதன்மையாகத் திகழ்கிறது. சற்றேறக்குறைய தமிழக அரசு **16** முதல் *18* வயது வரையுள்ள மாணவர்களை கல்லூரிகளில் ஒரு புகுமுக வகுப்புகளுக்கு பதிலாக மேல்நிலைப் பள்ளிகளில் பலவகையான பாடப்பிரிவுகளை அறிமுகப்படுத்துவதன் மூலம் மாணவர் சேர்க்கையை அதிகப்படுத்தி வெற்றிக் கண்டுள்ளது.

**கலை மற்றும் அறிவியல் கல்லூரி**
**(Arts and Science College)**

*1960-61*ல் கலை மற்றும் அறிவியல் கல்லூரிகள் **57** ஆக இருந்தது. இது *2004-05*ல் **444**–ஆக உயர்ந்துள்ளது.

**தொழில்நுட்ப கல்வி (Technical Education)**

இத்தகைய தொழில் நுட்ப கல்வியில் சுயநிதி கல்லூரிகள் பெரும் அளவில் காணப்படுகின்றன. இந்த கல்லூரிகளில் **87** சதவீதத்திற்கும் அதிகமான மாணவர்கள் கல்வி கற்கின்றன. இது சமத்துவ கொள்கைக்கு எதிர்மறைவான நிகழ்வாக இருந்தாலும் அவை எண்ணிக்கையில் அதிக வளர்ச்சி அடைகின்றன; இந்த கல்லூரிகளில் ஏழைகளைத் தவிர மற்றவர்கள் சுலபமாக சேர்த்து பயன் அடைகின்றனர் இவ்வகைக் கல்லூரிகளில் படிக்க சமவாய்ப்புக்கள் அனைவருக்கும் கிடைக்காமல் போவதினால் சமவாய்ப்புக்கான நோக்கங்கள்

நிறைவுப் பெறவில்லை. மேலும் இத்தகைய கல்லூரிகள் மற்றும் தொழிற் (எ.கா. மருத்துவக்கல்லூரி) கல்லூரிகளையும் துவங்கியுள்ளன.

வெயினர் *(Weiner)* என்பவரது கூற்றுப்படி, ‘‘அரசின் பங்கானது நேரடியாகவும், அதிக முக்கியத்துடனும் செயல்பட்டு அனைவருக்கும் கல்வி என்பதனை முன்னேற்றம் அடைய பாடுபடவேண்டும். மாறாக, இதனை தனியார் துறையிடம் விடக்கூடாது’’ என விவரித்துள்ளார்.

## இந்தியாவில் மழலைக் குழந்தைகள் பராமரிப்பும் கல்வியும் (Early Childhood care and Education)

இது ஒரு ஒருங்கிணைக்கப்பட்ட அணுகுமுறை, இதன்மூலம் சத்துக்குறைந்த உணவு. அதனோடு சம்மந்தப்பட்ட நோய்களால் பாதிக்கப்பட்ட பிள்ளைகள், கர்ப்பிணிகள், குழந்தைகளை பராமரிக்கும் தாய்மார்கள் ஆகியோரை கருத்தில் கொண்டு செயல்படுகிறது. இத்தகைய திட்டத்தின் மூலம் நல்ல சத்துணவு, சுகாதார சேவைகள் குழந்தை நல மையங்களான அங்கன்வாடிகள் மூலம் அளிக்கப்படுகின்றன. இவைகளின் மூலம் சத்துணவு அளித்தல், பள்ளிச்சாரா கற்று சூழ்நிலைகள் அமைத்தல், உடல் பரிச்சோதனை செய்தல், தடுப்பூசிகள் போடுதல், மற்றும் சுகாதாரக் கல்வி போன்றவை அளிக்கப்படுகிறது.

## சிறப்பு சுகாதாரத் திட்டங்கள் (Special Health Programmes)

*1999*-ம் ஆண்டு முதல் அரசானது ஒரு புதிய திட்டத்தை நடைமுறைப்படுத்தியது. இத்திட்டத்திற்கு ‘‘வாழ்வொளி’’ (*vazhvoli)* திட்டம் எனப் பெயர். இதன் மூலம் பள்ளி மாணவர்களுக்கு நல்ல சுகமான வாழ்வளிக்க தீர்மானிக்கப்பட்டது. இத்திட்டத்தில் கள அலுவலர் *(field officer)* ஒருவர் சுகாதாரத் துறையில் இருந்து வாரத்திற்கு ஒருமுறை பள்ளிகளுக்குச் சென்று மாணவர்களை பரிசோதிப்பார். அவசியம் ஏற்பட்டால் ஆரம்ப சுகாதார நிலையங்களில் அழைத்துச் சென்று சிகிச்சை அளிப்பார். இத்தோடு பள்ளி ஆசிரியர்களுக்கும் விசேஷ பயிற்சி அளித்து வியாதிகளின் அறிகுறிகளை கண்டறியவும் அம்மாணவர்கள் குறித்து மருத்துவ அதிகாரிகளிடம் முறையிடுவதின் மூலம், இத்திட்டமானது மிகவும் வலு வுள்ளதாக மாற்ற முடியும்.

## உடல் நலம்பற்றிய பொருளியல் (Economics of Health)

உடல் நலம் பற்றிய பொருளியல் என்பது பல வழிகளில் கல்வி பற்றிய பொருளாதாரத்தைப் போன்றதாகும். உடல் நலம் என்பது கல்விச்செலவு போன்று

மக்கள் மீது செய்யும் முதலீடு ஆகும். சாதாரணமாக கல்வி மற்றும் உடல்நலம் மீது செய்யப்படும்செலவு ஒரு நபருக்குச் செய்யும் இணைச்செலவாகும். உயர்வான நலம் தனிநபரின் ஆயுட்காலத்தை கூட்டி அதன் பலனாக அவர் மீதான முதலீட்டின் விளைவு அதிகரிக்கிறது. கல்வியைப் போன்றே உடல் நலமும், நுகர்வும் முதலீடும் ஆகும். உடல்நலம், உழைப்பின் அளவையும் தரத்தையும் உயத்தவல்லது. உடல் நலம் மீதான செலவு இறப்பைக் குறைக்கிறது. பொதுவாக உடல் நலம் (சுகாதரம்) பேணுதல் அரசால் மக்களின் தேவைக்கேற்ப அளிக்கப்படவேண்டும். என்ற கருத்து நிலவுகிறது. (மக்கள் செலுத்து நிலைக்கு தகுந்தார் போல் அல்லாமல்) இதுவே 'சுகாதாரப் பொதுவுடைமை' என்று அழைக்கப்படுகிறது.

## மனித மேம்பாடு குறியீடு
## (Human Development Index-HDI)

மனித மேம்பாடு குறியீடு என்பது வாழ்க்கை மட்டத்தின் ஒரு முழு அளவாகும். 1977ம் ஆண்டின் மனித வளர்ச்சி அறிக்கையில் மனித வளர்ச்சிக்கு விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. ''மனித தெரிவுகளை விரிவாக்குவதிலும், மனித நலன்களை உயர்த்துதலும் மனித வளர்ச்சியின் மைய பொருளாகும்''. மனிதனுக்கு 3 அத்தியாவசிய தெரிவுகள் உள்ளன, அவைகள் முறையே நீண்டகால சுகவாழ்வு, அறிவுத் திறனை பெற்றுக்கொள்ளுதல், மற்றும் நல்ல வாழ்க்கை தரத்தை பெற்றுக்கொள்ள அவசியமான வளங்களை அடைதல். மனித வளர்ச்சி என்பது இத்துடன் முடிவதில்லை. அரசியல், பொருளாதாரம், சமூக சுதந்திரம் அடையவும். புத்தாக்கம் புணையும் மற்றும் உற்பத்தியை அதிகரிக்கும், வாய்ப்புக்கள் பல பெறவும், சுயமரியாதையை அனுபவிக்கவும், மனித உரிமைகளை பாதுகாத்துக் கொள்ளவும் விரும்புகிறான். மனிதனுக்கு வருமானம் மிகவும் இன்றியமையாதது என்பது உண்மையே. ஆனால் அது ஒரு வழிமட்டுமே. அன்றி, மனித மேம்பாடு என்பதுதான் முடிவாகும்.

முதல் மனித மேம்பாட்டு அறிக்கையானது 1990ம் ஆண்டு *UNDP* நிறுவனத்தால், பாகிஸ்தானின் முகஹப்–உல்–ஹக் என்ற பொருளியலறிஞரின் வழிகாட்டுதலின்படி வெளியிட்டது.

பொருளாதார வளர்ச்சி என்பது ஏழ்மையை குறைக்கும் வழிகளான வேலைவாய்ப்பை அதிகரித்தல், உற்பத்தி திறனைப் பெருக்குதல், ஏழை மக்களின் கூலியை அதிகரித்தல் போன்றவற்றை குறிக்கும். பொது வளங்களை மனித வளர்ச்சி மேம்பாட்டிற்காக செலுத்த வேண்டும். பொருளாதார வளர்ச்சியானது, அதிக உழைப்பைப் பயன்படுத்தியும், வேலைவாய்ப்பை உருவாக்கியும், மனித

திறமைகளையும், சுகாதார வசதிகளையும் பெறும் அளவில் அதிகரித்தலும் ஆகும் பொருளாதார வளர்ச்சியானது, பொருளாதார முன்னேற்றத்தை அடையச் செய்யும்.

மனித மேம்பாட்டு குறியீடு (*HDI)* அனைத்து நாடுகளையும் **0** முதல் **1** வரை மூன்று வளர்ச்சி இலக்குகளை அடிப்படையாகக் கொண்டு வரிசைப்படுத்துகிறது. மனித மேம்பாட்டு குறியீடுகள் கீழ்காணும் **3** அளவுக்கோள்களைக் கொண்டு கணக்கிடப்படுகிறது பிறப்பின் போது வாழ்நாள் எதிர்பார்ப்பின் மூலம் அளவிடப்படுகிறது.

*2.* கல்வி அடைவு நிலை – வயது வந்தோர் கல்வி **(2/3** நிறை**)** தொடக்க, இடைநிலை, மேல்நிலைக் கல்வி ஆகிய நிலைகளில் மாணவர் சேர்க்கை வீதம் **(1/3** நிறை**)** ஆகியவற்றின் மூலம் அளவிடப்படுகின்றன.

*3.* வாழ்க்கைத் தரம் – உண்மையான தலா வீத மொத்த உள்நாட்டு உற்பத்தி (*per capita GDP)* அளவிடப்படுகிறது (வாங்கும் சக்தி சமநிலை – டாலர்களில் – *PPP)* மனித மேம்பாட்டு குறியீடு அனைத்து நாடுகளையும் மூன்று பிரிவுகளாக பிரிக்கிறது.

*1.* குறைந்த மனித மேம்பாடு *(00.0 To 0.499)*

*2.* நடுத்தர மனித மேம்பாடு *(0.50 To 0.799)*

*3.* உயர்தர மனித மேம்பாடு *(0.80 To 1.0)*

*2004*-ன் மனித மேம்பாட்டு வீதத்தின்படி *(HDR)* இந்தியா நடுத்தர மனித மேம்பாட்டின் பிரிவின் கீழ் இடம் பெறுகிறது.

மனித மேம்பாடு குறியீடின் மிகப் பெரிய நன்மை யாதெனில் போதிய வருமானம் ஈட்டும் நாடுகளைவிட குறைவான வருமானம் ஈட்டும் நாடுகள் கூட மனித மேம்பாட்டை வளப்படுத்த முடியும் என்பதே ஆகும்.

மனித மேம்பாட்டு குறியீடானது, ஏனைய வளர்ச்சிக் குறியீடுகளாகிய – சுகாதாரம் மற்றும் கல்வியின் நடவடிக்கைகளைக் காட்டிலும் வருமானத்தில் உள்ள ஏற்றத் தாழ்வுகளையே குறிப்பிடுகிறது. எனவே முன்னேற்றம் என்பது மனிதனின் ஒட்டுமொத்த வளர்ச்சியே ஆகும். வெறும் உயர்மட்ட வருமானம் அன்று. பல எண்ணெய்வளம் மிக்க நாடுகள் வளர்ச்சியை பெற்றிருந்தாலும் முன்னேற்றமில்லை.

## பாலின வளர்ச்சிக் குறியீடு
## (Gender Related Development Index)

இது மனித மேம்பாட்டு குறியீட்டை கொண்டு ஆண், பெண்களுக்கிடையே உள்ள ஏற்றத்தாழ்வுகளை பிரதிபலிக்கிறது. இதில் மூன்று அளவீடுகள் சம்பந்தப்படுகின்றன. அவைகள்:

1. பெண்ணின் எதிர்பார்க்கப்பட்ட வாழ்வு காலம்

2. பெண்ணின் வயது வந்த கல்விநிலை மற்றும் மொத்த சேர்க்கை விகிதம்

3. பெண்ணின் தலா வருமானம் எனப்படும்.

## மனித ஏழ்மைக் குறியீடு (Human Povery Index-HPI)

*1997*ம் ஆண்டில் மனிதவள மேம்பாட்டு குறியீடு மனித ஏழ்மைக் குறியீட்டை அறிமுகப்படுத்தியது. இது ஆயுட்காலத்தை இழக்கச் செய்தலையும், அறிவையும் மற்றும் நல்ல வாழ்க்கைத் தரத்தின் இழப்பினையும் அளவிடுகிறது. மனிதன், நாற்பது வயதிற்கு முன் இறந்துவிடுவர் என எதிர்பார்த்தால், வயது வந்தோர் கல்வி அற்ற நிலை உயர்வாக இருந்தால், சுகாதார சேவைகள் மிக மோசமான நிலையிலிருந்தால், பாதுகாப்பான தண்ணீர் வசதி குறைவாக இருந்தால் **5** வயதிற்கு கீழ் உள்ள சத்துணவற்ற குழந்தைகளின் சதவீதம் கூடுதலாக இருப்பின் அப்போது 'மனித ஏழ்மைக் குறியீடு' *(HPI)* அதிகமாக இருக்கும். அந்த நாடு 'ஏழை நாடு' என்ற இடத்தைப் பெறும்.

மனித மேம்பாட்டு குறியீட்டின்படி, வெவ்வேறு இந்திய மாநிலங்களுக்கு *1997* ஆம் ஆண்டில் *UNFPA* நிறுவனத்தால் மனித மேம்பாட்டு குறியீடு கணக்கிடப்பட்டது. *UNFPA* நிறுவனத்தால், இந்திய திட்டக்குழு நாட்டின் மனித மேம்பாட்டு அறிக்கையை **2001–**ல் கொண்டுவந்தது. இது மாநிலங்கள் வாரியாகவும் அனைத்திந்திய மனித மேம்பாட்டு குறியீடுகளையும் தயாரித்தளித்தது. தமிழ்நாடு போன்ற சில மாநிலங்கள் கூட மனித மேம்பாடு அறிக்கையை வெளியிட்டுள்ளது.

**அட்டவணை 10.1 அங்கிகாரம் பெற்ற கல்வி நிறுவனங்களின் வளர்ச்சி 1950–51 முதல் 2003–2004 வரை (எண்ணிக்கை, ஆயிரத்தில்)**

| ஆண்டு | துவக்கப் பள்ளிகள் | உயர் துவக்கப் பள்ளிகள் | உயர்நிலை மேனிலைப் பள்ளிகள் | கல்லூரிகள் | கல்வியியல் கல்லூரிகள் மற்றும் தொழில் கல்லூரிகள் B.Ed., B.E., B.Arch., M.B.B.S., etc | பல்கலைக் கழகங்கள் |
|---|---|---|---|---|---|---|
| *1950-51* | *209.7* | *13.6* | *7.4* | *0.4* | *0.2* | *0.03* |
| *1970-71* | *408.4* | *90.6* | *37.1* | *2.3* | *1.0* | *0.08* |
| *1990-91* | *560.9* | *151.5* | *79.8* | *4.9* | *0.9* | *0.18* |
| *2000-01** | *638.7* | *206.3* | *126.1* | *7.9* | *2.2* | *0.25* |
| *2003-04** | *712.2* | *262.3* | *146.0* | *9.4* | *2.8* | *0.30* |

*தற்காலிகமானது

அட்டவணை **10.2** இந்தியா, தமிழ்நாடு – எழுத்தறிவு வீதம் **1951 – 2001**

**(சதவீதத்தில்)**

| ஆண்டு | இந்தியா | | | தமிழ்நாடு | | |
|---|---|---|---|---|---|---|
| | ஆண்கள் | பெண்கள் | மொத்தம் | ஆண்கள் | பெண்கள் | மொத்தம் |
| *1951* | *24.95* | *7.93* | *16.67* | *31.73* | *10.06* | *20.86* |
| *1971* | *39.52* | *18.70* | *29.48* | *51.78* | *26.56* | *39.46* |
| *1991* | *63.90* | *39.40* | *52.10* | *74.90* | *52.30* | *63.70* |
| *2001* | *75.85* | *54.16* | *65.38* | *82.33* | *64.55* | *73.47* |

ஆதாரம் :

1. கல்வித்துறை, புள்ளியியல் பிரிவு, தமிழ்நாடு அரசு.
2. இந்தியப் பொருளாதாரத்தை கண்காணிக்கும் மையம், இந்தியப் பொருளாதாரத்தைப்பற்றிய அடிப்படைப் புள்ளியியல், பகுதி–**2**, மாநிலங்கள் செப்டம்பர் **1992**.
3. இந்திய மக்கள் தொகைக் கணக்கெடுப்பு **2001**

# பயிற்சி

## பகுதி – அ

**I. சரியான விடையைத் தேர்ந்தெடுக்கவும் :**

1. இதில் முதலீடு செய்வதால் மனித மூலதனத்தை அதிகரிக்கலாம்.

அ. கல்வி ஆ. உடல்நலம்

இ. குடிப்பெயர்ச்சி ஈ. அனைத்தும்

2. கல்விப் பற்றிய பொருளியலை உருவாக்கியவர்

அ. மார்ஷல்

ஆ. காரல் மார்க்ஸ்

இ. ஸ்கல்ட்ஸ்

ஈ. கீன்சு

3. கல்வி என்பது ஒரு

அ. நுகர்வுப் பண்டம்

ஆ. மூலதனப் பண்டம்

இ. எதுவுமில்லை

ஈ. இரண்டும்

4. இந்திய மாணவர்களின் எண்ணிக்கை இந்நாட்டின் மக்கள் தொகையைவிட அதிகம்

அ. இங்கிலாந்து

ஆ. பிரான்சு

இ. கனடா மற்றும் நார்வே

ஈ. மேற்கண்ட அனைத்து நாடுகளும்

5. உயர் கல்வியைப் பெரும் அதிக விழுக்காடு மாணவர்கள் இப்பிரிவைச் சார்ந்தவர்கள்

அ. உயர் வருமானப் பிரிவினர்

ஆ. நடுத்தர வருமானப் பிரிவினர்

இ. குறைந்த வருமானப் பிரிவினர்

ஈ. அனைத்து வருமானப் பிரிவினர்

**II. கோடிட்ட இடங்களை நிரப்புக.**

6. மனித மூலதன இருப்பானது ஒரு நாட்டின் மனிதவள மேம்பாட்டு ……… காட்டுவதாகும்.

7. மனித மூலதனத்தை அதிகரிக்கும் அனைத்து காரணிகளுக்குள்ளும் ………… மிக முக்கியமானது.

8. மனிதவள மேம்பாட்டிற்கும் ………… வளர்ச்சிக்குமிடையே நெருங்கிய தொடர்பு உள்ளது.

9. இந்தியக் கல்வி அமைப்பின் மிகப்பெரிய தோல்வி, அனைவருக்கும் ………. என்ற நோக்கத்தோடு தொடர்புடையது.

10. ……….. தொழிலாளர்கள் இருப்பதே அனைவருக்கும் தொடக்கக் கல்வி இலக்கை அடைய இயலாமைக்கான முக்கிய காரணமாகும்.

**III. பொருத்துக.**

| | |
|---|---|
| 11. கேரளம் | அ. பாலின வேறுபாட்டை குறைத்தல் |
| 12. தமிழ்நாடு | ஆ. தொழில்நுட்ப கல்வியின் ஆதிக்கம் |
| 13. மாவட்ட தொடக்க கல்வி திட்டம் | இ. சிறப்பு பள்ளி சுகாதாரத் திட்டம் |
| 14. சுயநிதிக் கல்லூரிகள் | ஈ. கல்வியில் அதிக வளர்ச்சியடைந்த மாநிலம் |
| 15. வாழ்வொளி திட்டம் | உ. அருகில் பள்ளி இருப்பது |

**IV. ஓரிரு வார்த்தைகளில் விடை தருக.**

16. மனித மூலதன கோட்பாடு எந்த ஆண்டில் அறிமுகப்படுத்தப்பட்டது?

17. மனித நிலை சேர்க்கை வீதத்திற்கும் மொத்த நிகர உற்பத்திக்கும் இடையே உள்ள தொடர்பு அதிகமா? அல்லது குறைவா?

18. மனித வள மேம்பாட்டு கோட்பாடுகள் கல்வித் திட்டத்திற்கு பொதுவான வழியை குறிக்குமா?

19. கல்வியில் வெடிப்பு இந்தியாவில் ஏற்பட்டுள்ளது என்பதை ஏற்றுக் கொள்கிறீர்களா?

20. தேசிய கல்விக் கொள்கை எந்த ஆண்டு உருவாக்கப்பட்டது?

## பகுதி–ஆ

**V. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடைதருக.**

21. மனித வள மேம்பாட்டில் இலக்கணத்தைக் கூறுக.

22. மனித மூலதனம் என்றால் என்ன?

23. மனிதவள மேம்பாட்டுக் குறியீடு எவ்வாறு கணக்கிடப்படுகிறது?

24. மனித வளர்ச்சி என்றால் என்ன?

25. பாலின குறியீட்டென் எவ்வாறு கணக்கிடப்படுகிறது?

## பகுதி–இ

**VI. பின்வரும் வினாக்களுக்கு ஒரு பக்க அளவில் விடைதருக.**

26. ஹர்பிசன் மற்றும் மேயரில் ஆகியோரின் மனித வளக் குறியீடுகள் யாவை?

27. சிறு குறிப்பு வரைக.

   1. மழலைக் குழந்தைகள் பராமரிப்புக் கூட்டம்

   2. அறிவொளித் திட்டம்

28. ‘மனித ஏழ்மைக் குறியீட்டை’ விளக்குக.

29. மனித வள மேம்பாட்டு யுக்தியை கடைப்பிடிப்பதில் அரசு மேற்கொள்ள வேண்டிய அடிப்படைத் தெரிவுகள் யாவை?

## பகுதி–ஈ

**VII. பின்வரும் வினாக்களுக்கு மூன்று பக்க அளவில் விடைதருக.**

*30.* மனித வள மேம்பாட்டிற்கும் பொருளாதார வளர்ச்சிக்கும் இடையே உள்ள தொடர்பினை ஆராய்க.

*31.* மனித சக்தி பல்வேறு அணுகுமுறைகளை விவரி.

*32.* *1951* ஆம் ஆண்டு முதல் இந்தியாவின் கல்வி வளர்ச்சிப் பற்றி விளக்கு வரைக.

*33.* தமிழ்நாட்டின் கல்வி வளர்ச்சிப் பற்றி விளக்குக.

*34.* மனித வள மேம்பாட்டுக் குறியீட்டின் பொருளையும், முக்கியத்துவத்தையும் விளக்கி வரைக.

# பாடம் – 11

# புள்ளியியல் ஆய்வும், மையப் போக்கின் அளவைகளும்

# (Statistical Analysis and Measures of Central Tendency)

புள்ளியியல் என்ற வார்த்தை இலத்தின் வார்த்தையாகிய '*status*' என்பதிலிருந்து பெறப்பட்டது. '*Status*' என்ற சொல்லுக்கு அரசியல் ரீதியாக மாநிலம் என்று பொருள். அக்காலத்தில் புள்ளியியல் என்பது ஒரு அரசோ அல்லது அரசர்களே திரட்டிய விவரங்களை கணக்கிடல் ஆகும். தற்காலங்களில் புள்ளியியல் என்பது விவரங்களை சேகரித்தல், வகைப்படுத்துதல், விளக்கம் தருதல், பகுப்பாய்வு செய்தல், ஒப்பிட்டு முடிவுகாணுதல் ஆகியன பற்றிய அறிவியலாகும். சுருக்கமாக கூறினால், புள்ளியல் என்பது எண்ணிக்கை அளவை, கணக்கீட்டு விளக்கம் அளித்தலைச் சார்ந்ததாகும்.

**இலக்கணம்**

*1.* பேராசிரியர் ஹொரேஸ் செக்ரிஸ்ட் *(Prof. Horace Secrist)* என்பவரின் வரையறையின்படி, "முன்கூட்டியே நிர்ணயம் செய்யப்பட்ட குறிக்கோளுக்காக பல்வேறு காரணங்களால் பெருமளவு பாதிக்கப்பட்ட விவரங்களை, ஏற்கும் தரத்திற்குத் துல்லியமாக அறிவியல் முறையில் எண்ணிக்கையாகக் கணக்கிட்டோ மதிப்பீடு செய்தோ ஒன்றுடனொன்று தொடர்பு கொண்ட விவரங்களின் ஒரு தொகுப்பே புள்ளியலாகும்."

*2.* கிராக்ஸ்டன் மற்றும் கௌடன் என்பவர்கள் புள்ளியில் என்பது "விவரங்கள் சேகரித்தல், வகைப்படுத்துதல், விளக்கம் தருதல், பகுப்பாய்வு செய்தல், ஒப்பிட்டு முடிவு காணுதல் ஆகியன பற்றிய அறிவியலாகும்" என வரைவிலக்கணம் தந்துள்ளார்.

**புள்ளி விவரங்களின் தன்மைகள் (Nature of Data)**

புள்ளியியல் என்பது, புள்ளி விவரங்களையும், உண்மைகளையும்

குறிக்கும். இதன் பொருளானது பாலினம், சமயம், வருமானம், மக்கள்தொகை, இலாபம் போன்றவற்றோடு தொடர்புடையதாகும். புள்ளி விவரம் 2 வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவைகள்

*1.* பண்பு வாரியான *(Qualitative data)* புள்ளிவிவரம் 2. எண்ணளவை *(Quantitative data)* வாரியான புள்ளிவிவரம் என இரு வகைப்படும்.

## I. பண்பு வாரியான புள்ளிவிவரம்
## (Qualitiative Data)

பண்பு வாரியான புள்ளிவிவரம் என்பது, பண்பு வாரியாக வகைபடுவதாகும். இவைகள் எண்ணிக்கையின் அளவிற்குட்பட்டதல்ல. (எ.கா.) பாலினம், சமயம், பிறப்பிடம்.

## II. எண்ணளவை வாரியான புள்ளிவிவரம்
## (Quantitative data)

இவை அளவிடப்படக்கூடிய எண்ணிக்கைகளைச் சார்ந்தது. (எ.கா.) வயது, குடும்ப நபர்கள், வருமானம் மற்றும் சேமிப்பு.

பகுக்கப்படாத / வகைப்படுத்தப்படாத புள்ளிவிவரம் (*Raw Data)*

பகுபடாத புள்ளிவிவரங்கள் என்பது சேகரித்த புள்ளிவிவரங்களையும் உண்மையையும் மூலப் படிவத்தில் உள்ளவாறே அளித்தலாகும்.

| | | | | |
|---|---|---|---|---|
| *52* | *61* | *59* | *55* | *63* |
| *83* | *90* | *81* | *77* | *74* |
| *50* | *45* | *42* | *46* | *39* |
| *29* | *31* | *29* | *31* | *30* |
| *48* | *52* | *76* | *36* | *48* |

தொடர்ச்சி...

...தொடர்ச்சி

| | | | | |
|---|---|---|---|---|
| *70* | *59* | *77* | *81* | *83* |
| *65* | *33* | *76* | *92* | *77* |
| *29* | *38* | *52* | *64* | *86* |
| *30* | *29* | *48* | *54* | *55* |
| *64* | *59* | *72* | *65* | *64* |

(எ.கா.) 50 மாணவர்களின் மதிப்பெண் பட்டியல்

### நிகழ்வெண் பரவல்
### (Frequency distribution)

நிகழ்வெண் பரவல் என்பது, தொகுக்கப்பட்ட அட்டவணை எனலாம். இதில், வகைப்படுத்தப்படாத புள்ளி விவரங்கள், பிரிவுகளாகவும், மற்றும் அலைவெண்களாகவும் வரிசைப்படுத்தப்பட்டிருக்கும். எனவே இதனை வகைப்படுத்தப்பட்ட புள்ளி விவரம் என்பர். வகைப்படுத்தப்பட்ட புள்ளி விவரமானது 2 வகைப்படும். அவைகள்

1. தொடர்ச்சியற்ற புள்ளி விவரங்கள் (*Discrete data)*

2. தொடர்ச்சியான புள்ளி விவரங்கள் (*Continuous data)*

### தொடர்ச்சியற்ற புள்ளி விவரங்கள்

ஒரு குறிப்பிட்ட மதிப்புக்களான, முழு எண்களை கொண்டுள்ள புள்ளி விவரங்களை தொடர்ச்சியற்ற புள்ளிவிவரங்கள் எனலாம். எ.கா : பள்ளியிலுள்ள வகுப்பறைகள், வகுப்பிலுள்ள மாணவர்கள் தொடர்ச்சி அற்ற எண்கள் பகுதி பின்னங்களான மதிப்புக்களை கணக்கில் கொள்ளாது.

### தொடர்ச்சியான புள்ளி விவரங்கள்

ஒரு குறிப்பிட்ட இடைவெளிக்குள் முடிந்த அளவிற்கு எந்த மதிப்பையும், ஏற்கக்கூடியது தொடர்புள்ளி விவரங்கள் எடு.கா. உயரம் செ.மீல், எடை கி.கிராமில், வருமானம் – ரூபாயில்.

### புள்ளி விவரங்களின் ஆதாரங்கள்

### (Sources of data)

புள்ளி விவரங்களை சேகரிப்பதில் இரண்டு விதமான அடிப்படை ஆதாரங்கள் உள்ளன. அவையாவன.

அ) முதல்நிலை ஆதாரங்கள் மற்றும்

ஆ) இரண்டாம் நிலை ஆதாரங்கள்

முதன்முதலாக சேகரிக்கப்படும் ஆதாரங்கள் முதன்நிலை புள்ளிவிவரங்களாகும். இரண்டாம் நிலை ஆதாரங்களிலிருந்து சேகரிக்கப்படும் புள்ளி விவரங்கள் இரண்டாம் நிலை புள்ளி விவரங்களாகும்.

### முதல்நிலைப் புள்ளி விவரங்கள்

### (Primary Data)

முதன் முதலாக, ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக சேகரிக்கப்படும் புள்ளி விவரங்கள் முதல் நிலைப் புள்ளி விவரங்கள் எனப்படும். அவைகள் உண்மை இயல்பை கொண்டதாகும். தனி நபர்களாலோ, நிறுவனங்களாலோ, அல்லது அரசாங்கத்தாலோ ஆராய்ச்சி நோக்குடனோ அல்லது கொள்கைகளை தீர்மானிக்கவோ இத்தகைய புள்ளி விவரங்கள் சேகரிக்கப்படுகின்றன. எ.கா. மக்கள்தொகை புள்ளி விவரங்களை மக்கள் கணக்கெடுப்பு, அலுவலக ஆணையாளர் அவர்களால் சேகரிக்கப்படுதல்.

### இரண்டாம் நிலைப் புள்ளி விவரங்கள்

### (Secondary Data)

இவைகள் முதன்முதலாக சேகரிக்கப் பட்டவைகள் அல்ல. இவைகள் வெளியிடப்பட்ட (*published)* அல்லது வெளிடப்படாத (*unpublished)* ஆதாரங்கள் மூலம் கிடைக்கப்பெறுகின்றன. அறிக்கைகள் மற்றும் அலுவலக வெளியீடுகள் வெளியிடப்பட்ட ஆதாரங்களாகும். எடுத்துக்காட்டாக வங்கிகளின் ஆண்டறிக்கைகள், மக்கள்தொகை கணக்கெடுப்பு, இந்தியப் பொருளாதார ஆய்வுகள். வெளியிடப்படாத ஆதாரங்களில் அரசின் பதிவேடுகள், ஆராய்ச்சிப் பற்றிய குறிப்பேடுகள் முதலியன அடங்கும். எ.கா. ஆராய்ச்சியாளர்கள் பயன்படுத்தும் புள்ளி விபரங்கள்.

மக்கள்தொகைக் கணப்பெடுப்பின் புள்ளி விவரங்கள், அவற்றை சேகரித்த ஆணையர் அவர்களுக்கு முதல் நிலைப் புள்ளி விவரங்களாகும். மற்றவர்களுக்கோ இவ்விவரங்கள் இரண்டாம் நிலைப் புள்ளி விவரங்களாக அமைகின்றன.

**புள்ளி விவரங்களை வகைப்படுத்துதல்**

**(Classification of Data)**

வகைப்படுத்துதல் என்பது சேகரிக்கப்பட்ட விவரங்களை பிரிவுகளாகவும், உட்பிரிவுகளாகவும் அவற்றின் பொதுவான இயல்புகளுக்கேற்ப வரிசைப்படுத்தும் வழிமுறைகளாகும். இது ஒன்றோடொன்று சம்பந்தப்பட்ட உண்மையான தகவல்களை பிரிவுகளாக ஒன்று சேர்த்தலாகும். எ.கா. தபால் நிலையத்தில் தபால்களை பிரித்தெடுத்தல்.

**வகைப்படுத்துதலின் வகைகள்**

**(Types of Classification)**

வகைப்படுத்துதல் நான்கு வகைப்படும். அவையாவன :

1. இட வாரியாக வகைப்படுத்துதல் (*geographical)*
2. கால வாரியாக வகைப்படுத்துதல் (*chronological)*
3. பண்பு வாரியாக வகைப்படுத்துதல் (*qualitative)*
4. எண்ணளவை வாரியாக வகைப்படுத்துதல் (*quantitative)*

**1. இட வாரியாக வகைப்படுத்துதல்**

அமைந்துள்ள இடம் அல்லது நிலபரப்பைப் பொறுத்து புள்ளி விவரங்கள் வகைப்படுத்தப் படுகின்றன. இதுவே இட வாரியாக வகைப்படுத்துதல் எனப்படும்.

| மாநிலங்கள் | உணவு உற்பத்தி (000 டன்களில்) |
|---|---|
| தமிழ்நாடு | *4500* |
| கர்னாடகம் | *4200* |
| ஆந்திர பிரதேசம் | *3600* |

எ.கா. : இந்தியாவின் பல்வேறு மாநிலங்களில் உணவுப் பொருள் உற்பத்தியை வகைபடுத்துதல்.

**2. கால வாரியாக வகைப்படுத்துதல்**

காலத்தின் அடிப்படையில் அதாவது மாதங்கள், வருடங்களாக வகைப்படுத்துதல் கால வாரியாக வகைப்படுத்துதலாகும்.

| ஆண்டு | இலாபம் 000 ரூபாயில் |
|---|---|
| *2001* | *72* |
| *2002* | *85* |
| *2003* | *92* |
| *2004* | *96* |
| *2005* | *95* |

உம்: ஒரு கம்பெனியின் 5 ஆண்டுகால இலாபம் 2001லிருந்து 2005 வரை

**3. பண்பு வாரியாக வகைப்படுத்துதல்**

இயற்பண்பு அல்லது தர வாரியாக வகைப்படுத்தல் பண்பு வாரியாக வகைப்படுத்தல் எனப்படும். பாலினம், நிறம், கல்வி அறிவு மற்றும் மதம் போன்றவற்றின் அடிப்படையில் புள்ளி விவரங்களை வகைப்படுத்தல்,



இவ்வகை வகைப்படுத்துதலில், பண்புகளை அளவிட முடியாது. இந்த ஆராய்ச்சி அலகுகள் வகைப்படுத்திய பிரிவில் உள்ளதா இல்லையா என்று மட்டும் தெரியவரும். எ.கா. : ஆய்வில் உள்ள மக்களை கீழ்காணும் வகையில் வகைப்படுத்தலாம்.

**4. எண்ணைளவை வாரியாக**

எண்ணைளவை வாரியாக வகைப்படுத்துதல் என்பது சில இயல்புகளை அடிப்படையாகக் கொண்டு, வகைப்படுத்துதல் ஆகும். எண்ணிக்கை அளவுகளான பருமன், உயரம், வருமானம் இலாபம் ஆகியவற்றை வகைப்படுத்தலாகும். எ.கா. : பள்ளி மாணவர்களை எடை வாரியாக, கீழ்கண்ட முறையில் வகைப்படுத்தலாம்.

| எடை (கிலோ) | மாணவரின் எண்ணிக்கை |
|---|---|
| *40-50* | *50* |
| *50-60* | *200* |
| *60-70* | *300* |
| *70-80* | *100* |
| *80-90* | *30* |
| *90-100* | *20* |
| மொத்தம் | *700* |

எண்ணளவை வாரியாக வகைப்படுத்துதலில் இரண்டு வகைகள் உள்ளன. அவை யாவன.

*1.* தொடர்ச்சியற்ற நிகழ்வெண் பரவல்
(*Discrete frequency distribution)*

*2.* தொடர் நிகழ்வெண் பரவல்
(*Continuous frequency distribution)*

இந்த வகைப்படுத்துதலில் இரண்டு கூறுகள் உள்ளன.

*i.* மாறிகள் (*Variables)*

*ii.* நிகழ்வெண் (*frequency)*

**மாறிகள்**

மாறிகள் என்பன இயல்புகளின் மாறுபடுகின்ற பரிமாணம் அல்லது மாறுபடுகின்ற அளவை குறிக்கும் எ.கா. : மாணவர்களின் எடை. ஒரு மாறி, தொடர்மாறியாகவோ அல்லது தொடர்ச்சியற்ற மாறியாகவோ இருக்கக்கூடும்.

**நிகழ்வெண்**

மாறிகள் திரும்பத் திரும்ப பல முறை வந்தால் அது நிகழ்வெண் எனப்படும். எடுத்துக்காட்டாக 50 மாணவர்களின் எடை 60 கிலோவாக உள்ளது. இதில் 50 மாணவர்கள் – என்பதே நிகழ்வெண் ஆகும்.

**நிகழ்வெண் பரவல்**
**(Frequency Distribution)**

நிகழ்வெண் பரவல் என்பது அளவிடக் கூடிய மாறிகளின் அடிப்படையில் வகைப்படுத்தப்பட்ட புள்ளிவிவரங்களான விலை, எடை, உயரம் கூலி போன்றவைகளாகும்.

பின்வரும் இரண்டு எடுத்துக்காட்டுகளில் தொடர் மற்றும் தொடர்ச்சியற்ற நிகழ்வெண் பரவல்கள் உள்ளன.

தொடர் நிகழ்வெண் பரவலை அமைக்கும்போது கீழ்காணும் நுணுக்கமான பதங்கள் முக்கியமானவை.

**அ. பிரிவு – வரம்பு (Class - Limit)**

ஒரு பிரிவின் சேர்க்கப்படக்கூடிய குறைந்த மற்றும் அதிகமான வரம்பைக் கொண்டதே பிரிவு வரம்பு எனப்படும். எடுத்துக்காட்டாக 40–50 என்ற பிரிவை எடுத்துக் கொண்டால் 40 என்பது குறைந்த மதிப்பாகவும் 50 என்பது அதிக மதிப்பாகவும் இருக்கிறது. இந்த பிரிவில் 40க்கு குறைவாகவோ அல்லது 50க்கு அதிகமாகவோ மதிப்புகள் இருக்க இயலாது. எனவே 40 என்பது கீழ்வரம்பாகவும் 50 என்பது மேல் வரம்பாகவும் உள்ளது.

| தொடர்ச்சியற்ற நிகழ்வெண் பரவல் | | தொடர் நிகழ்வெண் பரவல் | |
|---|---|---|---|
| குழந்தைகளின் எண்ணிக்கை | குடும்பத்தின் எண்ணிக்கை | எடை (கிலோ) | மாணவர்களின் எண்ணிக்கை |
| *0* | *10* | *40-50* | *50* |
| *1* | *20* | *50-60* | *200* |
| *2* | *30* | *60-70* | *300* |
| *3* | *20* | *70-80* | *100* |
| *4* | *12* | *80-90* | *30* |
| *5* | *8* | *90-100* | *20* |
| மொத்தம் | *100* | மொத்தம் | *700* |

## ஆ. பிரிவு இடைவெளி (Class - Interval)

கீழ் வரம்பு மற்றும் மேல் வரம்பிற்கும் இடையே உள்ள வித்தியாசமே பிரிவு இடைவெளி எனப்படும். எடுத்துக்காட்டாக *40-50* என்ற பிரிவில் பிரிவு இடைவெளி 10 ஆகும். (50–40 = 10)

## இ. பிரிவு – நிகழ்வெண் (Class - frequency)

ஒரு பிரிவில் குறிப்பிட்ட உற்றுநோக்கல் (*observation)* எத்தனை முறை நிகழ்ந்துள்ளது என்ற எண்ணிக்கையே பிரிவு நிகழ்வெண் எனப்படும்.

| வருமானம் ரூபாயில் | நபரின் எண்ணிக்கை |
|---|---|
| *1000 - 2000* | *50* |

மேற்கண்ட எடுத்துக்காட்டில் 50 என்பது பிரிவு – நிகழ்வெண் ஆகும். 50 நபர்கள் ரூ.1000 – முதல் ரூ.2000 வரையிலான வருமானம் ஈட்டுபவர்கள் என்ற பொருள்படும்.

## ஈ. பிரிவின் மையம் (Class - midpoint)

பிரிவின் மையம் கீழ்கண்டவாறு கணக்கிடப்படுகிறது. பிரிவின் மையம் = பிரிவின் கீழ் வரம்பு + பிரிவின் மேல் வரம்பு/2 எடுத்துக்காட்டாக 1000 – 2000 என்ற பிரிவின் பிரிவில் மையம் = *1000 + 2000/2 = 1500*

## அட்டவணைப்படுத்துதல் (Tabulation)

சேகரித்த புள்ளி விவரங்களை முறையான வகையில் பத்திகளாகவும் வரிசைகளாகவும் அமைப்பதையே அட்டவணை என்று அழைக்கிறோம்.

பத்திகள் என்பன படுக்கையான அமைப்புகள். வரிசைகள் என்பன செங்குத்தான அமைப்புகள் ஆகும்.

## வரிசைப்படுத்துதலுக்கும் அட்டவணைப் படுத்துதலுக்குமுள்ள வேறுபாடுகள்

1. வரிசைப்படுத்துதல் என்பது ஒரே பண்புகளையுடைய புள்ளி விவரங்களை ஒன்று சேர்த்தல். அட்டவணைப்படுத்துதல் என்பது வரிசைப் படுத்தப்பட்ட புள்ளி விவரங்களை பத்திகளாகவும் வரிசைகளாகவும் அமைத்தலாகும்.

2. வரிசைப்படுத்துதல் என்பது அட்டவணைப்படுத்துதலுக்கு முதல் படியாகும். அட்டவணைப் படுத்துதல் என்பது வரிசைப்படுத்தப்பட்ட பிறகே தொடங்குவதாகும்.

3. வரிசைப்படுத்துதலின் நோக்கம் அட்டவணையைத் தயாரிப்பதே. ஆனால் அட்டவணைப் படுத்துதல் என்பது புள்ளிவிவரங்களை ஆய்வு செய்வதற்காக அமைக்கப் படுகிறது.

அட்டவணைப் படுத்துவதின் விதிகள் : அட்டவணைப் படுத்தும் போது கீழ்காணும் விதிகள் பின்பற்றப்பட வேண்டும்.

*i.* **எண்ணிக்கை –** அட்டவணையை கண்டுபிடிக்க அட்டவணைகளை எண் வாரியாக வரிசைப்படுத்த வேண்டும்.

*ii.* **தலைப்பு –** அட்டவணைக்கு தலைப்பு இருக்க வேண்டும். இத்தலைப்பு விளக்கமானதாகவும், சுறுக்கமானதாவுகம் சுயவிளக்கம் கொண்டதாயும்

இருக்க வேண்டும். இது பொருளடக்கத்தையும் அட்டவணையின் நோக்கத்தையும் உணர்த்த வேண்டும்.

*iii.* **வரிசைகளின் தலைப்பும் (Stubs & Captions)** பத்திகளின் தலைப்பும் முறையாக அளிக்கப்பட வேண்டும். அவை விளக்கமாகவும் சுருக்கமாகவும் இருக்க வேண்டும்.

*iv.* **அட்டவணையின் வடிவம் :** அட்டவணையானது எண்ணிக்கை தகவல்களை உள்ளடக்கியது. இதுவே அட்டவணையின் முக்கியமான பகுதியாகும். இதில் அவசியமான விவரங்களே இடம் பெறவேண்டும். அதிக விவரங்களை அட்டவணையில் அடைத்தல் கூடாது.

*v.* **இடைவெளி விடுதல் :** வெவ்வேறான புள்ளி விவரங்களை அட்டவணைப்படுத்தும்போது தேவையான இடைவெளி இருக்க வேண்டும். புள்ளிவிரங்களை எளிதாக புரிந்துக்கொள்ள இது உதவும். சரியான இடைவெளி விடுதல் பார்ப்பதற்கு அழகுடன் விளங்கும்.

*vi.* **மொத்தம் :** ஒவ்வொரு வரிசைக்கும், பத்திக்கும் 'மொத்தம்' (*total)* கணக்கிட்டு எழுதப்பட வேண்டும்.

*vii.* **தலைப்பு குறிப்பு (head-note) :** இது அட்டவணையில் அளிக்கப்பட்ட தகவலின் சுருக்க விளக்கமாகும். இது தலைப்பிற்கு கீழ் அடைப்புக்குறிகளுக்குள் கொடுக்கப்பட வேண்டும்.

*viii.* **அடிக்குறிப்பு (Foot-note) :** அட்டவணையில் குறிப்பிடப்பட்ட ஏதேனும் ஒரு கருத்திற்கு கூடுதலான விளக்கம் தேவைப்பட்டால், அதனை அட்டவணைக்குப் பிறகு அளிக்கப்பட வேண்டும்.

*ix.* **ஆதாரம் :** ஆதாரம், அட்டவணைக்கு மிக முக்கியமானது. ஆதாரம் என்பது யாரிடமிருந்து, எவ்விடமிருந்து அட்டவணையில் கொடுக்கப்பட்ட விவரங்கள் பெறப்பட்டன என்பதை குறிக்கும். இது அட்டவணையின் நம்பகத்தன்மையை உறுதிப்படுத்துகிறது.

அட்டவணையின் மாதிரிப் படிவம் பின்வருமாறு:

**அட்டவணை மாதிரி**

அட்டவணை எண் :

அட்டவணையின் தலைப்பு :

(தலைப்புக் குறிப்பு)

பத்தியின் தலைப்பு தலைப்பு

| அடிக் குறிப்பு : | |
|---|---|
| தொடர் வரிசை | பொருள் |

ஆதாரம் :

விளக்கப்படங்களும் வரைபடங்களும் *(Diagrams & Graphs)* விளக்கப்படங்கள் மற்றும் வரைபடங்கள் வாயிலாக, புள்ளிவிவர முடிவுகளை கவர்ச்சிகரமான முறையில் வெளியிட முடியும்.

**விளக்கப்படங்கள் மற்றும் வரை படங்களின் முக்கியத்துவம்**

இவைகள் கீழ்கண்ட காரணங்களினால் மிகமிகப் பயனுள்ளவைகளாக இருக்கின்றன.

1. முழுப் புள்ளி விவரங்களும் விளக்கமான *(birds-eye)* முறையில் வழங்கப்படுகிறது. இதன் மூலமாக அளிக்கப்பட்ட விவரங்கள் எல்லோராலும் புரிந்து கொள்ள இயலும்.

2. அவைகள் கண்களைக் கவரக்கூடியதாக இருக்கிறது.

3. அவைகள் மனதில் எளிதில் பதியக்கூடிய தன்மை வாய்ந்தது.

4. புள்ளி விவரங்களை ஒப்பிட்டுப்பார்க்க உதவுகிறது.

**விளக்கப்படத்திற்கும் வரைபடத்திற்குமுள்ள வேறுபாடுகள்**

1. விளக்கப்படங்கள் வெற்றுத்தாளில் வரையப்படுகின்றன. வரைபடங்கள் வரைபடத்தாளில் வரையப்படுகின்றன.

2. விளக்கப்படங்கள் இரண்டு மாறிகளின் கணக்கியல் தொடர்பினை குறிப்பிடவில்லை.

   வரைபடங்கள் இரண்டு மாறிகளுக்கிடையேயான கணக்கியல் தொடர்பினை குறிப்பிடுகின்றது. இவைகள் ஒப்பிடுவதற்கு பயன்படுகிறது.

3. விளக்கப்படங்கள் கண்களை கவரக்கூடியது. எனவே அவைகளை பொது மக்களுக்கு விளம்பரம் செய்யவும் பிரகடனப் படுத்தவும் பயன்படுகிறது. இவைகள் ஆராய்ச்சிக்குப் பயன்படுவதில்லை. ஆனால் வரைபடங்கள் ஆராய்ச்சிக்குப் பெரிதும் பயன்படுகிறது.

**விளக்கப் படங்களின் வகைகள்**
**(Types of Diagrams)**

விளக்கப் படங்கள் கீழ்க்கண்ட முக்கிய மூன்று வகைப்படும்.

1. பட்டை விளக்கப்படம்

2. பை அல்லது வட்ட விளக்கப்படும்

3. உருவப்படங்கள் மற்றும் நிலவரைபடம்

**1. பட்டை விளக்கப்படம்**
**(Bar Diagram)**

இது ஒரு பரிமாண விக்கப்படமாகும். இதில் பட்டைகளின் நீளம் மட்டுமே கருத்தில் கொள்ளப்படுகிறது. அகலம் கணக்கில் கொள்ளப்படுவதில்லை.

**பட்டை விளக்கப்படம் பலவகைப்படும் அவை யாவன**

1. தனிப்பட்டை விளக்கப்படம் (*Simple bar diagram)*

*2.* கூறுப்பட்டை விளக்கப்படம் (உட்பிரிவுகளாக பிரிக்கப்பட்ட)
(*Sub-divided bar diagram)*

*3.* கூட்டுப்பட்டை விளக்கப்படம் *(Multiple bar diagram)*

## 1. தனிப்பட்டை விளக்கப்படம்

தனிப்பட்டை விளக்கப்படம், ஒரே ஒரு மாறியை (*variable)* குறிப்பதாகும். (எ.கா.) விற்பனை எண்ணிக்கை, உயரம், மாணவர்களின் எடை, உற்பத்தி மற்றும் மக்கள்தொகை போன்றவையாகும். தனிப்பட்டையில் பட்டையின் உயரமானது மாறியின் பரிமாணத்தை குறிக்கிறது.

விளக்கம் 1:

தனிப்பட்டை விளக்கப்படத்தின் அட்டவணை

| ஆண்டு | 2001 | 2002 | 2003 | 2004 | 2005 | 2006 |
|---|---|---|---|---|---|---|
| கல்லூரி மாணவர்களின் எண்ணிக்கை | *1000* | *1500* | *2000* | *2500* | *2400* | *2200* |

தனிப்பட்டை விளக்கப்படம்



**2. கூறுப்பட்டை விளக்கப்படம்** (உட்பிரிவுகளாக பிரிக்கப்பட்ட விளக்கப்படம்)

இந்த கூறுப்பட்டை விளக்கப்படத்தில், விளக்கப்படமானது பல உட்கூறுகளாக பிரிக்கப்படுகிறது. (எ.கா.) பல்வேறு கல்லூரிகளில் *B.A., B.Sc., B.Com.*

| Year | மாணவர்களின் எண்ணிக்கை | | | Total |
|---|---|---|---|---|
| | B.A. | B.Sc. | B.Com. | |
| 2001 | 600 | 300 | 100 | 1000 |
| 2002 | 800 | 500 | 200 | 1500 |
| 2003 | 1100 | 600 | 300 | 2000 |
| 2004 | 1400 | 750 | 350 | 2500 |
| 2005 | 1300 | 800 | 300 | 2400 |
| 2006 | 1000 | 900 | 300 | 2200 |

**கூறுபட்டை (உட்கூறுகள்) விளக்கப்படம்**



ஆகிய பட்டப்படிப்புக்களில் மாணவர்களின் எண்ணிக்கைகளை குறிப்பதாகும். இங்கு பட்டப்படிப்புக்கள் உட்கூறுகளாகும். பல்வேறு உட்பிரிவுகளை வேறுபடுத்தி காட்டுவதற்காக பல வர்ணங்களை தீட்டியோ, நிழலிட்டோ பயன்படுத்தலாம். குறியீடோ (அ) குறிப்போ இதனை வேறுபடுத்துவதற்காக பயன்படுத்தவேண்டும்.

### 3. கூட்டுப்பட்டை விளக்கப்படம்

இரண்டோ (அ) அதற்கு மேற்பட்ட, சார்ந்த விவரங்கள் கூட்டுப்பட்டை விளக்கப்படத்தில் குறிக்கப்பட்டிருக்கும். ஒவ்வொரு நிகழ்வும் ஒரு பட்டை விளக்கப்படத்தால் குறிக்கப்படும். ஒன்றுக்கு மேற்பட்ட நிகழ்வுகள் குறிக்கப்படுவதால், பல வர்ணங்களும், பல நிழல்களும் பயன்படுத்தப்படுகின்றன. இவ்வேறுபாடுகளை காண்பிக்க ஒரு குறியீடு விவரிக்கப்படுகிறது.

### விளக்கம் 3 கூட்டுப்பட்டை விளக்கப்படம்

விற்பனை, மற்றும் இலாபம் கூட்டுப்பட்டை விளக்கப்படத்தால் விளக்கப்பட்டுள்ளது

**கூட்டுப்பட்டை விளக்கப்படம்**

| ஆண்டு | விற்பனை (ரூபாய் 000'ல்) | இலாபம் (ரூபாய் 000'ல்) |
|---|---|---|
| *2001* | *120* | *40* |
| *2002* | *130* | *50* |
| *2003* | *140* | *70* |
| *2004* | *160* | *90* |
| *2005* | *200* | *100* |

**இரண்டோ (அ) அதற்கு மேற்பட்ட, சார்ந்த விவரங்கள் கூட்டுப்பட்டை விளக்கப்படத்தில்**




**வட்ட விளக்கப்படம்**

வட்ட விளக்கப்படம், ஒரு மாறியின் பல்வேறு கூறுகளை விளக்கப்பயன்படுகிறது (எ.கா.) வட்ட விளக்கப்படம், ஒரு குடும்பத்தின் பல்வேறு செலவுகளான உணவு, உடை, மின்சாரம், கல்வி, பொழுதுபோக்கு போன்றவற்றை குறிப்பதாகும். வட்ட விளக்கப்படம் இவ்வாறு அழைக்கப்படுவதற்கு காரணம் இது வட்டமாக தோற்ற மளிப்பதாலும், அதனுடைய உட்கூறுகள் வட்டத்திலிருந்து வெட்டப்பட்ட வண்டுகளை ஒத்திருப்பதாலும் இவ்வாறு அழைக்கப்படுகிறது.

**வட்ட விளக்கப்படம் வரையும் முறைகள்**

*1.* ஒரு மாறியின் பல்வேறு உட்கூறுகள், விழுக்காடுகளாக மாற்றப்பட வேண்டும். இந்த உட்கூறுகளின் விழுக்காடுகள் $360^0$–(பாகை)க்கு சமமாக கொண்டு வரப்படவேண்டும்.

*2.* ஒரு வட்டம் வரைய உதவும் கருவியால் (*compass)* போதுமான அளவு வட்டம் வரைக. வட்டத்தின் ஆரம் கொடுக்கப்பட்ட இடத்திற்கு தகுந்தாற் போல் இருக்கலாம்.

*3.* பாகைமாணி (*protractor)* உதவியால் ஒவ்வொரு பிரிவின் அளவுக்கேற்ப வட்டத்தில் குறிப்பிடுதல் வேண்டும்.

*4.* அதனுடைய அளவுக்கேற்ப, பிரிவுகளை அமைத்துக் கொள்ளவும்.

*5.* பல்வேறு பிரிவுகளுக்கு தகுந்த நிழல் படமும், ஒட்டிகளும் (*labels)* இடப்படுதல் வேண்டும்.

**விளக்கம் 4**

**மைய நிலை போக்கு அளவைகள்**

**(Measures of central tendency)**

| **செலவு பட்டியல்** | |
|---|---|
| செலவு | சதவிகிதம் |
| உணவு | *60%* |
| வாடகை | *12%* |
| ஆடைகள் | *8%* |
| எரிபொருள் | *8%* |
| கல்வி | *6%* |
| மற்றவைகள் | *6%* |
| **மொத்தம்** | **100%** |

## வட்ட விளக்கப்படம்




புள்ளியியல் பகுப்பாய்வின் முக்கிய நோக்கம், பெருந்திரளாக உள்ள புள்ளி விவரங்களின் அடிப்படை இயல்புகளை விளக்கும் ஒரு தனி மதிப்பைப் *(one single value)* பெறுவதாகும். அத்தனி மதிப்பே மைய மதிப்பு அல்லது சராசரி என்று அழைக்கப்படுகிறது. ஆகவே மைய மதிப்பு அல்லது சராசரி என்பது புள்ளிவிவரங்களின் தொகுப்பை குறிப்பதாகும். அந்த மைய மதிப்பு மொத்த புள்ளி விவரங்களின் மதிப்பை விளக்குவதாகும். சராசரி மதிப்பானது மிகப்பெரிய மதிப்பிற்கும், மிகச்சிறிய மதிப்பிற்கும் இடையில் அமைந்திருப்பதால் இதற்கு மையப் போக்கு அளவை என்று பெயர்.

**நல்ல சராசரியின் அடிப்படை இயல்புகள்**

*1.* திட்டவட்டமான வரையரையைக் கொண்டிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அதன் பொருள் பற்றி எந்த வித குழப்பமும் ஏற்படாது.

*2.* புரிந்து கொள்ள எளிமையானதாக இருக்க வேண்டும்.

*3.* கணக்கிடுதலுக்கு எளிமையானதாக இருக்கவேண்டும்.

*4.* இதன் விளக்கம் கணித சூத்திர (*formula)* வடிவில் இருக்க வேண்டும்.

*5.*தொகுதியில் உள்ள அனைத்து உறுப்புகளையும் சார்ந்து இருத்தல் வேண்டும்.

*6.* ஒரு தனிப்பட்ட மதிப்பினாலோ அல்லது தொகுதியின் உறுப்புகளினாலோ, பாதிக்கப்படாமல் இருக்க வேண்டும்.

*7.* உயர்நிலை புள்ளியியல் பகுப்பாய்வுக்கு வாய்ப்புள்ளதாக இருக்க வேண்டும்.

*8.* இதன் மாதிரிகள் நிலையானதாக இருக்கவேண்டும்.

**சராசரியின் வகைகள்**
**(Kinds of Averages)**




**சாதாரண கூட்டு சராசரி**
**(Simple Arithmetic Mean)**

பொதுவாக நாம் அறிந்த, அனைவராலும் பயன்படுத்தக்கூடிய மைய நிலைப் போக்கு அளவையே சராசரி ஆகும். தொகுதியில் உள்ள அனைத்து உறுப்புகளின் மதிப்பின் கூடுதலை, அத்தொகுதியில் உள்ள உறுப்புகளின் எண்ணிக்கையால் வகுத்து கிடைக்கும் மதிப்பு கூட்டுச் சராசரியாகும். கூட்டு சராசரி என்பதை $\overline{X}$ ($X$ பார்) என்று குறிக்கிறோம்.

$$\overline{X} = \text{சராசரி} = \frac{X_1 + X_2 + X_3 + \ldots\ldots X_n}{n} = \frac{\Sigma X}{n}$$

$\Sigma x$ = உறுப்புக்களின் மொத்த மதிப்பு

$\overline{X}$ = சராசரி

$n$ = உறுப்புக்களின் எண்ணிக்கை

**பயிற்சி**

1. *Raw Data :* (தனி மதிப்புகள்)

எடுத்துக்காட்டு 1

ஒரு வகுப்பில் உள்ள 10 மாணவர்களின் மதிப்பெண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. கூட்டு சராசரியை கணக்கிடுக.

**40, 45, 60, 65, 60, 50, 45, 30, 50, 55**

தீர்வு : $\overline{X} = \frac{\Sigma X}{n}$

$= \frac{500}{10}$

$= 50$ மதிப்பெண்கள்

**தொடர்ச்சியற்ற வரிசை**

**(Discrete series) :**

கூட்டு சராசரியை கணக்கிடும் வழிமுறைகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. ஒவ்வொரு உறுப்பினையும் $(x)$ அதன் நிகழ்வெண்களால் $(f)$ பெறுக்குதல் = $(fx)$

2. $f\,x$ கூடுதல் = $\Sigma fx$

3. $\Sigma fx$ ஐ (அதனுடைய நிகழ்வெண்களின் எண்ணிக்கையால்) $\Sigma$ ஆல் வகுக்க கிடைப்பது கூட்டுச் சராசரி $(X)$

சூத்திரம் $\overline{X} = \dfrac{\Sigma fx}{\Sigma f}$

$\overline{X}$ கூட்டுச் சராசரி

$\Sigma fx$ $fx$ன் பெருக்கல் தொகை

$\Sigma f$ நிகழ்வெண்களின் மொத்த மதிப்பு

**எடுத்துக்காட்டு 2**

கீழ்க்கண்ட புள்ளி விவரங்களுக்கு கூட்டு சராசரி கணக்கிடுக.

| x | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| F | 10 | 18 | 20 | 31 | 30 | 25 | 20 | 15 | 10 | 6 |

| x | f | fx |
|---|---|---|
| 1 | 10 | 10 |
| 2 | 18 | 36 |
| 3 | 20 | 60 |
| 4 | 31 | 124 |
| 5 | 30 | 150 |
| 6 | 25 | 150 |
| 7 | 20 | 140 |
| 8 | 15 | 120 |
| 9 | 10 | 90 |
| 10 | 6 | 60 |
| | $\Sigma f=185$ | $\Sigma fx=940$ |

தீர்வு

$$\bar{x} = \frac{\Sigma fx}{\Sigma f}$$

$$= 940 / 185$$

$$\overline{X} = 5.081$$

## தொடர்வரிசை (Continuous Series)

தொடர் வரிசையில் கூட்டு சராசரியைக் காண கீழ்க்கண்ட முறையைப் பின்பற்ற வேண்டும்.

1. ஒவ்வொரு பிரிவின் மைய மதிப்பைக் காண்க.

மைய மதிப்பு கீழ்க்கண்டவாறு கணக்கிடுதல் வேண்டும்.

பிரிவின் மைய மதிப்பு = கீழ் வரம்பு + மேல் வரம்பு / 2

1. பிரிவு இடைவெளியின் மைய மதிப்பு '$m$' என்ற எழுத்தால் குறிக்க வேண்டும்.
2. ஒவ்வொரு பிரிவு இடைவெளியின் மைய மதிப்பை ($m$) அப் பிரிவின் நிகழ் வெண்ணால் ($f$) பெருக்க வேண்டும்.
3. பெருக்கல் பலனைக் கூட்டவும் ($\Sigma f(m)$
4. $\Sigma f(m)$ஐ நிகழ் வெண்களின் கூட்டுத் தொகையால் $\Sigma (f)$ வகுக்கவும்.

எனவே $x = \Sigma f(m) / \Sigma f$

**எடுத்துக்காட்டு – 3**

ஒரு நிறுவனத்தில் பணிபுரியும் தொழிலாளியின் தினக் கூலியானது (ரூபாயில்) கீழ்கண்டவாறு

| தினக்கூலி ரூ | 90-110 | 110-130 | 130-150 | 150-170 | 170-190 | 190-210 | 210-230 |
|---|---|---|---|---|---|---|---|
| தொழிலாளர்களின் எண்ணிக்கை | 3 | 6 | 10 | 15 | 24 | 42 | 75 |

தொழிலாளர்களின் தினகூலியின் கூட்டுச் சராசரியை $X$ கணக்கீடு தீர்வு.

| **தினக்கூலி** $x$ | **தொழிலாளர்களின் எண்ணிக்கை** $f$ | **m** | **fm** |
|---|---|---|---|
| 90-110 | 3 | 100 | 300 |
| 110-130 | 6 | 120 | 720 |
| 130-150 | 10 | 140 | 1400 |
| 150-170 | 15 | 160 | 2400 |
| 170-190 | 24 | 180 | 4320 |
| 190-210 | 42 | 200 | 8400 |
| 210-230 | 50 | 220 | 1100 |
| | $\Sigma f = 150$ | | $\Sigma fm = 28540$ |

$\overline{x} = \Sigma fm / \Sigma f = 28540/150 = 190.27$

**நிறையிட்ட கூட்டு சராசரி**

**(Weighted Arithmetic Mean)**

சாதாரண கூட்டு சராசரியின் குறைபாடுகளுள் ஒன்று பரவிலிலுள்ள அனைத்து மதிப்புகளும் சம முக்கியத்துவம் வாய்ந்தவைகளாக கருதப்படுகின்றன. நடைமுறையில் பரவலிலுள்ள எல்லா உறுப்புகளும் ஒரே மாதிரியான முக்கியத்துவத்தைப் பெறுவதில்லை. எனவே ஒவ்வொரு உறுப்பிற்கும் அதன் முக்கியத்துவத்தைப் பொறுத்து நிறை. அல்லது எடை கொடுப்பது அவசியமாகிறது. நிறை என்பது உறுப்பின் முக்கியத்துவத்தைக் குறிக்கும் எண் ஆகும். நிறையிட்ட கூட்டு சராசரி பின்வருமாறு கணக்கிடப்படுகிறது.

1. பரவலில் உள்ள ஒவ்வொரு உறுப்பையும் அதனுடைய எடையால் *(W)* பெருக்க வேண்டும்.

2. பெருக்குதல் பலனின் கூட்டுத் தொகையை (*Wx)* கணக்கிட வேண்டும்.

3. இதன் கூடுதலை $\Sigma Wx$ மொத்த எடையால் / நிறையால் ($\Sigma w$) வகுக்க வேண்டும்.

நிறையிட்ட கூட்டு சராசரியை கணக்கிடுவதற்கான சூத்திரம்

$\overline{X}_w = \Sigma wx \,/\, \Sigma w$

$\overline{X}_w$ = நிறையிட்ட கூட்டு சராசரி

$wx$ = பெருகுதல் பலனின் கூட்டுத் தொகை

$\Sigma w$ = நிறைகளின் கூடுதல்

**எடுத்துக்காட்டு – 4**

நிறையிட்ட சராசரியைக் கணக்கிடுக.

| நிலக்கரி டன் விலை ரூபாயில் | வாங்கப்பட்ட அளவு |
|---|---|
| 4000 | 20 |
| 5000 | 30 |
| 6000 | 40 |
| 7000 | 35 |
| 8000 | 25 |

| நிலக்கரியில் ஒரு டன் விலை ரூபாய் (x) | வாங்கப் பட்ட அளவு (டன்) (w) | மொத்தம் (wx) |
|---|---|---|
| 4000 | 20 | 80,000 |
| 5000 | 30 | 1,50,000 |
| 6000 | 40 | 2,40,000 |
| 7000 | 35 | 2,45,000 |
| 8000 | 25 | 2,00,000 |
| | $\Sigma w = 150$ | $\Sigma wx = 9,15,000$ |

தீர்வு $\overline{X} = 9,15,000/150 = 6100$

கொடுக்கப்பட்ட மாறிகளின் முக்கியத்துவம் வேறுபடும்பொழுது நிறையிட்ட கூட்டு சராசரியை பயன்படுத்த வேண்டும்.

**எடுத்துக்காட்டு 5**

இரண்டு பல்கலைக்கழக மாணவர்களின் திறமையை, நிறையிட்ட கூட்டு சராசரி மற்றும் எளிய கூட்டு சராசரியைக் கணக்கிடுக.

| பல்கலைக் கழகம் | சென்னை | | மதுரை | |
|---|---|---|---|---|
| படிக்கும் பாடம் | தேர்ச்சி சதவிகிதம் | மாணவர் எண்ணிக்கை ('00) | தேர்ச்சி சதவிகிதம் | மாணவர் எண்ணிக்கை ('00) |
| MA | 71 | 3 | 82 | 2 |
| M.Com. | 83 | 4 | 76 | 3 |
| M.Sc. | 66 | 3 | 60 | 7 |
| B.A. | 73 | 5 | 73 | 6 |
| B.Sc. | 65 | 3 | 65 | 3 |
| B.Com. | 74 | 2 | 76 | 7 |

தீர்வு

| பல்கலைக் கழகம் பாடம் | சென்னை | | | மதுரை | | |
|---|---|---|---|---|---|---|
| | $x$ | $w$ | $wx$ | $x$ | $w$ | $wx$ |
| M.A. | 71 | 3 | 213 | 82 | 2 | 164 |
| M.Com. | 83 | 4 | 332 | 76 | 3 | 228 |
| M.Sc. | 66 | 3 | 198 | 60 | 7 | 420 |
| B.A. | 73 | 5 | 365 | 73 | 6 | 438 |
| B.Sc. | 65 | 3 | 195 | 65 | 3 | 195 |
| B.Com. | 74 | 2 | 148 | 76 | 7 | 532 |
| | $\Sigma x=432$ | $\Sigma w=20$ | $\Sigma wx=1451$ | $\Sigma x=432$ | $\Sigma w=28$ | $\Sigma wx=1977$ |

**அ. எளிய கூட்டு சராசரி ( $\overline{x} = \Sigma x/n$ )**

$$\frac{\Sigma x}{n} = \frac{432}{6} = x = \frac{\Sigma x}{n} = \frac{432}{6} = 72$$

சென்னை = 432/6 = 72

மதுரை = 432/6 = 72

இரண்டு பல்கலைக்கழகங்களின் எளிய கூட்டு சராசரி ஒன்றாகவே உள்ளது.

**ஆ. நிறையிட்ட கூட்டு சராசரி**

$\bar{x}w = \Sigma wx / \Sigma w$

சென்னை = 1451/20 = 72.55

மதுரை = 1977 / 28 = 70.60

மதுரையின் நிறையிட்ட கூட்டு சராசரி சென்னையின் நிறையிட்ட கூட்டு சராசரியை விட குறைவாக இருப்பதால் சென்னை பல்கலைக்கழகம் மதுரைப் பல்கலைக்கழகத்தை விட சிறந்ததாகும்.

**இடைநிலை (Median)**

கொடுக்கப்பட்ட புள்ளி விவரத் தொகுதியை இரண்டு சம பாகங்களாகப் பிரிக்கும் மதிப்பே இடைநிலை எனப்படும். இறங்கு வரிசையிலோ அல்லது ஏறுவரிசையிலோ வரிசைப் படுத்தப்பட்டால் அதன் மையத்தில் அமைந்திருக்கும் உறுப்பின் மதிப்பு இடை நிலை எனப்படும். ஒரு பகுதியில் உள்ள உறுப்பின் மதிப்பு இடைநிலைக்கு சமமாகவோ அல்லது அதைவிட குறைவாகவோ இருக்கும். அதே போல் மறு பகுதியில் உள்ள உறுப்பின் மதிப்பு அதற்கு சமமாகவோ அல்லது இடைநிலையை விட அதிகமாகவோ இருக்கும். உதாரணம் 2, 3, 5, 5, 5, 10, 15 இவ்வரிசையில் 5 என்பது இடைநிலையாகும். இது கொடுக்கப்பட்டுள்ள புள்ளி விவரத் தொகுதியை இரண்டு சம பாகங்களாகப் பிரிக்கிறது. இவ்வரிசையில் இடது பக்கத்தில் உள்ள மதிப்பு 5க்கு சமமாகவோ அல்லது குறைவாகவோ உள்ளது. அதேபோல் இடைநிலைக்கு வலது பக்கத்தில் உள்ள மதிப்பு 5க்கு சமமாகவோ அல்லது அதைவிட அதிகமாகவோ உள்ளது. மதிப்புகள் ஏறுவரிசையில்

அமைக்கப்பட்டுள்ளது. இடைநிலை *M* என்ற எழுத்தால் குறிக்கப்படுகிறது.

**இடைநிலையை கணக்கிடுதல்**

**தனிப்பட்ட புள்ளி விவரத்தொகுதி**

*1.* கொடுக்கப்பட்ட புள்ளி விவரங்களை இறங்கு முகமாகவோ அல்லது ஏறுமுகமாகவோ வரிசைப்படுத்தவும்.

*2.* வாய்பாட்டை பயன்படுத்துக :

*M = Size of (N+1)/2)* வது உறுப்பு இதில்,

*N* என்பது கொடுக்கப்பட்ட தொகுதியில் உள்ள உறுப்புக்களின் எண்ணிக்கை ஆகும்.

**எடுத்துக்காட்டு – 6**

*7* மாணவர்களின் மதிப்பெண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளது. இடைநிலை மதிப்பெண்ணை கணக்கிடுக.

| வரிசை எண். | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
|---|---|---|---|---|---|---|---|
| மதிப்பெண் | 40 | 30 | 18 | 55 | 60 | 25 | 45 |

தீர்வு : முதலில் ஏறுமுகமாக வரிசைப்படுத்தவும்.

மதிப்பெண்கள் : *18 25 30 40 45 55 60*

இடைநிலை = *Size of (N+1)/2* வது உறுப்பு

*Size of (7+1)/2 = 8/2 = 4*வது உறுப்பு

*Size of 4*வது உறுப்பு = 40

∴ இடைநிலை மதிப்பெண் = 40

**இரட்டைப்படை எண்கள் :**

இரட்டைப்படை எண்களுக்கு இடைநிலை கண்டுபிடிக்க, இரண்டு உறுப்புக்களின் மதிப்புகளின் சராசரியே இடைநிலையாகும்.

**எடுத்துக்காட்டு – 7**

கீழ்க்கண்ட புள்ளி விவரங்களுக்கு இடைநிலை கணக்கிடுக :

*60 55 62 40 35 65 70 68*

தீர்வு :

ஏறுமுகமாக வரிசைப்படுத்தினால்,

*35*, 40, 55, 60, 62, 65, 68, 70

இடைநிலை

*M =Size of (N+1)/2)*வது உறுப்பு

*M = Size of(8+1) / 2*வது உறுப்பு

*Size of 4.5* வது உறுப்பு = $\frac{4\text{வது உறுப்பு} + 5\text{வது உறுப்பு}}{2}$

*(60 + 62) / 2 = 61*

∴ இடைநிலை மதிப்பெண் = 61

**தொடர்ச்சியற்ற வரிசை**

**வழிமுறை**

*1.* புள்ளி விவரங்களை ஏறுமுகமாகவோ அல்லது இறங்குமுகமாகவோ வரிசைப்படுத்தவும்.

*2.* கூட்டு நிகழ்வெண்களை கணக்கிடவும்.

*3.* வாய்ப்பாட்டை பயன்படுத்தவும்.

இடைநிலை = *Size of (N+1)/2)*வது உறுப்பு

$N = \Sigma f =$ நிகழ்வெண்களின் கூட்டுத்தொகை

**எடுத்துக்காட்டு 8**

இடைநிலை அளவைக் கணக்கிடுதல்

| காலணியின் அளவு | நிகழ்வெண் | கூட்டு நிகழ்வெண் |
|---|---|---|
| 5 | 10 | 10 |
| 5.5 | 18 | 28 |
| 6 | 22 | 40 |
| **6.5** | **25** | **65** |
| 7 | 20 | 85 |
| 7.5 | 15 | 100 |
| 8 | 10 | 110 |
| | **N = 110** | |

இடைநிலை = *Size of [(N+1)/2]*வது உறுப்பு

*Size of (110/2) = 55*வது உறுப்பு

*Size of 55*வது உறுப்பு = **6.5**

∴ காலணியின் இடைநிலை அளவு = **6.5**

**தொடர்வரிசை**

**வழிமுறைகள்**

*1. N/2*வைப் பயன்படுத்த இடைநிலை கணக்கிடுக; இதில் $N = \Sigma f =$ நிகழ்வெண்களின் கூட்டுத் தொகை

*2.* இடைநிலை அமைந்துள்ள வகுப்பை கண்டுபிடிக்கவும்.

3. சூத்திரத்தை பயன்படுத்துக :

$$M = L + \frac{N/2 - cf}{f} \times c$$

$L$ = இடைநிலை அமைந்துள்ள வகுப்பின் கீழ்வரம்பு

$F$ = இடைநிலை அமைந்துள்ள வகுப்பின் நிகழ்வெண்

$cf$ = இடைநிலை அமைந்துள்ள வகுப்பிற்கு முந்தைய கூட்டு நிகழ்வெண்

$c$ = இடைநிலை அமைந்துள்ள பிரிவின் இடைவெளி

**எடுத்துக்காட்டு – 9**

கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையிலிருந்து இடைநிலையைக் கணக்கிடுக

| **மதிப்பெண்கள்** | **0-20** | **20-40** | **40-60** | **60-80** | **80-100** |
|---|---|---|---|---|---|
| **நிகழ்வெண்கள்** | **10** | **34** | **36** | **20** | **10** |

தீர்வு :

| **மதிப்பெண்கள்** *(x)* | **நிகழ்வெண்கள்** *(f)* | **கூட்டு நிகழ்வெண்கள்** *(cf)* |
|---|---|---|
| *0-20* | *10* | *10* |
| *20-40* | *34* | *44* |
| *40-60* | *36* | *80* |
| *60-80* | *20* | *100* |
| *80-100* | *10* | *110* |

இடைநிலை = $(N/2) = (110/2) = 55$

$$M = L + \frac{N/2 - cf}{f} \times c$$

$\frac{N}{2} = 55,\ L = 55,\ Cf = 44,\ f = 36,\ C = 20$

$M = 40 + (55-44)/36) \times 20$

$= 40 + (11/36 \times 20)$

$= 40 + 220/36$

$= 40 + 6.1$

இடைநிலை = **46.1**

**முகடு**

கொடுக்கப்பட்ட பரவலின் பொதுவான உறுப்பு முகடு எனப்படும். பரவலில் எந்த எண் திரும்பத் திரும்ப அதிக தடவைகள் (நிகழ்கிறதோ) வருகிறதோ அந்த அளவே முகடு எனப்படும். தொடர் பரவலில், அதிக தடவைகள் வரும் மாறியின் மதிப்பே முகடு என்று வரையறுக்கப்படுகிறது. எனவே எந்த உறுப்பு அதிகபட்ச நிகழ்வெண்களை கொண்டுள்ளதோ அதுவே முகடு எனப்படும். தொடர் பரவல் ஒரு முகட்டுப் பரவல், அல்லது இரு முகட்டுப் பரவல் அல்லது பண் முகட்டுப் பரவல் ஆகவும் இருக்கலாம்.

ஒரு முகட்டுப் பரவல் : தொடர் பரவலில் ஒரே ஒரு முகடு இருக்கும்

இரு முகட்டுப் பரவல் : தொடல் பரவலில் இரண்டு முகடுகள் இருக்கும்

பண்முகட்டுப் பரவல் : பரவலானது இரண்டுக்கும் மேற்பட்ட முகடுகளைக் கொண்டிருக்கும்.

**முகடு கணக்கிடுதல்**

தனிப்பட்ட விவரத் தொகுதியில், பரவலைப் பார்த்தவுடனேயே முகட்டை கண்டுபிடிக்கலாம்.

**எடுத்துக்காட்டு 10**

*10* மனிதர்கள் கீழ்க்கண்ட வருமானத்தைப் பெறுகிறார்கள் :–

*Rs.1000, 850, 650, 780, 1000, 980, 1000, 850, 700, 900* - முகடு கணக்கிடுக.

தீர்வு :

*1.* பரவலை வரிசைப்படுத்தவும்

*650, 700, 780, 850, 850, 900, 980, 1000, 1000, 1000*

*1000* மூன்று முறை வந்துள்ளது. எனவே, முகடு வருமானம் = ரூ.1000.

**எடுத்துக்காட்டு – 11**

முகடு கணக்கிடுக :

*450, 400, 380, 370, 400, 420, 450, 340*

தீர்வு :

பரவலை வரிசைப்படுத்தவும்.

*340, 370, 380, 400, 400, 420, 450, 450*

*400* மற்றும் **450** இரண்டு முறை வந்துள்ளது.

ஆகவே முகடு **400** மற்றும் **450** ஆகும். இரு முகடுகள் வந்துள்ளதால். இப்பரவல் இரு முகட்டுப் பரவல் ஆகும்.

**தொகுக்கப்பட்ட புள்ளி விவரங்களுக்கான முகடு**
**(Mode for Grouped data)**

தொகுக்கப்பட்ட புள்ளி விவரத் தொகுதியில் முகடானது சராசரி, இடைநிலை, முகடு இவற்றிற்கிடையேயான தொடர்புமூலம் கணக்கிடப்படுகிறது.

வாய்ப்பாடு = முகடு = **(3 இடைநிலை – 2 சராசரி)**

**எடுத்துக்காட்டு – 12**

ஒரு புள்ளி விவரத் தொகுதியில் கூட்டு சராசரி = **180**, மற்றும் இடைநிலை **170.** முகடு காண்க.

தீர்வு :

முகடு = **3** இடைநிலை **– 2** கூட்டு சராசரி

$= (3 \times 170) - (2 \times 180)$

$= 510 - 360$

$= 150.$

முகடு = **150.**

## பயிற்சி

## பகுதி – அ

**I. சரியான விடையைத் தேர்ந்தெடுக்கவும் :**

*1.* புள்ளியியல் என்பது இதன் உட்பிரிவாகும்

அ. வணிகவியல் ஆ. பொருளியல்

இ. கணிதம் ஈ. கணக்குப் பதிவியல்

*2.* ஸ்டேடஸ் (*Status*) என்ற லத்தீன மொழி குறிப்பிடுவது

அ. புள்ளியல் ஆ. தர்க்கவியல்

இ. கணக்குப் பதவியல் ஈ. அறிவியல்

*3.* வெளியிடப்பட்ட அல்லது வெளியிடப்படாத ஆதாரங்கள் மூலம் கிடைக்கப்பெற்ற புள்ளி விவரங்கள்

அ. முதல் நிலை புள்ளி விவரம் ஆ. இரண்டாம் நிலை புள்ளி விவரம்

இ. புள்ளியியல் ஈ. அறிவிப்புகள்

*4.* சேகரிக்கப்பட்ட விவரங்களை அவற்றின் இயல்புகளுக்கேற்ப பிரிவுகளாகவும் உட்பிரிவுகளாகவும் வரிசைப்படுத்துதல்.

அ. அட்டவணைப் படுத்துதல் ஆ. வகைப்படுத்துதல்

இ. பகிர்ந்தளித்தல் ஈ. ஒழுங்குபடுத்துதல்

5. ஒரு மாறியின் பல்வேறு கூறுகளை விளக்க பயன்படும் படம்

அ. கோடு வரைபடம் ஆ. பட்டை விளக்கப்படம்

இ. வட்ட விளக்கப்படம் ஈ. உருவ விளக்கப்படம்

**II. கோடிட்ட இடங்களை நிரப்புக.**

6. முதன்முதலாக சேகரிக்கப்படும் புள்ளி விவரங்கள் ......... விவரங்கள் எனப்படும்.

7. மாறிகள் திரும்பத் திரும்ப வந்தால் அது .......... எனப்படும்.

8. கீழ் வரம்பு மற்றும் மேல் வரம்பிற்கும் இடையே உள்ள வித்தியாசமே .......... எனப்படும்.

9. சேகரித்த புள்ளிவிவரங்களை பக்திகளாகவும் வரிசைகளாகவும் அமைப்பதை ............ என்கிறோம்.

10. கொடுக்கப்பட்ட பரவலின் பொதுவான உறுப்பு .........

**III. பொருத்துக.**

| | |
|---|---|
| 11. இடைநிலை | அ. 3 இடைநிலை – 2 சராசரி |
| 12. முகடு | ஆ. உற்றுநோக்குதல் |
| 13. முதல் நிலை புள்ளி விவரங்கள் | இ. Size of $\frac{(N+1)}{2}$ வது உறுப்பு |
| 14. சராசரி | ஈ. $\frac{\Sigma Wx}{\Sigma N}$ |
| 15. நிறையிட்ட கூட்டு சராசரி | உ. மைய மதிப்பு |

**IV. ஒரிரு வார்த்தைகளில் விடை தருக.**

16. அட்டவணைக்கு மிக முக்கியமானது எது?

17. கூட்டு சராசரியின் சூத்திரம் தருக.

18. இடைநிலைக்கான வாய்ப்பாட்டை கூறுக.

19. அட்டவணைப் படுத்தலின் முதல்படி யாது?

20. ஒரே ஒரு மாறியை விளக்கும் வரைபடம் யாது?

## பகுதி – ஆ

**V. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடைதருக.**

21. புள்ளியியலின் இலக்கணம் யாது?

22. புள்ளி விவரங்களின் வகைகள் யாவை?

23. குறிப்பு வரைக. 1. வரைபடம் (*graph*) 2. விளக்கப்படம் (*Diagram*)

24. வகைப்படுத்துதலின் வகைகள் யாவை?

25. சிறு குறிப்பு வரைக. வட்ட விளக்கப்படம் (*Pie-Diagram*)

## பகுதி – இ

**VI. பின்வரும் வினாக்களுக்கு ஒரு பக்க அளவில் விடைதருக.**

26. வகைப்படுத்துதலுக்கும், அட்டவணைப்படுத்துதலுக்கும் உள்ள வேறுபாடுகளை விளக்குக.

27. அட்டவணைப்படுத்தலின் விதிமுறைகள் யாவை?

28. விளக்கப்படத்திற்கும் வரைப்படத்திற்கும் உள்ள வேறுபாடுகள் யாவை?

29. நல்ல சராசரியின் அடிப்படை இயல்புகள் யாவை?

30. கீழ்கண்ட புள்ளிவிவரங்களை கொண்டு கூட்டு சராசரி கணக்கிடுக.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| X | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| F | 10 | 18 | 20 | 31 | 30 | 25 | 20 | 15 | 10 | 6 |

## பகுதி – ஈ

**VII. பின்வரும் வினாக்களுக்கு மூன்று பக்க அளவில் விடைதருக.**

31. கீழ்க்கண்ட புள்ளி விவரங்களுக்கு தனிப்பட்டை விளக்கப்படம் வரைக.

| ஆண்டு | 2001 | 2002 | 2003 | 2004 | 2005 | 2006 |
|---|---|---|---|---|---|---|
| மாணவர்களின் எண்ணிக்கை | 1000 | 1500 | 2000 | 2500 | 2400 | 2200 |

32. கீழ்கண்ட புள்ளி விவரங்களுக்கு வட்ட விளக்கப்படம் வரைக.

**செலவு பட்டியல்**

| **செலவு** | **சதவிகிதம்** |
|---|---|
| உணவு | 60% |
| வாடகை | 12% |
| ஆடைகள் | 8% |
| எரிபொருள் | 8% |
| கல்வி | 6% |
| மற்றவைகள் | 6% |

33. தொழிலாளர்களின் தினக்கூலியின் கூட்டுச் சராசரியை கணக்கிடுக.

| தினக் கூலி | 90-110 | 110-130 | 130-150 | 150-170 | 170-190 | 190-210 | 210-230 |
|---|---|---|---|---|---|---|---|
| தொழிலாளர்களின் எண்ணிக்கை | 3 | 6 | 10 | 14 | 24 | 42 | 75 |

34. கீழ்காணும் மதிப்பெண்களுக்கு சராசரி, இடைநிலை, முகடு கணக்கிடுக.

| மதிப்பெண்கள் | 0-20 | 20-40 | 40-60 | 60-80 | 80-100 |
|---|---|---|---|---|---|
| நிகழ்வெண் (F) | 10 | 24 | 36 | 20 | 10 |

35. புள்ளி விவரங்களின் தன்மைகளையும், வகைகளையும் விவரிக்க.

# பாடம் – 12

# மாறுபாட்டு அளவைகள்

# (Measures of Variabiity)

மைய நிலைப் போக்கு அளவையானது, ஒரு விவரத் தொகுதியின் ஒரு கூறான சராசரியை மட்டும் அளவிடுகிறது. தனி மற்றும் ஒழுங்கற்ற கருவியாக சராசரி இருப்பதால் இது பரவலின் முழுமையான பொருளை வெளிக் கொணராது.

**எடுத்துக்காட்டு 1 –** ஐந்து பாடங்களில் இரண்டு (அன்பு & அறிவு) மாணவர்களின் சராசரி மதிப்பெண்கள் ஒத்தவையாகும். ஆனால் அவை பல வழிகளில் வேறுபடும். அன்பு எல்லாப் பாடங்களிலும் வெற்றி பெற்று உள்ளான். அவனது சராசரி 60 மதிப்பெண்களாகும். ஆனால் அறிவு சராசரியாக 60 மதிப்பெண்கள் பெற்று, ஒரு பாடத்தில் தேர்ச்சி பெறவில்லை. மற்றொன்றில் 100 விழுக்காடு பெற்றுள்ளான்.

| பாடங்கள் | தமிழ் | ஆங்கிலம் | கணக்கு | அறிவியல் | வரலாறு & புவியியல் | சராசரி |
|---|---|---|---|---|---|---|
| அன்பு பெற்ற மதிப்பெண்கள் | *68* | *65* | *55* | *60* | *52* | *300/5 = 60* |
| அறிவு பெற்ற மதிப்பெண்கள் | *60* | *30* | *100* | *59* | *51* | *300/5 = 60* |

மேலே கண்ட எடுத்துக்காட்டிலிருந்து கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் ஒத்த தன்மையுடையதாக இருந்தால்தான் சராசரி நம்பகத் தன்மையுடையதாக இருக்கும் என்பது தெளிவாகிறது. இல்லையெனில் உண்மை மதிப்பானது சராசரி மதிப்பிலிருந்து அதிக அளவில் விலகியிருக்கும். இந்த விலகலின் அளவானது மாறுபாட்டு அளவைகள் அல்லது பரவல் அளவைகளால் அளவிடப்படும்.

சராசரி என்ற மையப் புள்ளியிலிருந்து உறுப்புக்களின் மதிப்பு எவ்வளவு விலகியிருக்கிறது அல்லது சிதறிக்கிடக்கிறது என்பதை விளக்குவது பரவல்

அளவை ஆகும். புள்ளியியல் ஆய்வில் இது ஒரு முக்கியமான அளவையாகும். சராசரியின் நம்பகத்தன்மையை இது பிரதிபலிக்கிறது. பரவல் அளவை பற்றிய அறிவு விலகலைக் கட்டுப்படுத்துவதற்கும், உறுப்புகளின் மதிப்பை எதிர்காலத்தில் மேம்படுத்துவதற்கும் பயன்படுகிறது.

### மாறுபாட்டு அளவைகளை அளவிடும் முறைகள்

மாறுபாட்டு அளவைகளை பல வழிகளில் மதிப்பிடலாம். அதில் சில முறைகள் இங்கு கொடுக்கப்பட்டுள்ளன.

1. வீச்சு (*Range)*
2. இடைக்காலம் வீச்சு (*Inter-quartile Range or Quartile Deviation)*
3. சராசரி விலக்கம் (*Mean Deviation)*
4. பரவற்படி மற்றும் திட்ட விலக்கம் (*Variance and Standard Deviation)*

### வீச்சு (Range)

மாறுபாட்டு அளவைகளில் மிக எளிதான அளவை வீச்சு ஆகும். வீச்சு என்பது நிகழ்வெண் பரவலில் மிகப்பெரிய மதிப்பிற்கும், மிகச்சிறிய மதிப்பிற்கும் உள்ள வேறுபாடு ஆகும். எடுத்துக்காட்டு *1*-ல் அறிவு பெற்றுள்ள அதிக மதிப்பெண்கள் **100** விழுக்காடு ஆகும். குறைந்தபட்ச மதிப்பெண்கள் **30** விழுக்காடு ஆகும்.

வீச்சு = $L - S$ ($L$ என்பது அதிக மதிப்பு, $S$ என்பது மிகச்சிறிய மதிப்பு)

$= 100 - 30 = 70$ வீச்சு = **70**

### எடுத்துக்காட்டு – 2

ஐந்து பாடங்களில் அன்பு பெற்ற மதிப்பெண்களிலிருந்து வீச்சை கணக்கிடுக.

அன்புபெற்ற மதிப்பெண்கள் : *68 65 55 60 52*

வீச்சு = $L - S = 68 - 52 = 16$

**சராசரி விலக்கம் (Mean Deviation)**

பரவலில் உள்ள உறுப்புகளின் மதிப்புகள் அப்பரவலின் கூட்டு சராசரியிலிருந்து பெற்றுள்ள விலக்கங்களின் சராசரியே சராசரி விலக்கம் எனப்படும். உறுப்புக்களின் மதிப்பு சராசரி மதிப்புக்குக் குறைவாக இருந்தால் எதிர்மறைக் குறியீடு (–), அதிகமாக இருந்தால் நேர்மறைக் குறியீடும் (+) பெறும்.

மாதிரி சராசரியிலிருந்து ஒவ்வொரு உறுப்புக்களின் மதிப்பும் எவ்வளவு தூரம் விலகி உள்ளது என்பதன் கூடுதலை மொத்த உறுப்புக்களின் எண்ணிக்கையில் வகுக்க கிடைப்பது சராசரி விலக்கமாகும்.

$$\text{சராசரி விலக்கம் } (MD) = \frac{\Sigma\left| x-\bar{x} \right|}{n}$$

$x$ = உறுப்புகளின் மதிப்பு

$\bar{x}$ = சராசரி

$\left|x - \bar{x}\right|$ = விலக்கம் (நேர்மறை குறியீடு இல்லாத)

$\Sigma$ = கூடுதல்

$n$ = உறுப்புக்களின் எண்ணிக்கை

**எடுத்துக்காட்டு – 3**

அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ள விவரங்களுக்கு சராசரி விலக்கம் கணக்கிடுக.

| $X$ | 4 | 6 | 8 | 10 | 22 |
|---|---|---|---|---|---|

| **உறுப்புகளின் மதிப்பு X** | $X - \bar{X}$ | $\left\| X - \bar{X} \right\|$ |
|---|---|---|
| 4 | -6 | 6 |
| 6 | - 4 | 4 |
| 8 | - 2 | 2 |
| 10 | 0 | 0 |
| 22 | 12 | 12 |
| | $\Sigma (x-\bar{x}) = 0$ | $\Sigma\left\|x-\bar{x}\right\| = 24$ |

சராசரியை கணக்கிட $\Sigma|x-x|$ மொத்த உறுப்புகளின் எண்ணிக்கையால் வகுக்க வேண்டும்.

சராசரி விலக்கம் ($MD) = \frac{\Sigma|x-x|}{n} = 24/5 = 4.8$

**திட்ட விலக்கம்**

பரவற்படி மற்றும் திட்டவிலக்கம் மிக அதிக அளவில் பயன்படும் மாறுபாட்டு அளவைகளாகும். பரவற்படியானது, மாறுபாட்டு அளவைகளுள் ஒரு நிலையான அளவையாகும். மற்றும் இப்பரவற்படியினின்று பெறப்படும் வர்க்க மூலமே திட்ட விலக்கமாகும். பரவற்படி, சராசரி விலக்கத்தைப் போன்றது. இங்கு எதிர்மறை குறியீடுகள், முகட்டு மதிப்புகளைக் கணக்கில் எடுத்துக் கொள்வதன் மூலம் நீக்கப்படுகின்றன. மற்றொரு முறையில், எதிர்மறைக் குறையீடுகளை கணக்கிட, ஒவ்வொரு விலகல் மதிப்புகளுக்கும் வர்க்கமூலத்தை கண்டுபிடித்தல் வேண்டும். உ.மா. எடுத்துக்காட்டு மூன்றைப் பயன்படுத்தி, பரவற்படியையும் திட்ட விலக்கத்தைக் கணக்கிடலாம்.

| விவரம் X | $x-\bar{x}$ | $(x-\bar{x})^2$ |
|---|---|---|
| 4 | -6 | 36 |
| 6 | -4 | 16 |
| 8 | -2 | 4 |
| 10 | 0 | 0 |
| 22 | 12 | 144 |

$\Sigma(x-\bar{x}) = 0 \qquad \Sigma(x-\bar{x})^2=200$

சராசரியைக் கணக்கிட $\Sigma(x-\bar{x})^2$ஐ மொத்த விவரங்களின் எண்ணிக்கையால் வகுக்க கிடைப்பது

பரவற்படி ($Variance)\sigma^2 = \frac{\Sigma(x-\bar{x})^2}{n}$

$x$ = உண்மை விவரம்

$\overline{x}$ = சராசரி

$\Sigma (x-x)^2$ = விலக்கங்களின் வர்க்கம் *(Squared Deviations)*

$\Sigma$ = கூட்டலின் குறி.

$n$ = விவரங்களின் எண்ணிக்கை

பரவற்படி *(Variance)* $\sigma^2 = \frac{200}{5} = 40$

திட்ட விலக்கமானது (*Variance)*, பரவற்படியின் வர்க்க மூலத்திலிருந்து கணக்கிட முடியும்.

$$\sigma^2 = \frac{\Sigma (x-\bar{x})^2}{n}$$

$$\sigma = \frac{\sqrt{\Sigma (x-\bar{x})^2}}{n}$$

$$\sigma = \frac{\sqrt{200}}{5}$$

$$= \sqrt{40}$$

$$= 6.32$$

**நூற்றுமங்கள் மற்றும் கால்மங்கள்**

வினாடி – வினாவில், 40 மாணவர்களுடன் ஒப்பீடு செய்யும் பொழுது ஒருவன் நன்றாக செயல்பட்டதாக கருதினால், அவன் செயலை கணக்கிட வர்க்கத்தையும், 40 மாணவர்களுடன் அவனது சார்பு நிலையையும் கணக்கிட வேண்டும். மற்ற மாணவர்களுடன் அவனுடைய நிலையை கணக்கிட, சில முறைகள் பயன்படுகிறது. சார்பு நிலையைக் கணக்கிட 'நூற்றுமங்கள்', அதிகமாக பயன்படுத்தப்படுகிறது. கால்மங்கள் ஒருவனது நிலையை கணக்கிட அதிகமாகப் பயன்படுத்தப்படுகிறது. இது அரை–இடைக்கால் வீச்சு (*Semi-inter quartile range)* என்றும் அழைக்கப்படும். அதன் பெயருக்கேற்ப, இது

மூன்றாவது கால்மத்திற்கும், முதல் கால்மத்திற்கும் உள்ள வேறுபாட்டின் மையத்தில் அமைந்திருக்கும். இடைநிலை இரண்டாவது கால்மத்தில் (*or P50)* அமைந்திருக்கும். எனவே இது புள்ளி விவரத் தொகுதியை இரு சமபாகங்களாகப் பிரிக்கிறது. கால்மம் புள்ளி விவரத் தொகுதியை 4 பாகங்களாகப் பிரிக்கிறது. எனவே கால்மங்களைக் கணக்கிடுதல், இடைநிலையை கணக்கிடுதல் போன்றதாகும்.

$Q1 =$ முதல் காலம் = **25**வது நூற்றுமங்கள் ($P_{25}$)

$Q2 =$ இரண்டாவது கால்மம் = **50**வது நூற்றுமங்கள் ($P_{50}$) = இடைநிலை

$Q3 =$ மூன்றாவது கால்மம் = **75**வது நூற்றுமங்கள் ($P_{75}$)

கால்ம விலக்கம் (*Q.D.*) = $\frac{Q3 - Q1}{2}$

அல்லது = $\frac{P_{75} - P_{25}}{2}$

$Q3 =$ மூன்றாவது கால்மம்

$Q1 =$ முதல் கால்மம்

$P_{75} = 75$வது நூற்றுமங்கள்

$P_{25} = 25$வது நூற்றுமங்கள்

**எடுத்துக்காட்டு 4**

கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையில் மொத்த மதிப்பெண் **20**க்கு **40** மாணவர்களுடைய வினாடி – வினா மதிப்பெண்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அதிலிருந்து **10**வது நூற்றுமங்கள் ($P_{10}$), *25*வது நூற்றுமங்கள் ($P_{25}$), *50*வது நூற்றுமங்கள், இரண்டாவது (*Q2*) கால்மங்கள் ஆகியவற்றை கணக்கிடுக.

*10*வது நூற்றுமங்களின் மதிப்பு இயல்பாகவே, மொத்த மதிப்பைவிட **10** சதவீதம் அதிகமாக இருக்கும். இதைக் கணக்கிட, கொடுக்கப்பட்டுள்ள விவரங்களை ஏறுமுகமாக எழுத வேண்டும்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 16 | 11 | 9 | 10 | 10 | 14 | 18 | 11 |
| 7 | 15 | 19 | 13 | 7 | 13 | 14 | 9 |
| 18 | 12 | 17 | 15 | 16 | 16 | 10 | 12 |
| 9 | 13 | 12 | 11 | 17 | 10 | 15 | 16 |
| 19 | 13 | 11 | 14 | 8 | 12 | 16 | 14 |

| வரிசைப்படுத்தப்பட்ட | |
|---|---|
| மாணவர்கள் | மதிப்பெண்கள் |
| 1 | 7 |
| 2 | 7 |
| 3 | 8 |
| 4 | 9 |
| 5 | 9 |
| 6 | 9 |
| 7 | 10 |
| 8 | 10 |
| 9 | 10 |
| 10 | 10 |
| 11 | 11 |
| 12 | 11 |
| 13 | 11 |
| 14 | 11 |
| 15 | 12 |
| 16 | 12 |
| 17 | 12 |
| 18 | 12 |
| 19 | 13 |
| 20 | 13 |

| வரிசைப்படுத்தப்பட்ட | |
|---|---|
| மாணவர்கள் | மதிப்பெண்கள் |
| 21 | 13 |
| 22 | 13 |
| 23 | 14 |
| 24 | 14 |
| 25 | 14 |
| 26 | 14 |
| 27 | 15 |
| 28 | 16 |
| 29 | 15 |
| 30 | 16 |
| 31 | 16 |
| 32 | 16 |
| 33 | 16 |
| 34 | 16 |
| 35 | 17 |
| 36 | 17 |
| 37 | 18 |
| 38 | 18 |
| 39 | 19 |
| 40 | 19 |

*10*வது நூற்றுமங்களின் நிலையை தீர்மானிக்க கீழ்கண்ட வாய்ப்பாட்டை பயன்படுத்தலாம்.

$$n = \frac{P}{100}$$

இதில், தேவையான நூற்றுமங்கள் $P = 10$ மற்றும் குறிப்பிடப்பட்ட புள்ளி விவரங்களின் மொத்த எண்ணிக்கை $n=40$. எனவே 10வது நூற்றுமத்தின் நிலையானது 4 ஆகும்.

$$n \times \frac{P}{100} \qquad (or)$$

$$40 \times \frac{10}{100} = 4$$

கிடைக்கும் விடையானது முழுமையான எண்ணாக இல்லாவிடில், அதை அடுத்த முழுமையான எண்ணிற்கு மாற்றிக் கொள்ளலாம். இந்நிலையில் நூற்றுமங்கள் என்பது, ஒரு சராசரி எண்ணாகும் மற்றும் அமைப்பு சேர்க்கையின் அடுத்த உயர்ந்த மதிப்பெண்ணாகும். ஆகவே 10வது நூற்றுமம் ($P_{10}$) என்பது கீழ்க்கண்டவாறு மதிப்பிடப்படுகிறது.

$$\textbf{10வது நூற்றுமங்கள் } (P_{10}) = \frac{(4\text{வது மதிப்பு}) + (5\text{வது மதிப்பு})}{2}$$

$$= \frac{8+9}{2}$$

$$= 8.5$$

ஆகவே 10வது நூற்றுமம் ($P_{10}$) என்பது இரண்டு புள்ளிவிவரத்தின் சராசரியாகும். இதேபோல் 25வது ($P_{25}$) மற்றும் 50வது ($P_{50}$) நூற்றுமங்களை கணக்கிடலாம்.

25வது நூற்றுமம் ($P_{25}$) $= n \times \frac{P}{100}$

$$= 40 \times \frac{25}{100}$$

$$= 10$$

25வது நூற்றுமம் ($P_{25}$) $= \frac{(10\text{வது மதிப்பு}) + (11\text{வது மதிப்பு})}{2}$

$$= \frac{10 + 11}{2}$$

$$= 10.5$$

50வது நூற்றுமம் ($P_{50}$)

$$= n \quad \frac{p}{100}$$

$$= 40 \quad \frac{50}{100}$$

$$= 20$$

$$50\text{வது நூற்றுமம் } (P_{50}) = \frac{(20\text{வது மதிப்பு}) + (21\text{வது மதிப்பு})}{2}$$

$$= \frac{13 + 13}{2}$$

$$= 13$$

இடைநிலை மதிப்பைக் கணக்கிட்டால் அது இதற்கு சமமாக இருக்கும் ஆகவே

$50$வது நூற்றுமங்கள் = இடைநிலை = இரண்டாவது கால்மம் ($Q_2$)

**கால்ம விலக்கம்**

விலக்கம் அல்லது இடைக்காலம் வீச்சு சாதாரணமாக வீச்சு போன்றே கணக்கிடலாம்.

$$\text{கால்ம விலக்கம்} = \frac{Q_3 - Q_1}{2}$$

மூன்றாவது கால்மத்தின் நிலையைக் கணக்கிட மேற்கண்ட வாய்ப்பாட்டில் சிறிது மாற்றம் செய்து பயன்படுத்தலாம். அதாவது

$$n \times \frac{Q}{4}$$

இதில் தேவையான கால்மம் $Q = 3$. புள்ளி விவரத்தின் மொத்த எண்ணிக்கை $n=40$. ஆகவே மூன்றாவது கால்மத்தின் ($Q3$) நிலையானது கீழே கொடுக்கப்பட்டுள்ளவாறு **30** ஆகும்.

$$40 \times \frac{3}{4} = 30$$

$$3\text{வது கால்மம் } (Q3) = \frac{(30\text{வது மதிப்பு}) + (31\text{வது மதிப்பு})}{2}$$

$$= \frac{16 + 16}{2}$$

$$= 16$$

முதல் கால்மத்தைக் கீழ்கண்டவாறு கணக்கிடலாம்.

$$40 \times ¼ = 10$$

$$\text{முதல் கால்மம் } Q1 = \frac{(10\text{வது மதிப்பு}) + (11\text{வது மதிப்பு})}{2}$$

$$= \frac{10 + 11}{2}$$

$$= 10.5$$

குறிப்பு : $P_{10}$ ன் மதிப்பு $Q_1$ன் மதிப்பும் ஒன்றாக இருக்கும் $Q_2$ன் மதிப்பு கணக்கிட்டு $P_{50}$ன் மதிப்புடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

**குறியீட்டெண்கள்**

குறியீட்டெண்கள் என்பது ஒரு புள்ளியியல் கருவியாகும். இவற்றைப் பயன்படுத்தி, காலங்களுக்கிடையே ஏற்படும் மாற்றங்களை அளவிடவும், பொருளியல் புள்ளி விரங்களுக்கு விளக்கம் அளிக்கவும் முடிகிறது. குறியீட்டெண்கள், மதிப்பினை சதவீதத்தில் குறிப்பிடும் ஒரு ஒற்றை விகிதமே ஆகும். இவை, சம்பந்தப்பட்ட பல

கூட்டான, பல மாறிகளின் ஒட்டுமொத்த மாற்றத்தை சுருக்கமாக கூறுகிறது. நுகர்வோர் விலை (*Consumer Price Index)* குறீயீட்டெண் அல்லது வாழ்க்கைச் செலவு குறியீட்டெண் (*Cost of Living Index)* குறியீட்டெண்களுள் பிரபலமான தொன்றாகும். இவை நுகர்வோர் செலுத்தும் சில்லறை விலையில் ஏற்படும் மாற்றங்களை அளவிடுகின்றன.

நீண்ட காலமாகவே, பொருளியலறிஞர்கள் விலை மற்றும் அளவுக் குறியீட்டெண்களை அமைத்து வந்துள்ளனர். குறியீட்டெண்களில் கவனத்தைத் திருப்பும் அலுகுகள் இல்லை. அவை நேர்மையான அளவைகள் மட்டுமன்றி அதை கணக்கிடுதலும் எளிமையானது. எடுத்துக்காட்டாக சிமெண்ட் உற்பத்தி இரண்டாம் ஆண்டில் 125 என்று மட்டுமே குறிப்பிடப்பட்டதே அன்றி 125 மில்லியன் மெட்ரிக் டன் என்று அலல.

**குறியீட்டெண்களின் வகைகள்**

பொருளாதார மாறிகளில் ஏற்படும் மாற்றங்களை அளவிட மேலும் அவற்றின் விளக்கங்கள், பணவீக்கத்தின் விளைவுகளை பொருளியல் நடவடிக்கையின் உண்மை நிலையினின்று வேறுபடுத்த வேண்டும். எந்த ஒரு குறிப்பிட்ட மாற்றங்களை இது அளவிடுகிறதோ அதனடிப்படையில் குறியீட்டெண்கள் வகைப்படுத்தப்படுகின்றன. கீழ்காணும் ஏதேனுமொன்றின் அளவீடாக இது இருக்கக்கூடும்.

விலை – ஒரு மெட்ரிக் டன் சிமென்டின் அங்காடி விலை அல்லது ஒரு சதுர மீட்டர் துணியின் அங்காடி விலை.

அளவு – மில்லியன் மெட்ரிக் டன் சிமெண்ட் அல்லது சதுர மீட்டர் துணி.

மதிப்பு – ஒரு மெட்ரிக் டன் சிமென்டின் அங்காடி மதிப்பு அல்லது ஒரு சதுர மீட்டர் துணியின் அங்காடி மதிப்பு.

இதன் அடிப்படையில் குறியீட்டெண்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்படுகின்றன; அவை

1. விலைக் குறியீட்டெண்கள் (*Price Index Numbers)*
2. அளவுக் குறியீட்டெண்கள் *(Quantity index Numbers)*
3. மதிப்புக் குறியீட்டெண்கள் *(Value Index Numbers)* ஆகும்.

விலை, அளவு மற்றும் மதிப்பு ஆகிய மூன்றும் ஒன்றோடொன்று தொடர்புடையன மற்றும் அத்தொடர்பு மிகவும் எளிமையானது. அளவினை விலையால் பெருக்கினால் அது மதிப்பின் சமன்பாடாகும். அதாவது விலை X அளவு = மதிப்பு

## குறியீட்டெண்களின் பயன்கள்

குறியீட்டெண்கள் 'சிறப்பான சுட்டிக்காட்டி'யாக இருப்பதால் அது பல நடைமுறைப் பயன்பாடுடையதாகும். கீழ்காணும் வகைகளில் அவை பயனுடையவையாகும்.

1. பொருளாதார மாறியையும், தொழிலின் போக்கினைப் பற்றியும் கண்டறிய இவை பயன்படுகின்றன.

2. பொருளாதார மற்றும் வாணிபக் கொள்கைகளை எளிதில் அமைப்பதற்கு குறியீட்டெண்கள் பெரிதும் உதவுகின்றன.

3. பணத்தின் வாங்கும் சக்தியை அளவிடவும், பணத்தின் உண்மை மதிப்பைக் கணக்கிடவும் இவற்றைப்பயன்படுத்தலாம்.

4. பணவீக்கத்தின் அளவீடு மற்றும் வாழ்க்கைச் செலவின் கணக்கீடு ஆகிய குறியீட்டெண்கள் மக்களின் வாழ்க்கைத் தரத்தில் ஏற்படும் மாற்றங்களை கணிக்கப் பயன்படுகின்றன.

5. இவை விலை நிலவரத்தையும், அதன் போக்கினையும், உற்பத்தி, பணவீக்கம், வர்த்தகம் போன்ற பல பொருளாதார மாறிகளில் ஏற்படும் மாற்றங்களை அளவிடுவதால் இவை பொருளாதார பாரமாணி (*Economic Barometer)*என அழைக்கப்படுகின்றன.

## குறியீட்டெண்களை அமைக்கும் முறைகள்
## (Methods of Constructing Index Numbers)

குறியீட்டெண்கள் அமைக்கும் பல்வேறு முறைகளையும் இரண்டு முக்கியப் பிரிவுகளாக வகைப்படுத்தலாம்.

1. நிறையிடாக் குறியீட்டெண்கள் (*unweighted Index Numbers)*

2. நிறையிட்டக் குறியீட்டெண்கள் (*weighted Index Numbers)*

**நிறையிடாக் குறியீட்டெண்கள்**

குறியீட்டெண்களை அமைப்பதில் இதுவே எளிதான முறையாகும். இந்த முறையில் குறியீட்டெண் அடிப்படை ஆண்டின் கூடுதல் விலைக்கு $(P_o)$ நடப்பு ஆண்டில் நிலவும் கூடுதல் விலையின் சதவீதமாக குறிப்பிடப்படுகிறது. அடிப்படை ஆண்டு பொதுவாக முதல் ஆண்டாக வைத்து, நடப்பு ஆண்டானது எந்த ஆண்டிற்கு குறியீட்டெண்ணைக் கணக்கிட வேண்டுமோ அந்த ஆண்டைக் குறிக்கும். நடப்பு ஆண்டில் $P_t$யை அடிப்படை ஆண்டின் $P_o$வால் வகுத்தால் குறியீட்டெண் கிடைக்கும்.

$$Po1 = \frac{\Sigma P_t}{\Sigma P_o} X\, 100$$

$\Sigma pt =$ நடப்பு ஆண்டின் விலைகளின் கூடுதல்

$\Sigma po =$ அடிப்படை ஆண்டின் விலைகளின் கூடுதல்

இக்குறியீட்டெண் அமைப்பது மிகவும் எளிதானது, இது கீழ்க்காணும் அட்டவணை மூலம் விளக்கப்பட்டுள்ளது.

**அட்டவணை**

| பண்டங்கள் | விலை ரூபாயில் | |
|---|---|---|
| | 2000 ஆண்டு | 2005 ஆண்டு |
| அரிசி | 15 | 20 |
| வெங்காயம் | 10 | 16 |

2005-ம் ஆண்டின் குறியீட்டெண்ணை அமைக்க, 2000த்தை அடிப்படை ஆண்டாக வைத்து, அட்டவணையில் குறிப்பிடப்பட்ட புள்ளி விவரங்களின் கூடுதல் விலையை கொண்டு (*Aggregate Price)* கணக்கிடப்படுகிறது.

| பண்டங்கள் | விலை ரூபாயில் | |
|---|---|---|
| | 2000 அடிப்படை ஆண்டு (Po) | 2000 நடப்பு ஆண்டு (Pt) |
| அரிசி | *15* | *20* |
| வெங்காயம் | *10* | *16* |
| | $\Sigma po = 25$ | $\Sigma pt = 36$ |

$$P_{01} = \frac{\Sigma p_t}{\Sigma p_o} x\ 100$$

$$= 36/25 \times 100$$

$$= \mathbf{144}$$

**நிறையிட்ட குறியீட்டெண்கள்**

**(Weighted Index Numbers)**

மக்களால் நுகரப்படும் அரிசியின் அளவானது நிச்சயமாக வெங்காயத்தின் அளவைவிட கூடுதலாகவே இருக்கும். நிறையிடாக் குறியீட்டெண்கள் இத்தகைய பண்டங்களுக் கிடையேயான அளவுகளின் தொடர்புடைய மாற்றங்களை கணக்கிடுவதில்லை. அதிகப்படியான பண்டங்களின் குறியீட்டெண்களை கணக்கிடும்போது, அவைகளின் தொடர்புடைய மாற்றங்களை கருத்தில்கொண்டு அவற்றிற்கு பொருத்தமான நிறையை அளிக்கவேண்டும். நிறைகளை கொடுக்கும்போது அந்நிறையானது வெவ்வேறு பொருளின் முக்கியத்துவத்தையும் பிரதிபலிக்க வேண்டும்.

நிறையிட்ட குறியீட்டெண்களை மூன்று வகைகளில் கணக்கிடலாம்

இம்மூன்று முறைகளும் அவற்றை கண்டுப்பிடித்த பொருளியல் அறிஞர்களின் பெயர்களையே தாங்கியுள்ளன. அப்பொருளியல் அறிஞர்களின் பெயர்கள் பின்வருமாறு

*1. Hermann Paasche*

*2. Etienne Laspeyres*

*3. Irving Fisher*

இவர்களின் குறிட்டெண்கள் முறையே

*1. Paasche Index*

*2. Laspeyres Index*

*3. Fisher Index* என பெயரிடப்பட்டன.

*1. Paasche* குறியீட்டெண் = $$\mathbf{P_P} = \frac{\Sigma p_t q_t}{\Sigma p_0 q_t}$$

*2. Laspeyres* குறியீட்டெண் = $$\mathbf{P_L} = \frac{\Sigma p_t q_0}{\Sigma p_0 q_0}$$

*3. Fishers* குறியீட்டெண் = $$\mathbf{P_F} = \sqrt{\mathbf{P_P}\ \mathbf{P_L}}$$

$P$ என்பது விலை மட்டத்தின் மாற்றம் (அ) குறியீட்டெண்.

$P_o$ = அடிப்படை ஆண்டின் விலை

$q_o$ = அடிப்படை ஆண்டின் பண்டங்களின் அளவு

$p_t$ = நடப்பு ஆண்டில் ($t$) விலை

$q_t$ = நடப்பு ஆண்டின் ($t$) பண்டங்களின் அளவு

*Paasche* குறியீட்டெண் முறையில் நடப்பு ஆண்டின் அளவையே நிறையாக பயன்படுத்தப்படுகிறது. *Laspeyers* குறியீட்டெண் முறையில் அடிப்படை ஆண்டின் அளவே நிறையாக பயன்படுத்தப்படுகிறது. மூன்றாவது முறையான *Fisher* முறையில் குறியீட்டெண்ணை $P_p$ மற்றும் $P_L$ ஆகியவற்றின் பெருக்கல் சராசரியாக – நடப்பு மற்றும் அடிப்படை ஆண்டுகளின் சராசரி நிறையாகக் கொள்ளப்படுகிறது.

எடுத்துக்காட்டு 1 : கீழ்காணும் விவரங்களுக்கு நிறையிட்ட குறியீட்டெண்களை *Paasche's, Laspeyre's* மற்றும் *Fisher* முறைகளில் கணக்கிடுக.

| பண்டங்கள் | விலை | | நுகர்வின் அளவு | |
|---|---|---|---|---|
| | **2000** | **2005** | **2000** | **2005** |
| அரிசி | *15* | *20* | *10* | *12* |
| வெங்காயம் | *10* | *16* | *2* | *3* |

நிறையிடா குறியீட்டெண்ணை விளக்கவும் இதே விவரங்கள்தான் அளிக்கப்பட்டுள்ளன. ஆனால் நிறையிட்ட குறியீட்டெண்ணை கணக்கிட அரிசி மற்றும் வெங்காய நுகர்வின் அளவினையும் அட்டவணையில் சேர்த்து கொடுக்கப்பட்டுள்ளது.நிறையிட்ட குறியீட்டெண்களை கணக்கிடுவதற்கான மூன்று வாய்ப்பாடுகளும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

*Paasche* குறியீட்டெண் $$\mathbf{P_P} = \frac{\Sigma p_t q_t}{\Sigma p_0 q_t}$$

*Laspeyres* குறியீட்டெண் $$\mathbf{P_L} = \frac{\Sigma p_t q_0}{\Sigma p_0 q_0}$$

*Fishers* குறியீட்டெண் $$\mathbf{P_F} = \sqrt{\mathbf{P_P}\ \mathbf{P_L}}$$

| பண்டங்கள் | விலை (P) | | நுகர்வு அளவு (Q) | | $P_tq_t$ | $P_oq_t$ | $P_tq_o$ | $P_oq_o$ |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 2000 $P_o$ | 2005 $P_t$ | 2000 $q_o$ | 2000 $q_t$ | | | | |
| அரிசி | *15* | *20* | *10* | *12* | *240* | *180* | *300* | *150* |
| வெங்காயம் | *10* | *16* | *2* | *3* | *48* | *30* | *32* | *20* |
| | | | | | $\Sigma p_tq_t$ *288* | $\Sigma p_oq_t$ *210* | $\Sigma p_tq_o$ *332* | $\Sigma p_oq_o$ *170* |

இவற்றை சதவீதமாக குறிப்பிட, அனைத்து முடிவெண்களையும் 100 ஆல் பெருக்கவேண்டும்.

*Paasche* குறியீட்டெண் $\mathbf{P_P} = \dfrac{\Sigma p_t q_t}{\Sigma p_0 q_t}$ **x 100**

$$\mathbf{P_{01}} = \frac{288}{210} \ \mathbf{x\ 100}$$

$$= \mathbf{137.14}$$

*Laspeyres* குறியீட்டெண் *PL*

$$\mathbf{P_{01}} = \frac{\Sigma p_t q_0}{\Sigma p_0 q_0} \ \mathbf{x\ 100}$$

$$\mathbf{P_{01}} = \frac{332}{170} \ \mathbf{x\ 100}$$

$$= \mathbf{195.29}$$

*Fishers* குறியீட்டெண் = $P_F$

$$\mathbf{P_F} = \sqrt{\mathbf{P_P\ P_L}}$$

$$\mathbf{P_F} = \sqrt{\frac{\Sigma p_t q_t}{\Sigma p_0 q_t} \ \mathbf{x} \ \frac{\Sigma p_t q_0}{\Sigma p_0 q_0}} \ \mathbf{x\ 100}$$

$$\mathbf{P_F} = \sqrt{\frac{\mathbf{288}}{\mathbf{210}} \ \mathbf{x} \ \frac{\mathbf{332}}{\mathbf{170}}} \ \mathbf{x\ 100}$$

$$= \sqrt{\mathbf{1.3714 \ \ x \ \ 1.9529}} \ \mathbf{x\ 100}$$

$$= \sqrt{\mathbf{2.6782}} \ \mathbf{x\ 100}$$

= **16365 x 100 = 163.5**

*Fisher's* குறியீட்டெண், மற்ற இரண்டு முறைகளின் இசைந்த சராசரியாகும் (*Harmonic mean).* எனவே முதல் இரண்டு முறைகளில் கிடைத்த விடைகளை பெருக்கிய பின்பு அதன் வர்க்க மூலத்தை கண்டு பிடிக்கவேண்டும்.

$$= \sqrt{137.14 \times 195.29}$$

$$= 163.65$$

## காலம்சார் தொடர்வரிசை

## பொருள்

காலம்சார் தொடர்வரிசை என்பது தொடர்ந்துவரும் காலங்களில் கணக்கிடப்படும் புள்ளிவிவரங்கள் ஆகும். "*சாதரணமாக இது ஒரு குறிப்பிட்ட கால அளவில் சேகரிக்கப்பட்ட எண்ணுருக்களைக் குறிப்பதாகும்*" ஆண்டு மொத்த உள்நாட்டு உற்பத்தி, மாத மொத்த விலைக் குறியீட்டு அளவு, வாராந்திர பங்கு விலைகள் மற்றும் தினசரி தட்ப வெப்ப நிலை போன்றவை காலம்சார் தொடர்வரிசை புள்ளி விவரங்களுக்கான எடுத்துக்காட்டுகள் ஆகும்.

காலம்சார் தொடர்வரிசை பகுப்பாய்வு என்பது, ஒரு குறிப்பிட்ட கால அளவில் பொருளாதார மாறிகள் எவ்விதம் மாறுபடுகின்றன அல்லது வேறு மாறிகளோடு தொடர்புடைய வகையில் மாறுபடுகின்றன என்பதை ஆராய்வதற்கு பயன்படுகின்றன. கடந்த கால நிகழ்வுகளோடு எதிர்கால நிகழ்வுகளை கணிப்பதற்கும் இது மிகவும் பயன்படுகின்றது. இவ்வாறு, காலம்சார் தொடர் வரிசையின் இருபெரும் பயன்களாவன (1) தொடர் உற்று நோக்குதலின் மூலம் பொருளாதார மாறிகளின் இயல்பினை அடையாளம் காணுதல் (2) கடந்த கால நிகழ்வுகளோடு கணக்கிட்டு எதிர்கால தொடர்வரிசையின் மதிப்புகளைக் கண்டறிதல் ஆகும்.

காலம்சார் தொடர்வரிசை கொடுக்கப்பட்ட தொடர் புள்ளி விவரங்கள் அல்லது மாறிகளின் தன்மையையும், வகைகளையும் கண்டறிவதாகும். இதன்

இயல்புகளையும், தன்மையையும் ஆராய்ந்தபிறகு இதனைப் பகுத்தாய்தல் செய்ய இயலும். அடையாளம் காணப்பட்டவைகளை ஊகித்தறிந்து எதிர்கால கழ்வுகளை அறியமுடியும்.

**காலம்சார் தொடர்வரிசையின் வகைகள் :**

காலம்சார் தொடர்வரிசைகளை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்.

1) போக்கு வகை

*(Trend component)*

2) சுழற்சி வகை

*(Cyclical component)*

3) பருவகால வகை

*(Seasonal component)*

4) தொடர்ச்சியற்ற வகை

*(Irregular component)*

போக்குவகை என்பது காலம்சார் தொடர்வரிசையின் நீண்டகால இயக்கத்தைக் குறிப்பதாகும். இது பொதுவாக் குறிப்பிட்ட கால அளவில் முறையான நேர்கோட்டில் *(Linear)* அல்லது நேர்கோட்டில்லாத மாற்றத்தை மீண்டும் நிகழாவண்ணம் குறிப்பதாகும்.

சுழற்சிவகை காலம்சார் தொடர்வரிசை போக்குவகைப் போன்ற இயல்பினை உடையதாகும். ஆனால், இது தனக்குத்தானே குறிப்பிட்ட கால அளவில் நிகழும்வண்ணம் ஏற்படுவதாகும்.

பருவகாலவகை காலம்சார் தொடர்வரிசை என்பது ஒரு ஆண்டின் பருவகால மாற்றத்தினால் ஏற்படும் இயக்கத்தைக் குறிப்பதாகும்.

தொடர்ச்சியற்ற வகை, காலம்சார் தொடர்வரிசை மாற்றம் என்பது எந்த ஒரு முறையின் மூலம் கணிக்க இயலாததைக் குறிப்பதாகும். இவை கொடுக்கப்பட்ட ஒரு மாறியில் ஏற்படும் மாற்றங்களினாலோ (அ) முறையற்ற ஏற்றத்தாழ்வுகளினாலோ உண்டாவதைக் குறிப்பதாகும்.

# பயிற்சி

## பகுதி – அ

**I. சரியான விடையைத் தேர்ந்தெடுக்கவும் :**

1. சராசரி நம்பகத்தன்மையுடையதாய் இருப்பதற்கு புள்ளி விவரங்கள்

அ. தொடர்ச்சியற்றதாக இருக்கவேண்டும்

ஆ. ஒத்த தன்மையுடையதாக இருக்க வேண்டும்

இ. பலபடித் தன்மையுடையதாக இருக்க வேண்டும்

ஈ. பகுக்கப்படாத புள்ளி விவரங்கள்

2. வீச்சு என்பது

அ. முதலாவது மதிப்பிற்கும் கடைசி மதிப்பிற்கும் உள்ள வேறுபாடு

ஆ. நடு மதிப்பு

இ. மிகப்பெரிய மதிப்பிற்கும் மிகச்சிறிய மதிப்பிற்கும் உள்ள வேறுபாடு

ஈ. மிகச்சிறிய மதிப்பு

3. மிக அதிக நிலைத்தன்மையுடைய மாறுபாட்டு அளவை

அ. பரவற்படி ஆ. சராசரி

இ. இடைநிலை அளவு ஈ. முகடு

4. ஒரு நிலையை அளவிட பொதுவாக பயன்படுத்தப்படுவது

அ. நூற்றுமங்கள் ஆ. பதிமங்கள்

இ. திட்ட விலக்கம் ஈ. கால்ம விலக்கம்

5. காலங்களுக்கிடையே ஏற்படும் மாற்றங்களை அளவிடும் புள்ளியியல் கருவி

அ. சராசரிகள் ஆ. குறியீட்டெண்கள்

இ. விலக்கங்கள் ஈ. பரவற்படி

**II. கோடிட்ட இடங்களை பூர்த்தி செய்க.**

6. ............. என்பது சராசரியிலிருந்து உறுப்புகளின் மதிப்பு எவ்வளவு விலகியிருக்கிறது என்பதை குறிக்கும்.

7. பரவல் அளவைகளில் மிக எளிதானது ........... ஆகும்.

8. சராசரி விலக்கத்தின் வாய்பாடு .......... ஆகும்.

9. திட்ட விலக்கம் என்பது ...........லிருந்து பெறப்படுகிறது.

10. கால்ம விலக்கம் ....... என்றும் அழைக்கப்படும்.

## III. பொருத்துக.

| | | | |
|---|---|---|---|
| 11. | பரவற்படி | அ. | திட்ட விலக்கம் |
| 12. | $\frac{\Sigma (x - x)^2}{n}$ | ஆ. | $P_p = \frac{\Sigma p_t q_t}{\Sigma P_o q_t}$ |
| 13. | கால்மவிலக்கம் | இ. | $P_F = \sqrt{P_P P_L}$ |
| 14. | *Fisher's* குறியீட்டெண் | ஈ. | $\frac{Q3 - Q1}{2}$ |
| 15 | *Paasche* குறியீட்டெண் | உ | $\frac{\Sigma (x - \bar{x})^2}{n}$ |

## IV. ஓரிரு வார்த்தைகளில் விடைதருக.

16. மிகப்பெரிய மதிப்பிற்கும் மிகச் சிறிய மதிப்பிற்கும் இடையே வேறுபாடு என்பது குறிக்கும்?

17. பரவற்படியிலிருந்து பெறப்படுவது எது?

18. பிரபலமான குறியீட்டெண் யாது?

19. சிறப்பான சுட்டிக்காட்டியாக இருப்பது எது?

20. மூன்று குறியீட்டெண்களையும் தொடர்புபடுத்தும் சமன்பாடு யாது?

### பகுதி – ஆ

## V. பின்வரும் வினாக்களுக்கு நான்கு அல்லது ஐந்து வரிகளில் விடைதருக.

21. பரவல் அளவைகளை அளவிடும் முறைகள் யாவை?

22. சராசரி விலக்கம் என்பது என்ன?

23. பரவற்படி என்றால் என்ன?

24. மூன்று முக்கிய குறியீட்டெண்களின் பெயர்களைக் கூறவும்.

25. நிறையிட்ட குறியீட்டெண்களை கணக்கிடும் மூன்று முக்கிய முறைகள் யாவை?

## பகுதி – இ

**VI. பின்வரும் வினாக்களுக்கு ஒரு பக்க அளவில் விடைதருக.**

26. சராசரி விலக்கத்தை விவரி.

27. திட்ட விலக்கம் என்றால் என்ன? அதை விவரி.

28. கால்ம விலக்கம் என்றால் என்ன? விவரி.

29. குறியீட்டெண் என்றால் என்ன? அதன் வகைகளை விவரி?

30. குறியீட்டெண்களின் பயன்களை விவரி?

31. நிறையிட்ட குறியீட்டெண்களை அமைக்கும் முறையை விளக்குக.

## பகுதி – ஈ

**VII. பின்வரும் வினாக்களுக்கு மூன்று பக்க அளவில் விடைதருக.**

32. பரவல் அளவைகளை அளவிடும் முறைகளை விவரி.

33. கீழ்காணும் புள்ளி விவரங்களை கொண்டு *P10, P25, Q2, Q3* ஆகியவற்றை கணக்கிடுக.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 16 | 11 | 9 | 10 | 10 | 14 | 18 | 11 |
| 7 | 15 | 19 | 13 | 7 | 13 | 14 | 9 |
| 18 | 12 | 17 | 15 | 16 | 16 | 10 | 12 |
| 9 | 13 | 12 | 11 | 17 | 10 | 15 | 16 |
| 19 | 13 | 11 | 14 | 8 | 12 | 16 | 14 |

34. குறியீட்டெண் என்றால் என்ன அவற்றின் வகைகளையும், பயன்களையும் விவரி.

35. குறியீட்டெண்களை அமைக்கும் முறைகளை விவரி.

36. கீழ்காணும் விவரங்களுக்கு நிறையிட்ட குறியீட்டெண்களை பாசிஸ், லெஸ்பியர்ஸ், மற்றும் பிஷ்ஷர்ஸ். மூன்று முறைகளில் கணக்கிடுக.

| பண்டங்கள் | விலை | | நுகர்வின் அளவு | |
|---|---|---|---|---|
| | **2000** | **2005** | **2000** | **2005** |
| அரிசி | 15 | 20 | 10 | 12 |
| வெங்காயம் | 10 | 16 | 2 | 3 |

# பாடம் – 1 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. அ
2. ஆ
3. இ
4. ஆ
5. ஈ

**II.**

6. பொருட்பாலில்
7. ஏற்றுமதி
8. வேளாண்மை
9. தலையாய
10. *W.W.* ரோஸ்டோ

**III.**

11. ஜெர்மனி
12. காரல் மார்க்ஸ்
13. அமெரிக்க ஐக்கிய நாடுகள்
14. வளர்ச்சிக் குறைந்த நாடுகள்
15. மதிப்புக்கோட்பாடு

**IV.**

16. கிரேக்கர்களின் சிந்தனை
17. ஏற்றுமதி
18. குஸ்நே
19. பகிர்வு
20. **20 முதல் 25 விழுக்காடுகள்**

# பாடம் – 2 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. இ
2. ஈ
3. ஆ
4. ஈ
5. இ

**II.**

6. 267
7. செழுமை
8. T.R. மால்தஸ்
9. எழுத்தளிவு நிலை
10. இரண்டாவது

**III.**

11. 1872
12. பஞ்சம்
13. 1000 பேருக்கு இறப்பவர் எத்தனை
14. 2000
15. குடும்ப அளவைக் கட்டுப்படுத்துதல்

**IV.**

16. உத்தமக் கோட்பாடு
17. இயல்புரை தடை (Positive)
18. மால்தசின் மக்கள் தொகைக் கோட்பாடு
19. காலம் தாழ்த்தி திருமணம் செய்து கொள்ளல்
20. விரைவான மக்கள் தொகை வளர்ச்சி

# பாடம் – 3 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. அ
2. அ
3. இ
4. இ
5. இ

**II.**

6. இரண்டு
7. அமைப்பு ரீதியான
8. வேலை வாய்ப்பைச் சார்ந்து
9. வேலைச்சார்பு (*sub-employment)*
10. மறைமுக வேலையின்மை

**III.**

11. 1993
12. குறைவான உற்பத்தித் திறன் வேலை வாய்ப்பு
13. ஏப்ரல் 1999
14. பொறியியல்
15. கிராமப்புற வேலைத்திட்டம்

**IV.**

16. ஏழ்மையைக் குறைத்தல்
17. ரூ.49.1/– தனிநபர் மாதச் செலவு
18. மக்கள் தொகை அழுத்தம்
19. தரமான கல்வி
20. இரண்டு கோடிக்கு மேல்

# பாடம் – 4 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. ஆ
2. அ
3. அ
4. ஈ
5. ஆ

**II.**

6. உற்பத்தி முறை
7. கழிக்க
8. 1993-94
9. தொழில்ரீதியான
10. இருமுறைக் கணக்கீடு

**III.**

11. அயல்நாட்டு வாணிபம் நீக்கப்பட்டது
12. X-M
13. நிகர நாட்டு வருமானம் (NNP)
14. 1993-94
15. தனிவருமானம் – தனிவரிகள்

**IV.**

16. தலா வருமானம்
17. வருமான முறை
18. மூன்று
19. அயல்நாட்டு வாணிபம்
20. மொத்த உள்நாட்டு உற்பத்தி / மொத்த மக்கள்தொகை

# பாடம் – 5 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. இ
2. ஆ
3. இ
4. ஆ
5. அ

**II.**

6. மையத்
7. வாணிபச் சுழல்
8. மகலநோபிஸ்
9. 1928
10. சமத்துவம்

**III.**

11. தலையிடாக் கொள்கை.
12. இந்திய ஐந்தாண்டுத் திட்டங்கள்.
13. விரைவான தொழில் மயமாதல்.
14. வறுமையை ஒழிப்போம்.
15. சமத்துவம் மற்றும் சமூக நீதி.

**IV.**

16. ஜவஹர்லால் நேரு
17. தலையிடாக் கொள்கை
18. திட்டக் குழு
19. 2002–2007
20. இராஜ்கிருஷ்ணா

# பாடம் – 6 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. அ
2. இ
3. ஈ
4. அ
5. ஆ

**II.**

6. வேளாண்மை
7. கச்சாப் பொருள்கள்
8. பயிர் வகை முறை
9. நில உடைமை
10. வேளாண் விளை பொருள் சந்தை

**III.**

11. கூட்டுக் குடும்ப முறை வீழ்ச்சி
12. பசுமைப் புரட்சி
13. ஆங்கிலேயர் ஆட்சி காலத்தில்
14. வேளாண்மை
15. புதிய வேளாண்மை விளைபொருள் விலைக் கொள்கை

**IV.**

16. நிலத்தின் உற்பத்தித் திறன்
17. உழைப்பின் உற்பத்தித் திறன்
18. ஆம்
19. காலநிலை
20. ஆம்

# பாடம் – 7 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. ஈ
2. ஈ
3. இ
4. இ
5. இ

**II.**

6. நெசவுத் தொழில்
7. இரண்டாம் ஐந்தாண்டுத்திட்டம்
8. தாரளமயமாக்குதல்
9. தனியார் மயமாக்குதல்
10. தொழில் மயமாக்குதல்

**III.**

11. தனியார் மயமாக்குதல்
12. மரபுத் தொழில்கள்
13. 1991 தொழில்கொள்கை
14. தொழிற்செறிவு
15. இடைநிலைப் பண்டங்கள்

**IV.**

16. இந்தியா
17. இரும்பு எஃகுத் தொழில்
18. ஆம்
19. தாராளமயமாக்குதல், தனியார்மயமாக்குதல் உலகமயமாக்குதல் *(LPG)*
20. தொழில்மயமாக்குதல்

# பாடம் – 8 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. ஆ
2. அ
3. ஈ
4. அ
5. இ

**II.**

6. ஏற்றுமதி/இறக்குமதி
7. ரொக்க இருப்பு வீதம் *(CRR)*
8. வேளாண்மை
9. 1935
10. புழக்கப் பணம்

**III.**

11. இந்திய ரிசர்வ் வங்கி
12. 3 முதல் 15 சதவீதம் வரை
13. சட்டப்பூர்வ குறைந்தபட்ச வட்டிவீதம்
14. வணிகர்களுக்கு வழங்கப்பட்டுள்ள வசதி
15. வணிக வங்கிகள்

**IV.**

16. இம்பீரியல் வங்கி
17. வணிகர் சமுதாயம்
18. இந்திய ரிசர்வ் வங்கி
19. இந்திய ரிசர்வ் வங்கி
20. இல்லை

# பாடம் – 9 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. ஈ
2. அ
3. ஆ
4. இ
5. ஈ

**II.**

6. அங்காடியை விரிவடையச் செய்தல்
7. புதிய தாராளமயமாக்குதல்
8. பணம்
9. அயல்நாட்டு வாணிபம்
10. ஆளுநர் குழு

**III.**

11. ஈரான், ஈராக், குவைத்
12. வாஷிங்டன்
13. 1993
14. 2000 வருடம்
15. ஜெனிவா

**IV.**

16. காபி, தேயிலை, சணல், இரும்பு தாது, வாசனைப் பொருட்கள், பருத்தி மீன்
17. அயல்நாட்டு வாணிப செலுத்து சமநிலை
18. 1983
19. பன்முக முதலீட்டு உறுதித்திட்ட முகமை (*MIGA)*
20. அடிப்படை மாற்றத்தை சரிசெய்யும் உதவி

# பாடம் – 10 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. ஈ
2. இ
3. ஈ
4. ஈ
5. அ

**II.**

6. நிலை
7. கல்வி
8. பொருளாதார
9. தொடக்க கல்வி
10. குழந்தை

**III.**

11. கல்வியில் அதிக வளர்ச்சியடைந்த மாநிலம்
12. அருகில் பள்ளி இருப்பது
13. பாலின வேறுபாட்டை குறைத்தல்
14. தொழில்நுட்ப கல்வியின் ஆதிக்கம்
15. சிறப்பு பள்ளி சுகாதாரத் திட்டம்

**IV.**

16. 1960
17. குறைவு
18. ஆம்
19. ஆம்
20. 1986

# பாடம் – 11 விடைகள்

## பகுதி – அ

**I.**

1. இ
2. அ
3. ஆ
4. ஆ
5. இ

**II.**

6. முதல் நிலைப் புள்ளி
7. நிகழ்வெண்
8. பிரிவு இடைவெளி
9. அட்டவணை
10. முகடு

**III.**

11. Size of (N+1/2)வது உறுப்பு
12. 3 இடைநிலை – 2 சராசரி
13. உற்று நோக்குதல்
14. மைய மதிப்பு
15. $\frac{\Sigma Wx}{\Sigma N}$

**IV.**

16. ஆதாரங்கள்
17. $\frac{\Sigma fx}{N}$ (அ) $\frac{\Sigma x}{N}$
18. $L + \left(\frac{\frac{N}{2} - cf}{f}\right) \times C$
19. வகைப்படுத்துதல்
20. தனிப்பட்டை விளக்கப்படம்

# பாடம் – 12 விடைகள்

## பகுதி–அ

**I.**

1. ஆ
2. இ
3. அ
4. ஈ
5. ஆ

**II.**

6. பரவல் அளவை
7. வீச்சு
8. $\frac{\Sigma|x - \bar{x}|}{n}$
9. பரவற்படி
10. அரை – இடைகால்ம வீச்சு

**III.**

11. $\frac{\Sigma (x - \bar{x})^2}{n}$
12. திட்ட விலக்கம்
13. $\frac{Q3 - Q1}{2}$
14. $P_F = \sqrt{P_P x P_L}$
15. $Pp = \frac{\Sigma p_t q_t}{\Sigma p_o q_t}$

**IV.**

16. வீச்சு
17. திட்ட விலக்கம்
18. வாழ்க்கைச் செலவு குறியீட்டெண் / நுகர்வோர் விலை குறியீட்டெண்
19. குறியீட்டெண்
20. விலை $X$ அளவு = மதிப்பு